தெட்ட=தெளிந்த.

"மால்கரி தெட்ட மதப்பசை" (கம்ப. சரபங். 8).

தெள்—தெடு. திண்ணமில்லாத கஞ்சியைத் தெடு தெடுவென்றிருக்கின்ற தென்பர்.

தெள்—தெரி—தேர்—தேறு=தெளிவு. தேறுதல்= தெளிதல்.

தேறு=நீரைத் தெளிவிக்கும் தேற்றாங்கொட்டை.

"தேறுபடு சின்னீர் போல" (மணி. 23, 142).

தேறு—தேற்று=தெளிவு, தெளிவிக்கை, தேற்றாங் கொட்டை (பிங்).

"தேற்றின் வித்திற் கலங்குநீர் தெளிவதென்ன"
(ஞானவா, மாமவியா. 3)

தேற்று—தேற்றா (தேற்றாங்கொட்டை, அக்கொட்டை மரம்).

" தேற்றாவினுடைய விதையைக்கொண்டு கலத்தே மெல்லத் தேற்றக்
கலங்கிய நீரிற் சிதைவு தெளியுமாறுபோல"
(கலித். 142, உரை).

## xiii. கள் தெளிவு

கள்ளும் தேனும் பொதுவாக அரித்தும் வடிகட்டியும் தெளிவானதாக எடுக்கப்பெறுவதால், தெளிவு என்னும் சொல் அவ்விரண்டையும் ஆகுபெயராய் உணர்த்திற்று.

இனிமையும் வெறிவிளைப்பும் கள்ளுக்குந் தேனுக்கும் பொதுவியல்பாதலால், கள் தேன் மது மட்டு முதலிய பெயர்கள் அவ்விரண்டையும் பொதுப்படக் குறிக்கும்.

இயற்கைக் கள்ளும் செயற்கைக் கள்ளும் எனக் கள் இருவகைப்படும்.

துல்—(தெல்)—தென்=(தெளிவு, கள்) இனிமை.

"தென்னிசை பாடும் பாணன்" (திருவாலவா. 56, 7).

தென்—தேன்=தெளிவு, கள், மது. தேன்—தேம்—தீம்—தீவு=இனிமை. தேன்—தேனி. தேனித்தல்= இனித்தல். தீவிய=இனிமையான. தீம்—(தி)—தித்தி.

துள்—தெள்—தெளிவு=பதநீர், கருப்பஞ்சாறு.

தேறு—தேறல்=தெளிந்த கள், தேன்.

## xiv. வெண்மை

ஒளியானது வெண்மையாயிருத்தலால், ஒளியை அல்லது விளக்கத்தைக் குறிக்கும் சொற்களினின்று (அல்லது சொல்லடிகளினின்று) வெண்மையைக் குறிக்குஞ் சொற்கள் பிறந்துள்ளன.

நெருப்பு சிவந்ததென்றும், கடுமையான கதிரவனொளி வெண்மையானதென்றும், பொதுவாகக் கொள்ளப்படும்.

குரு—குருகு=வெண்மை.

துல்—துல்லியம்=வெண்மை.

துள்—தெள்—தெளி. தெளிதல்=வெண்மையாதல்.

புல்—பல்—பால்=வெண்மை.

பால்—வால்=வெண்மை.

முள்—முரு—முருந்து=வெண்மை.

முள்—விள்—விளர். விளர்த்தல்=வெண்மையாதல்.

விள்—வெள்—வெண்மை. வெள்—வெள்ளை. வெள்—வெளு.

## xv. வெளுத்தல்

விள்—விளர். விளர்த்தல் = வெண்மையாதல், வெட்குதல்.

விள்—விடி—விடியல்=கரிய இருள் நீங்கி வெளிய ஒளி தோன்றல்.

விள் — வெள் — வெள்ளென = விடிய. வெள்ளெனக் காட்டி=வெள்ளெங்காட்டி=விடியற்காலை.

வெள்—வெளு. கிழக்கு வெளுத்தல்=விடியுமுன் கீழ்த்திசை வெள்ளையாதல்.

வெளுத்தல்=வெண்ணிறமாதல், வண்ணான் துணிகளை வெள்ளையாக்குதல் அல்லது துப்புரவாக்குதல்.

வெள்=வெள்கு. வெள்குதல்=நாணத்தால் முகம் வெளுத்தல். வெள்கு — வெட்கு — வெட்கம். வெள்—வெளிறு. வெளிறுதல்=சிறிது வெண்ணிறமாதல்.

## xvi. வெண்மையான பொருட்கள்

உல்—எல்—எலும்பு—என்பு.

எல்—எலி=வெள்ளையான எலிவகை. கருப்பை= காரெலி.

சுல்—சுல்லு=வெள்ளி.

துல்—துலம்=பருத்தி. துலம்—துலவம்=பருத்தி.

துல்—தூல்—தூலினி=இலவு (பஞ்சு).

தூல்—தூலை=பருத்தி.

தூல்—தூலம்=இலவு.

தூலம்=தூலகம்=பருத்தி.

துள்—துய்=பஞ்சு. துய்—தூய்—தூசு=பஞ்சு.

துள்—தும்பு—தும்பை=வெண்பூச் செடிவகை.

வெள்ளாடைக்குத் தும்பைப்பூவை எடுத்துக் காட்டுவது உலக வழக்கு.

புல்—பல். பல்—(பன்)—பன்னல்=பருத்தி. பன்—பனுவல்=பருத்தி.

பல்—பால். பால்—வால்—வாலுகம்=வெண்மணல்.

புள்—பள்—பளிங்கு. பள்—பாள்—பாளிதம்=சோறு.

பால்—பாலை=பாலுள்ள மரவகை, அம்மரம் வளரும் நிலம்.

முல்—முல்லை=வெண்பூக்கொடி வகை, அது வளரும் நிலம்.

முல்—மல்—மல்லி—மல்லிகை.

முள்—முரு—முருந்து=மயிலிறகின் அடி, எலும்பு.

முள்—முளரி=வெண்டாமரை. முள்—(முண்டு)—முண்டகம்=வெண்டாமரை.

முள்—விள்—விள=வெண்தோட்டுக்காய் மரவகை. விள—விளம். விள—விளா—விளவு—விளவம். விளா—விளாத்தி. விள—விளர்—விளரி=விளா. விளா=நிணம்.

விளவம்—வில்வம்=விளாவிற்கு இனமான கூவிளம்.

கருவிளம்=மரப்பட்டை கருத்துள்ள விளாவகை.

விள்—வெள்—வெள்ளில்=விளா.

வெள்—வெள்ளம்=வெளுப்பான புதுப்பெருக்கு நீர்.

வெள்—வெள்ளி. வெள்—வெள்ளை.

வெள்—வெளிச்சி=வெண்ணிறக் கொண்டை மீன்.

வெள்—வெளிர்—வெளிறு=விளையாத வெண்மரம், அறிவின்மை.

குறிப்பு:—குருகு என்பது கொக்கை மட்டுங் குறியாது நாரை காரன்னம் முதலிய பற்பல நீர்ப்பறவை வகைகளைக் குறித்தலால், அவற்றைக் குறிக்கும்போது வளைந்த கழுத்துள்ளது என்று பொருள் கொள்ளப்படும். இதன் விளக்கத்தை வளைதலியலிற் காண்க.

## xvii. தூய்மை

அழுக்கெல்லாம் பெரும்பாலும் பிற நிறமாயிருப்பதாலும், அழுக்கற்ற சாயந்தோய்க்காத ஆடை வெண்மையாயிருப்பதாலும், சுவரின் அழுக்கைப் போக்க வெண்சுண்ணம் பூசுவதாலும், வெண்மை தூய்மைக் கடையாளமாம்.

துள் — துய் — துய்ய = தூய. தூய் — தூ — துப்பு—துப்புரவு=தூய்மை.

துய்—தூய்—தூய்மை. தூய்—தூ.

புல் — பல் — பால் — வால். வான்மை = தூய்மை. வாலாமை=தூய்மையின்மை. வாலறிவு=தூய அறிவு.

முல்—முல்லை=கற்பு.

முள்—வெள்—வெள்ளை=தூய்மை, தூய ஆடை, வெண்பா. வெள் - வெளி=வெண்பா.

எக்காரணத்தையிட்டும் வேற்றுத்தளை விரவாது தன்றளைகொண்டே இயலும் தூய்மையுடைய பா வெண்பா (வெள்+பா).

வெள்ளை=களங்கமற்றவன், சூதுவாதில்லாதவன்.

''வெள்ளைக்கில்லை கள்ளச் சிந்தை'' என்றார் ஔவையார்.

வெள்—வெள்ளந்தி=கள்ளங் கவடற்றவன்.

xviii. வெறுமை

தூய்மை யென்பது வேற்றுப் பொருளும் வேற்றுப் பொருளியல்புங் கலவாததாதலின், தூய்மைக் கருத்தில் தனிமைக் கருத்தும் தனிமைக் கருத்தில் வெறுமைக் கருத்தும் தோன்றும்.

தனிக்கருப்பைச் சுத்தக் கருப்பு என்று கூறுதல் காண்க.

வெண்மை = தூய்மை, தனிமை, வெறுமை.

வெள்ளிலை = இலை தவிர வேறு பூ காய் ஒன்றுமில்லாத கொடியிலை, அல்லது உணவின்றியும் வழங்கப்படும் இலை.

வெண்பாட்டம் = மாராயமில்லாது வெறுமையான பாட்டம்.

வெண்ணிலைக் கடன் = ஈடில்லாது வெறுமையாகக் கொடுக்கப்படும் கடன்.

வெள் — வெறு — வெறுமை = தனிமை, ஒன்றுமின்மை. வெறு இலை வெற்றிலை (வெள்ளிலை.)

வெறுஞ்சோறு = கறிவகையில்லாத் தனிச் சோறு.

'மாட்டுத்தாம்பணியில் (தாவணியில்) எங்கு பார்த்தாலும் வெறும் மாடாயிருக்கும்' என்பது போன்ற வழக்கைக் காண்க.

வெறுவாய் = ஒன்றுமில்லாத வாய்.

வெறு — வெறுமம் — வெறுமன். வெறுமனே போய் விட்டான் என்பது, ஒன்றுஞ் சொல்லாது அல்லது செய்யாது போய்விட்டான் என்று பொருள்படுவதை நோக்குக.

வெறு - வெற்று. வெற்றிடம் = ஒன்றுமில்லாத இடம். வெற்று வண்டி = வெறு வண்டி. வெற்றாள் = தனியாள்.

வெறு — வெறி. வெறித்தல் = முகிலும் மழையுமின்றி வானம் வெறுமையாதல்.

வெறி - வெறித்து — வெறிச்சு = வெறுமை.

ஆளிருந்து போய்விட்ட வெற்றிடத்தைக் கண்டு, வெறிச்சென்றிருக்கிறது என்பர்.

xix. வெறுமை

பொருளில்லா வெறுமையே வறுமை.

வெள் — (வெண்கு) — வெங்கு — வெங்கன் = ஒன்றுமில்லாதவன்.

வெள்—வெறு. வெறும்பயல்=ஒன்றுமில்லாத பயல்.

வெறு—வெற்று. வெற்றுக்கட்டை=ஒன்றுமில்லாதவன்.

வெற்றெனத் தொடுத்தல்=(சிறந்த) பொருளின்றிச் சொல்லையடுக்குதல்.

வெறு—வறு—வறுமை=பொருளின்மை.

வறுங் கூவல்=நீரில்லாக் கிணறு.

'ஒருநாளும் போகாதவன் திருநாளுக்குப் போனானாம், திருநாளும் வெறுநாளாய்ப் போனதாம்' என்பது பழமொழி.

வெறுநாள்=(சிறந்த) நிகழ்ச்சியற்ற நாள்.

## XX. வீண்மை

பயனில்லா வெறுமை வீண்மை.

விள்—வீண்.

வெள்—வெட்டி. வெட்டி வேலை=பயனற்ற வேலை, வீண் வேலை.

வெட்டியாள்=வேலை செய்யாத ஆள்.

வெள்—வெறு. வெறும் பேச்சு=பயனற்ற பேச்சு.

வெறு—வறு—வறிது=வீணானது, வீணாக.

## XXi. வெளி

வானவெளி ஒன்றுமற்ற வெற்றிடமாதலால், அல்லது வெற்றிடமாய்த் தோன்றுதலால், அது வெறுமை யுணர்த்துஞ் சொற்களாற் குறிக்கப்பெற்றது.

விள்—விண்=ஆகாயம். விண்—விண்டு=ஆகாயம்.

விள்—(விசு)—விசும்பு.

விள்—வெள்—வெளி=ஆகாயம்.

வெள்ளிடை=வெறுமையான இடம்.

''வறிது நிலைஇய காயமும்'' (புறம் 20)

## XXii. வெளிப்பாடு

வெளிப்பாடாவது ஒன்று இன்னொன்றன் உள்ளிருந்து வெளிவருதல்.

விள்ளுதல் = வெளிவிட்டுச் சொல்லுதல்.

விள் — விளம்பு — விளம்பரம்.

விள் — விடு. விடுதல் = வெளிவருதல், பிஞ்சு விடுதல். இந்த மரம் பிஞ்சு விட்டிருக்கிறது என்பது வழக்கு.

விடுத்தல் = வெளிப்படக் கூறுதல்.

விடு — (விடி) — (விடிச்சி) — விரிச்சி = தெய்வத்தால் விளம்பப்படுவதாகக் கருதப்பெறும் நள்ளிரா நற்சொல்.

பாக்கத்து விரிச்சி = படைமறவர் சென்று தங்கிய பக்கத்து ஓர்ந்து கேட்கும் விரிச்சி.

விடு—விடை. விடைத்தல் = வெளிப்படுத்துதல்.

விள் — வெள் — வெளி — வெளிச்சி = காதிற் புறப்படும் கொப்புளம்.

கொப்புளத்திற்குப் புறப்பாடு என்னும் பெயருண்மை நோக்குக.

வெளி — வெடி. வெடித்தல் = வெளிவருதல், பிஞ்சு விடுதல்.

## xxiii சோம்பல்

சூட்டினால் சோம்பல் உண்டாகும்.

"பசிசோம்பு மைதுனங் காட்சிநீர் வேட்கை
தெசிகின்ற தீக்குணமோ ரைந்து"

என்பது அடியார்க்கு நல்லார் மேற்கோள்.

சுள் — சுணங்கு — சுணக்கம் = வேலைத் தளர்ச்சி, தாழ்ப்பு, தடை, சோர்வு.

சுணங்குதல் = சோம்பற்படுதல்.

சுணங்கு — சுணங்கல் = சோம்பல், சொம்பேறி.

சுணங்கு — சுணங்கி = சோம்பேறி.

சுணங்கி — சோணங்கி = சோர்வுற்றவன்.

சோடன் = சோம்பேறி. சோடை = சோர்வு.

சும் = சோம்பல், ஒன்றுஞ் செய்யாமை.

சும் — சும்மா = ஒன்றுஞ் செய்யாமல்.

சும்மாவிருத்தல் = வேலையொன்றுஞ் செய்யாதிருத்தல், ஞானச் சோம்பல்.

சும் — சும்பு — சும்பன் = சோம்பேறி, பயனற்றவன்.

சும்பு — சொம்பு — சோம்பல். சோம்பு ஏறியவன், சோம்பேறி.

XXiv. உறைப்பு

உறைப்பு என்னும் பண்புப் பெயர் விதந்து சுட்டுவது காரத்தையே. உறைக்கும் பொருளைச் சுள்ளென்றிருக்கிறது என்பர்; காரத்தை எரிச்சல் என்று கூறுவர். இதனால், உறைத்தலைச் சுடுதலோடொப்பக் கொண்டமை புலனாம்.

உறு — உறை — உறைப்பு.

உல் — எல் — எரி — எரிச்சல்.

(குள்) — கள் — கடு. கடுத்தல் = உறைத்தல். கடு = காரம்.

கடு — காட்டம் = உறைப்பு.

கடு — கடி = காரம்.

கடி — கரி. கரித்தல் = உறைத்தல்.

கரி — கார் — கார்ப்பு. கார் — காரம்,

சுள் = உறைப்பு. சுள்ளம் = உறைப்பு. சுள்ளாப்பு = உறைப்பு.

சுள்ளக்காய் = மிளகாய். சுள்ளிடுவான் = மிளகு, மிளகாய்.

சுள் — சுர் — சூர் = காரம், மிளகு.

(நுள்) — நெள் — நெரி — நெரியல் = நெருப்புப்போல் எரியும் மிளகு.

நெரியல் — மெரியல் — மிரியல் = மிளகு.

நெரிப்பு — மெரிப்பு.

தெலுங்கர் மிளகாயை மெரப்பக்காய் (மெரிப்புக்காய்) என்று கூறுதல் காண்க.

முள் — முளகு — மிளகு. முளகாய் — மிளகாய்.

முளகு — முளகி — மிளகி = மிளகுச் சம்பா.

XXV. கடும் புளிப்பு

கடும்புளிப்பும் காரம்போல் காட்டமானதாகும். புளிப்பு முதிர்ந்த கள்,

"தேட்கடுப் பன்ன நாட்படு தேறல்" (புறம். 192),

"அரவுவெகுண் டன்ன தேறல்" (புறம். 176),

"பாப்புக் கடுப்பன்ன தோப்பி" (அகம். 348).

என்று கூறப்படுதல் காண்க.

உறு—உறை=புளித்த மோர்.

குள்—கள்—கடு. கடுத்தல்=புளித்தல். கடு—காடி= புளிப்பு, புளித்த கள், புளித்த கஞ்சி, ஊறுகாய்.

கடு—காட்டம்=கடும்புளிப்பு.

சுள்—சுடிகை=பனங்கள். சுள்—சூழிகை=கள்.

சுள்—சுர்—சுரம்=கள். சுர்—சுரை=சுள்

சுர்—சூர்=காட்டம்.

"சூர்நறா வேந்தினான்" (பரிபா. 6, 72).

சுள் — சுண்டு = கள். சுண்டுசோறு = கட்சத்துள்ள சோறு.

சுண்டு — சுண்டம் = கள். சுண்டகன் = கள்ளிறக்கு வோன்.

சுண்டு—சுண்டி. சுண்டியுண்டை = புளிக்க வைக்குங் குளிகை.

சுண்டு—சுண்டை=கள்.

சுண்டி—சொண்டி=சுண்டியுண்டை.

கடும் புளிப்பிற்குத் தாக்குவது போன்ற உறைக்கும் திறனுண்மை பற்றியே, பாலைப் புளிக்கவைத்தலைப் பிரை குத்துதல் என்றும் பிரை தைத்தல் என்றும் கூறுவர். தைத்தல் குத்துதல்.

தை (தய்)—தயிர்=பிரை தைத்த பால். ஒ: நோ, மை—மயிர்.

XXvi. சினத்தல்

சினம் தீயைப் போன்றதாதலின், எரிதலைக் குறிக்கும் சொற்கள் சினத்தையும் குறிப்பனவாயின.

"சினமென்னுஞ் சேர்ந்தாரைக் கொல்லி இனமென்னும்
ஏமப் புணையைச் சுடும்."

என்று வள்ளுவர் கூறுதல் காண்க.

உல் — உலறு. உலறுதல் = சினத்தல்.

உருத்தல் = சினத்தல். உருத்திரம் = சினம். உரு — உருப்பு — உருப்பம் = சினம்.

உல் என்னும் வேரினின்று பிறந்த அழலுதல் அனலுதல் அன்றுதல் எரிதல் முதலிய வினைகளும் சினத்தலைக் குறிக்கும்.

குருத்தல் = சினத்தல்.

குல் என்னும் அடியினின்று பிறந்த கனலுதல் கன்றுதல் என்னும் வினைகளும், குள் என்னும் அடியினின்று பிறந்த காய்தல் என்னும் வினையும், சினத்தலைக் குறிக்கும்.

குள் — கள் — கடு. கடுத்தல் = கோபித்தல், வெறுத்தல்.

சுள்ளம் = கோபம். சுள்ளக்கம் = கோபம். சுளித்தல் = கோபித்தல்.

சுண்டுசொல் = சுடுசொல்.

குறிப்பு: — தொடுதல் (அல்லது முட்டுதல்) என்பது, உள்ளிருந்து தொடுதல் வெளியிருந்து தொடுதல் என இரு வகைத்து. கருப்பைக்குள்ளிருந்து தாய் வயிற்றைக் குழவி முட்டுதல் உள்ளிருந்து தொடுதல்; தாய் வயிற்றினின்று பிறந்த உயிரிகள் தம்மை அடுத்தவற்றைத் தொடுவது வெளியிருந்து தொடுதல். மரத்துள்ளிருந்து துளிரும் நிலத்துள்ளிருந்து முளையும் முண்டி வெளிவருவது போல, தாய் வயிற்றினுள்ளிருந்து குழவியும் முண்டி வெளிவருவது, அதற்குத் தோற்றம். ஆகவே தோற்றமும் உள் தோற்றம் வெளித் தோற்றம் என இருவகைத்து. முட்டைக்குள் குஞ்சும் கருப்பைக்குள் குட்டியும் தோன்றுவது உள் தோற்றம்; அவை பிறப்பது வெளித் தோற்றம். ஆகவே, சிலவற்றிற்கு ஒரு தோற்றமும் சிலவற்றிற்கு இரு தோற்றமும் உளவாம்.

## (7) கூடலியல்

பொருள்கள் நெருங்குவதும் ஒன்றையொன்று தொடுவதும் கூடலாகும். ஆகவே, கூடலும் தொட்டுக் கூடல் தொடாது கூடல் என இருதிறத்தது.

### (க) கூடல் துறை

**i. கூடுதல்**

உறுதல் = கூடுதல்.

ஓர்தல் = பொருந்துதல், கூடுதல்.

குழு — குழுமு.

குழு — கெழு. குழுமு — கெழுமு.

கும்முதல் = கூடுதல். கும் — கும்பு. கும்புதல் = கூடுதல்.

கும் — குமி — குவி. குவிதல் = கூடுதல்.

குள் — கூள் — கூண்டு. கூண்டுதல் = கூடுதல். கூண்டு — கூடு. கூடு — கூட்டு — கூட்டல்.

குள் — கொள் — கொள்ளுதல் = கூடுதல்.

சுள் — செள் — செறி. செறிதல் = கூடுதல்.

சென் — செரு — சேர். சேர்தல் = கூடுதல்.

துள் — தொள் — தொழு — தொகு. தொகுதல் = கூடுதல்.

தொழுதல் = கூடுதல், கலத்தல்.

நுல் — (நுர) — நிர. நிரத்தல் = கலத்தல், கூடுதல்.

புள் — பொள் — பொழி. பொழிதல் = கூடுதல், திரளுதல்.

முல் — முன் — மன். முன்னுதல் = பொருந்துதல் மன்னுதல் = பொருந்துதல், கூடுதல்.

முள் — முண்டு — மண்டு. மண்டுதல் = கூடுதல்.

முள் — முட்டு. முட்டுதல் = கூடுதல்.

**ii. தொகுதி**

கூடின ஒவ்வொரு கூட்டமும் ஒரு தொகுதியாகும்.

(உள்) — இள் — இண் — இணர் = கொத்து.

ஓர்—ஓரை = கூட்டம், மகளிர் கூட்டம், விண்மீன் கூட்டம்.

குல்—குலை = காய்த்தொகுதி. குல் — குலம் = மக்கள் வகுப்பு, வண்டுகளின் கூட்டம்.

குல் — குர் — குரல் = பயிர்க்கதிர்.

குல்—குற்று—குத்து—கொத்து.

குள்—குளகம் = ஒரு முடிவுகொண்ட செய்யுள் தொகுதி.

குழுமு—குழுமம். குழு—குழும்பு. குழு—குழாம்.

கும்—கும்பு—கும்பல்.

கும்—குமு—குமுக்கு = கூட்டம்.

குள்—கள்—களம்—களன் = அவை, களம் — கணம்.

களம்—கழகம்.

கூள்—கூளி = கூட்டம். கூடு—கூட்டு—கூட்டம்.

கொள்—கொண்டி = தோட்டம். கொள் — கோள் = குலை. கோள்—கோட்டி = அவை.

சுவள்—சுவண்டு = பொருத்தம். சுவள்—சுவடி = ஏட்டுக்கற்றை.

சுல்—(சோல்)—சோலை.

சுள்—செள்—செரு—சேர்—சேரி. செள்—செண்—செண்டு = பூக்கற்றை. செண் = கொண்டை.

சொது—சொதை = குழாம், கூட்டம்.

சேர்—சார்—சார்த்து—சாத்து = வணிகக் கூட்டம்.

துள்—(துண்)—துணர் = கொத்து.

துள்—துடு—துடுப்பு = கொத்து.

துடு—துடவை—தோட்டம்.

துவல்—துவலை = கூட்டம்.

தொள்—தொண்டி = தோட்டம். தொள்—தோடு—தோட்டம்.

துல்—(துற்று)—தொற்று—தொத்து = பூங்கொத்து.

தொழு — தொழுதி. தொழு — தொகு — தொகுதி. தொகு—தொகை.

தொகு—தொகுப்பு—தோப்பு.

தொழு—தொழு=மந்தை.

நுல்—(நுர)—நிர—நிரை=வரிசை, மந்தை.

புல்—பொல்—பொரு—போர்=படப்பு.

புள்—(பிள்)—பிண்டி=கூட்டம்.

பொள்—பொழி—பொழில்=சோலை.

பொள்—பொய்—பொய்தல்=கூட்டம், மகளிர் கூட்டம்.

புது — புதர். புது — புதை — பொதை. பொது—பொதும்பு—பொதும்பர்=சோலை, மரச்செறிவு.

முகு—முகை=கூட்டம். முகை—மூகை=கூட்டம்.

முல்—(மல்)—மன்—மன்று=அவை.

மன்று—மந்து—மந்தை.

மூண்டு—மண்டு—மண்டல்—வண்டல்=ஆயம், மகளிர் கூட்டம்.

முட்டு—முட்டம்=ஊர்.

## iii. உறையுள்

மக்களும் மற்ற வுயிரிகளும் கூடி வாழும் இடம் அல்லது பொருந்தி யுறையும் இடம் உறையுளாம்.

உறு—உறை—உறையுள்.

உல்—(உர்)—ஊர்.

குல்—குலம்=வீடு, கோயில். தேவகுலம்=கோயில்.

குள்—குடி=வீடு, ஊர். குடியிருத்தல்=குடியிலிருத்தல், வசித்தல். குடி—குடிசை—குடிசை. குடி—குடில்—குடிலம்.

'கை' 'இல்' என்பன குறுமைப் பொருள் விகுதிகள்.

ஒ. நோ. கன்னி—கன்னிகை, தொட்டி—தொட்டில்.

கும்பு — கும்பை = சேரி. கும்பு — குப்பு — குப்பம்= சிற்றூர்.

குள்—கள்—களம்—களன். ஏர்க்களம் போர்க்களம் அவைக்களம் என்பவற்றை நோக்குக.

  

கொள்—கொட்டு—கொட்டம். கொட்டு—கொட்டில்.

கொட்டம்—கொட்டகை. கொட்டம்—கொட்டாரம்.

கொட்டம் — கோட்டம் = தொழுவம், கோயில், அரண்மனை. கொள்—கொண்டி = தொழுவம்.

சுள்—செள்—செரு—சேர்—சேரி.

துள் — தொள் — தொழு — தொழுவு — தொழுவம். தொழு—தொறு.

முன்—மன்—மனை. மன்—மன்று—மன்றம்.

மன்று—மந்து—மந்தை.

மன் + திரம் = (மன்றிரம்) மந்திரம் = மனை, கோயில், யானை குதிரைத் தொழுவம்.

'திரம்' என்பது ஒரு தொழிற் பெயர் விகுதி.

iv. நிறைந்து கூடல்

உறுதல் = நிறைதல்.

குள்—குழு—கெழு—கெழுமு. கெழுமுதல் = நிறைதல்.

கும் (கம்)—கமம்.

''கமம் நிறைந்தியலும்'' (தொல். உரி. 57).

கூடுதல் = நிறைதல்.

சுல்—சோல்—சால். சாலுதல் = நிறைதல்.

சால = மிக. சான்றோர் = அறிவு நிறைந்தோர்.

சான்றாண்மை = எல்லா நற்குணங்களும் நிறைந்து அவற்றை ஆளுந் தன்மை.

சால்பு = சான்றாண்மை.

துவல்—துவன்று. துவன்றுதல் = நிறைதல்.

''துவன்று நிறைவாகும்'' (தொல். உரி. 34).

முண்டு—மண்டு. மண்டுதல் = நிறைதல், திரளுதல்.

''கால்விசைந் தோடிக் கடல்புக மண்டி''
(திருவாசகம், 2, 135).

மண்டு — மடு. மடுதல் = நிறைதல். மடுத்தல் = நிறைத்தல்.

v. நிறைந்து கூடுமிடம்

கூடு – கூடம் = நீண்ட அறை அல்லது மனை.

சால் — சாலை = கூடம்.

மாணவர் கல்வி பயிலும் பள்ளியைப் பள்ளிக்கூடம் கல்விச்சாலை பாடசாலை என்றும், தொழிலாளர் பலர் கூடித் தொழில் செய்யுமிடத்தைத் தொழிற்கூடம் தொழிற்சாலை என்றும், கம்மியர் வீட்டில் பணி செய்யும் அறையைப் பட்டசாலை என்றும், எல்லா இல்லங்களிலும் நீண்ட அறையைக் கூடம் என்றும் வழங்குதல் காண்க.

மண்டுதல் = நெருங்குதல், நிறைதல், நிறைந்து கூடுதல். மண்டு = செறிவு, மிகுதி.

மண்டு — மண்டகம் — மண்டபம். ஒ. நோ. வாணிகம் — வாணிபம்.

மண்டு — மண்டி = பொருள்கள் நிறைந்த இடம், சரக்கறை.

மண்டு — மடு — மடம்.

திறப்பான பெரிய வீட்டை மடம்போலிருக்கிறது என்பர்.

மண்டுதல் = நெருங்குதல், திரளுதல். மண்டு — மண்டி = நீரின் அடியில் திரண்டிருக்கும் மண் அல்லது அழுக்கு.

மண்டு — மண்டல் – வண்டல் = வெள்ளத்தின் அடியில் திரண்டு படியும் மண்.

## (௪) குவிதல் துறை

vi. மிகுதல்

மிகப் பல பொருள்கள் கூடின கூட்டம் அளவில் மிகும்.

உருத்தல் = மிகுதல்.

உறுதல் = மிகுதல். உரவு = மிகுதி.

குல் — கல் — கன் — கன — கனம் = மிகுதி. கன் — கனை = மிகுதி.

குள்—கள்—கடு கடுத்தல்=மிகுதல். கடு—காடு= மிகுதி. வெள்ளக்காடு பிள்ளைக்காடு முதலிய வழக்குக்களை நோக்குக. கள் — கய் — (கயல்) — கஞல். கஞலுதல்= செறிதல், நிறைதல், மிகுதல்.

குள்—கூர். கூர்தல்=மிகுதல்.

குள்—கொள்ளை=மிகுதி.

சும்—சும்மை=மிகுதி. சும்—சும—சுமதி=மிகுதி.

புல்—பல்—பன்மை. பல்—பல்கு—பலுகு. பலு-பரு. பருத்தல்=மிகுதல். பரு—பெரு.

முகு—மிகு—மிகுதி—மீதி.

முள்—முண்டு—மண்டு=செறிவு, மிகுதி.

## vii. செய்தல்

புதிதாகச் செய்யப்படும் பொருள் ஏற்கனவே செய்யப்பட்டுள்ள பொருள்களின் அளவை மிகுத்தலால், மிகுத்தற் கருத்தில் செய்தற் கருத்துத் தோன்றிற்று. ஆங்கிலத்திலும் make என்னும் சொல்லை L. magnus (great) என்னும் சொல்லினின்று திரிப்பர். ஒரு தனிப்பட்டவர்க்கோ ஒரு கூட்டத்தார்க்கோ உள்ள பொருள் போதாதபோது தேவையான அளவு அது பெருக்கப்படும். விளைவுப் பெருக்கம் என்று அடிக்கடி கூறப்படுதல் காண்க. பயிர் வளர்த்தலைப் பயிர் செய்தல் என்றும், பொருளீட்டுதலைப் பொருள் செய்தல் என்றும் கூறுவதையும் நோக்குக.

குள்—கள்—கடு—கரு.

கடுத்தல்=மிகுதல். கருவி=தொகுதி (group). கருமை= பெருமை.

ஆயுதத்தைக் குறிக்கும் கருவி என்னும் சொல் தூய தென் சொல்லாதலாலும், அதனோடு தொடர்புள்ள கரணம் என்னும் சொல் செய்கையென்று பொருள்படுதலாலும், இவ்விரண்டிற்கும் கரு என்பது பகுதியாயிருத்தலாலும், கரு என்னும் சொல் மிகுதிப் பொருள் தருதலாலும், மிகுத்தற் கருத்து செய்தற் கருத்தைப் பிறப்பித்தற்கேற்றதாதலாலும், செய்தல் எனப் பொருள்படும் கருத்தல் என்பதொரு வினை முன்னொரு காலத்து வழங்கிப் பின்னர் வழக்கற்றுப் போனதாகத் தெரிகின்றது.

கரு—கருமம்=செய்கை, தொழில். ஒ. நோ. பரு—பருமம்.

கரு—(கரும்)—கருமம். ஒ. நோ. உரு—உரும்—உருமம்.

கரும்—கம்=தொழில், கம்மியர் தொழில்.

"ஈமுங் கம்மும்" (தொல். எழுத். 328).

கம்—கம்மியம்—கம்மியன்=கம்மாளன்.

கம்—கம்மாளன்.

கருமம்—கம்மம்=கம்மியர் தொழில்.

"கம்மஞ் செய்மாக்கள் (நாலடி. 393);

கம்மவாரு=பயிர் வேலை செய்யும் தெலுங்க வகுப்பார்.

கரு—கருவி=செய்யும் ஆயுதம்.

கரு—கரணம்=செய்கை, சடங்கு, மணச் சடங்கு, உடன்படிக்கை, ஆவணம் (deed), ஆவணம் எழுதுவோன், கணக்கெழுதுவோன்.

கரணம்—கரணத்தான்=கணக்கன்.

கரணம்=செய்யுங் கருவி. அகக்கரணம் புறக்கரணம் என்பவை உடம்பிற்கு அகமும் புறமுமுள்ள கருவிகளாகிய உறுப்புக்கள்.

கரு—கார். கார்—காரணம்; கார்—காரியம்.

கருநிறத்தையும் தோன்றுதலையுங் குறிக்கும் கரு என்னும் சொல்லும், கார் என்று திரிதல் காண்க. கார்த்தல்=கருப்பாதல், தோன்றுதல்.

அணம் இயம் என்பன விகுதிகள். ஒ. நோ. கட்டணம், ஏரணம்; கண்ணியம், வாரியம்;

கருமம் கருவி என்பன முதற்கால வடிவங்கள். அதனால், அவை மரபாகப் பண்டை நூல்களிற் பயின்று வருவன. கரணம் காரணம் காரியம் என்பன தொல்காப்பியர்க்கு முந்தின இடைக்கால வடிவங்கள்.

"கற்பெனப் படுவது கரணமொடு புணர" (தொல். 1088).

"ஆக்கந் தானே காரண முதற்றே" (ஷை 504);

"ஆரியம் நன்று தமிழ்தீ தெனவுரைத்த
காரியத்தாற் காலக்கோட் பட்டானை" (நக்கீரர்).

(சுள்)—செள்—செய். செய் — செழு — செழுத்தல் = மிகுதல். செழுசெழுத்தல் = மிக வளப்பமாதல்.

செய்—செய்கை = செயல், பயிர்த்தொழில், உடன்படிக்கை, ஆவணம் (deed).

"ஆதிசைவ னாரூரன் செய்கை"
(பெரியபு. தடுத்தாட். 59)

செய்கைக்காணி = பட்டயக்காணி.

செய்தல் = திருத்தமாகச் செய்தல், வருந்திச் செய்தல்.

செய் = திருந்திய நிலம். நன்செய் = நன்றாகத் திருந்திய நிலம், புன்செய் = சிறிது திருந்திய நிலம். செய்—செய்யுள்.

"வல்லோர் அணிபெறச் செய்வன செய்யுள்"
(நன். 268).

(புள்)—(பள்)—பண்—பண்ணை = தொகுதி, மிகுதி.

பண்ணை — பணை = பெருமை. பணைத்தல் = பருத்தல், மிகுதல்.

"பண்ணைப் பணைத்த பெருஞ் செல்வம்" (நாலடி. 251).

பண் — பண்ணு. பண்ணுதல் = செய்தல், ஆயத்தஞ் செய்தல், அலங்கரித்தல், சரிப்படுத்துதல், இசைக் கருவியில் அலகு (சுருதி) அமைத்தல்.

பண்—பண்டு — பண்டம் = செய்யப்பட்ட பொருள்.

பண்டம்—பண்டாரம் = பொருள்கள் தொகுக்கப்பட்ட இடம், களஞ்சியம், கருவூலம், நூலகம், அறிவன், துறவி, பூசாரி.

பண்டாரம்—பண்டாரி.

பண்டு — பண்டுவன் = பல பொருட்குணம் அறிந்த மருத்துவன்.

பண்டுவன் — பண்டுவம் = மருத்துவம். பண்டு — பண்டிதன்—பலநூற் பொருளறிந்த புலவன், மருத்துவன். பண்டிதன்—பண்டிதம்.

பண்—பணி=பொருள், செய்யப்பட்ட அணிகலம்.

பணி—பணிகன்—வணிகன்=பொருள்களை விற்பவன். வணிகன்—வாணிகன்—வாணியன்.

பண்=பண்ணப்பட்ட இசை. பண்—பாண்—பா. பாண்—பாணி,

பாண்—பாடு—பாட்டு. பாண்—பாணன். பண்—பண்ணியம்=கிளைப்பண். பண்—பண்டர்=பாணர்.

## viii. செய்யும் உறுப்பு (கை)

கரு—கரம் (வ.).

செய்—(சை)—கை. செய்=கை (தெ.).

பண்—பாணி.

## ix. வளம்

பொருள் மிகுவதனால் வளமுண்டாகும்.

குள்—கொழு—கொழுமை. கொழு—கொழுப்பு கொழுமை—கெழுமை.

சுள்—செழு—செழுமை. செழு—செழுது—செழுத்து—செழுந்து=செழிப்பு.

செழு—செழுப்பு—செழுப்பம்=செழிப்பு. செழுப்பு செழும்பு—செழும்பல்.

செழு—செழி—செழிப்பு—செழிம்பல்.

செழி—செழியன்.

முல்—மல்—வளம். மல்—மல்லல்=வளம்.

"மல்லல் வளனே" (தொல். உரி. 7)

முள்—மள்—வள்—வண்மை=வளம், வளத்தாலாகும் ஈகை. வள்ளல். வள்—வளம்—வளவன்.

### (உ) குவிதல் துறை

## i. குவிதல்

மலர்ந்த பூவின் இதழ்கள் கூடும்போது முகை போற் குவிதலால், கூடுதற் கருத்திற் குவிதற் கருத்துப் பிறந்தது.

கும்—குமிழ்—குமிழி.

கும்—குமு—குமுதம்=பகலிற் குவியும் ஆம்பல்.

கும்—குமி—குவி. குவிதல்=கூம்புதல்.

குவி—குவம்=ஆம்பல்.

கும்பு—கூம்பு. கூம்புதல்=குவிதல்.

கும்பு—குப்பு—குப்பி=குவிந்த சிறுகலம்.

கூலங்களையும் காய்கறிகளையும் கல் மண் முதலியவற்றையும் கூம்பிய வடிவில் தொகுத்து வைத்தல் குமித்தல் அல்லது குவித்தல் எனப்படும்.

கும்—குமி—குவி.

கும்—கும்மல். கும்—கும்பு—குப்பு—குப்பல். குப்பு—குப்பை=குவியல்.

குமி—குமியல்.

குவி—குவியல், குவால், குவை.

சும்—சும்பு—சூம்பு—சூம்பல்=கூம்பிச் சொத்தையான காய்கனி.

சூம்பின கை=கூம்பி மொண்டியான கை.

ii. கைகுவித்தல்

கும்மியடித்தற்கும் கும்பிடுவதற்கும் இருகையையும் ஒன்று சேர்க்கும்போது அவை கூம்பிய வடிவத்தை அடையும்.

கும்—கும்மி=கை குவித்தடிக்கும் விளையாட்டு.

கும்மி—கொம்மி.

கும்—கும்பு—குப்பு—குப்பி—கொப்பி=கும்மி.

கும்—கும்மை—கொம்மை. கொம்மை கொட்டுதல் = கை குவித்தடித்தல்.

கும் — கும்பு — கும்பிடு. கும்பிடுதல் = கைகுவித்துத் தொழுதல். கும்பு — கூம்பு — கூப்பு. கைகூப்புதல் = கைகுவித்தல்.

துள்—தொழு. தொழுதல்=கை கலத்தல் அல்லது கூட்டுதல்.

### iii. குப்புறுதல்

பூக்கள் மலர்வது தம் முகத்தைத் திறப்பது போலும், அவை குவிவது அதை மூடுவது போலும், இருத்தலாலும்; பகலில் மலர்ந்து இரவில் கூம்பும் இலைகளும் மலர்களும், பெரும்பாலும், மலரும்போது மேனோக்கியும் கூம்பும் போது கீழ்நோக்கியும் இருத்தலாலும், மாந்தன் மேனோக்கிப் படுத்திருத்தல் மலர்ந்த நிலைக் கொப்பாகவும், கீழ் நோக்கிப் படுத்திருத்தல் கூம்பிய நிலைக் கொப்பாகவும், சொல்லப்படும்.

மலர்தல் = முகம் மேலாதல். மலர்த்தல் = முகத்தை மேலாக்குதல்.

மலர் — மல்லார் — மல்லா. மல்லாத்தல் = முகம் மேலாதல். மல்லாத்துதல் = முகத்தை மேலாக்குதல்.

மல்லாந்துபடுத்தல் மல்லாக்கப்படுத்தல் முதலிய வழக்குக்களைக் காண்க.

கும்பு—குப்பு—குப்புறு. குப்புறுதல் = முகங்கவிழ்தல். குழந்தை குப்புற்றுக்கொண்டது, முகங்குப்புற விழுந்தான், என்று கூறுவது வழக்கு.

குவி — கவி. கவிதல் = குப்புறுதல், தலைகீழாதல்.

கவி—கவிழ். கவிழ்தல் = " "

"கவிழ்ந்து நிலஞ்சேர அட்டதை" (புறம். 77)

குடம் கூடை முதலியவை பொதுவாக வாய்மேனோக்கியவாறு வைக்கப்படும். அவை தலைகீழாதல் கவிழ்தல் என்றும், அவற்றைத் தலைகீழாக வைத்தல் கவிழ்த்தல் என்றும், கூறப்படும்.

கவிதல் = தலைகீழான கூடைபோல் வளைதல்.

கவித்தல் = தலைகீழான கூடையைப் பிடித்தல்போல் குடைபிடித்தல், கூடையைக் கவிழ்த்தல்போல் மகுடத்தைத் தலையிலணிதல்.

கவி—கவிகை = குடை.

கவிகண் = குடங்கையால் மறைக்கப்பட்ட கண். முகில் குடைபோல் வளைந்து மூடுதலும் கவிதல் எனப்படும்.

## (ஈ) கலத்தல் துறை

### i. நெருங்கிக் கலத்தல் (அன்பாற் கலத்தல்)

உ=பொருந்து (ஏவல்வினை) உத்தல்=பொருந்துதல்.

உத்தம்=பொருத்தம். உத்தி=பொருந்தும் முறை.

(உள்)—அள்=அளவு. அளவுதல்=கலத்தல். அளவு—அளாவு. அள்—அளை. அளைதல்=கலத்தல்.

உறுதல்=பொருந்துதல்.

உள்—(இள்)—இழை. இழைதல்=நெருங்கிப் பழகுதல்.

குலவுதல்=கூடுதல். கூடிக்குலாவுதல் என்னும் வழக்கை நோக்குக. குல—கல.

கூடுதல்=கலத்தல்.

குள்—கொள். கொள்ளுதல்=பொருந்துதல்.

சும்—(சுவ்)—சுவள்—சுவண்டு=பொருத்தம்.

"தூமதியஞ் சூடுவது சுவண்டே." (தேவா. 677, 4)

துன்னுதல்=பொருந்துதல்.

பூசுதல்=இயைதல்.

புல்—பொல்—பொரு—பொருந்—பொருந்து. பொரு முகவெழினி பொருங்கதவு முதலிய தொடர்களை நோக்குக.

முல்—மல்=மன். மன்னுதல்=பொருந்துதல். முள்—(முளவு)—முயவு. முள்—(முய்)—முய—முயங்கு — மயங்கு.

முழவுதல்=நெருங்கிப் பழகுதல். முழவு—முழாவு.

முளவு—விளவு—விளாவு. விளவுதல்=கலத்தல்.

### ii. விரும்புதல்

நெருங்கிப் பயின்றவரும் உள்ளத்திற் கலந்தவரும் ஒருவரையொருவர் விரும்புவர்.

உவத்தல்=பொருந்துதல், விரும்புதல், மகிழ்தல்.

குலவுதல்=கூடுதல், மகிழ்தல். குலவு—குலாவு.

(நுள்)—நள்—(நய்)—நய. நள்ளுதல்=பொருந்துதல். நயத்தல்=விரும்புதல், மகிழ்தல். முகத்தல்=(கலத்தல்) விரும்புதல்.

புள்—பிள்—விள். வ்ள்ளுதல்=கலத்தல். விரும்புதல். இவ் வினை இன்று வழக்கற்றது. விள்—விளரி=வேட்கை.

விள்—விளை=விருப்பம். விளையாடுதல் = விரும்பி யாடுதல்.

விள்—(வீள்)—வீழ. வீழ்தல்=விரும்புதல்.

விளை—விழை. விழைதல்=விரும்புதல் விழைவு—விருப்பம், புணர்ச்சி. விழை—விழைச்சு = புணர்ச்சி.

விள்—(விரு)—விரும்பு—விருப்பம்.

விழை—(விழாய்)—விடாய்=வேட்கை, நீர்வேட்கை.

விள்—வெள்—மெய்—வெய்யன்=விருப்பமுள்ளோன்.

வெய்ம்மை—வெம்மை=விருப்பம்.

"வெம்மை வேண்டல்" (தொல். உரி. 36)

வெள்—வேள்—வேட்கை=விருப்பம், காதல். வேள்= திருமணம். வேட்டல் = மணத்தல். வேள் — வேள்வி = ஒன்றை விரும்பிச் செய்யும் யாகம்.

வெள்—வெள்கு—வெஃகு. வெஃகுதல்=விரும்புதல்.

வெள்—வெண்டு. வெண்டுதல்=ஆசைப்படுதல்.

வேள்—வேண்டு—வேண்டல்.

வேள் = விருப்பம். வேள் — வேளாண்மை = பிறரை விரும்பியுணவளித்தல். வேள்—வேளாளன்=வேளாண்மை செய்யும் உழவன்.

வேளாண்மை = உழவுத்தொழில். வேளாண்மை — வெள்ளாண்மை—வெள்ளாமை.

வேள்—வேண்=விருப்பம். வேண் + அவா = வேணவா.

வேண்டு—வேண்டும், வேண்டாம்.

வேள்—வேட்டம்=விருப்பம். உயிரிகளை விரும்பிப் பிடித்தல்.

வேள்—வேட்டை. வேட்டம்—வேட்டுவன்—வேடுவன் —வேடு—வேடன்.

புள்—(பிள்) — (பிண்) — பிண — பிணா — பிணவு — பிணவல் = விரும்பப்படும் பெண், விலங்கின்பெண். பிண்— பிணை = விருப்பம். பிள்—பிடி = பெண் யானை.

பிள்—பெள்—பெட்பு = விருப்பம். பெள்—பெட்டை— பெடை—பேடை.

பெள்—பெண்—பெண்டு. பெண்—பேண். பேணுதல் = விரும்புதல், போற்றல்.

''பிணையும் பேணும் பெட்பின் பொருள''
(தொல். உரி. 40)

பேண்—பேடு—பேடன், பேடி.

iii. அன்புசெய்தல்

கலந்தவரும் விரும்பியவரும் அன்பு செய்வர்.

உல்—உன் — உன்னியம் = சொந்தம். உன்னியார் = உறவினர், உன்னுதல் = பொருந்துதல்.

உன்—(அன்)—அன்பு.

உறு—உறவு. உறு—உற்றான் = உறவினன். உறுதல் = பொருந்துதல்.

உல்—ஒல்—ஒன்—ஒன்று. ஒன்றுதல் = பொருந்துதல். ஒன்னார் = பகைவர். ஒன்றார் = பகைவர்.

உள் — அள் — அளி = அன்பு. அள் = (அரு)—அருள்.

அள்—அண்—ஆண்—ஆணம் = நேயம்.

ஆண்—ஆணு = நேயம்.

உள்—(உழு)—உழுவல் = விடாது தொடர்ந்த அன்பு.

குள்—குழு = கெழு. கெழுவு = நட்பு. கெழு—கெழி = நட்பு.

குள்—கெள்—கேள் = உறவு. கேண்மை = நட்பு.

கூட்டு—கூட்டாளி = நண்பன்.

துல—துன். துன்னுதல் = பொருந்துதல். துன்னியார் = உறவினர், நண்பர். துன்னார் = பகைவர்.

துன்—துன்று. துன்றார் = பகைவர்.

துள் — தொழு — தோழம் — தோழமை. தோழம் — தோழன். தொழுதல் = தொகுதல், கூடுதல். தொழுதி — தொகுதி.

(நுள்) — நள் — நண்பு — நட்பு. நள்ளுநர் = நண்பர். நள்ளார் = பகைவர். நள் — (நய்) - நய. நயத்தல் = அன்பு செய்தல்.

நுள் — (நெள்) — நெய் — நேய் — நேயம் — நேசம் — நேசன்.

புல் — புல்லார் = பகைவர். புல்லுதல் = பொருந்துதல். புல் — பொல் — பொரு — பொருந் — பொருந்து. பொருந்தார் = பகைவர்.

முல் — முன் — மன். மன்னார் = பகைவர்.

முள் — முழு — முழுவல் = விடாது தொடர்ந்த அன்பு.

iv. விரும்பிக் காக்கும் தலைவன்

ஒரு பொருளை விரும்புகிறவன் அதைப் போற்றிக் காப்பானாதலின், விரும்பற் கருத்து காத்தற் கருத்தையுந் தழுவும்.

எ - டு : பேணுதல் = விரும்புதல், போற்றுதல். ''தந்தை தாய்ப் பேண்'' என்னும் ஔவையார் கூற்றை நோக்குக. ஒரு தலைவனுக்கு அவன்கீழ்ப்பட்டவர் மாட்டன்பு இருத்தல் வேண்டுமாதலால், விரும்புதல் குறித்த சில சொற்களினின்று தலைமை குறித்த சொற்கள் தோன்றியுள்ளன.

நம்புதல் = விரும்புதல்.

''நம்பும் மேவும் நசையா கும்மே'' (தொல். உரி. 31)

நம்பு — நம்பன் = தலைவன். நம்பு — நம்பி = தலைவன்.

நயத்தல் = விரும்புதல். நய — நாயம் — நாயன் = தலைவன். நாயம் — நாயகம் — நாயகன் = தலைவன்.

வேட்டல் = விரும்புதல். வேள் = தலைவன். வேள் — வேளான் = தலைவன்.

நம்பு நய என்னும் இரு சொற்களும் ஒரே யடியினின்று திரிந்தவையே.

நாயன் = தலைவன், அரசன், கடவுள், தந்தை.

  

"நாயனார் போனநாள் இன்றென்று
அகத்திலுள்ளோரெல்லாருங் கூறி" (சீவக. 2097, உரை)

என்னுமிடத்து, நாயனார் என்பது தந்தையைக் குறித்தது. நாயன் நாய்ச்சுமார் என்னுந் தொடர் தலைவன் தலைவி யரைக் குறிக்கும்.

இறைவனடியாரையும் தலைவரோடொப்பக் கருதும் வழக்க முண்மையால், நாயன் நாயனார் என்னும் பெயர்கள் அடியாரையுங் குறிக்கும். வள்ளுவனார்க்கு நாயனார்ப் பட்டம் வழங்குவது அவரது புலமைத்தலைமை பற்றியாகும்.

நாயன்—நாயர்=சேர (மலையாள) நாட்டுப் படைத் தலைவர் வழிவந்த குலத்தார். நாயன் என்பது தண்டநாயன் என்பதன் குறுக்கம். நாயடு நாயுடு என்பன தெலுங்கு வடிவங்கள்.

நாயனார்—நயினார்=சமணர்க்கும் சிவ குலத்தார்க்கும் வழங்கி வரும் பட்டப் பெயர். முதலாவது இது தலைமை பற்றி அவ்விரு சாராரின் தலைவர்க்கே வழங்கியது. தந்தையைக் குறிக்கும் நாயனா நயினா என்பவை தெலுங்கு வடிவங்கள்.

நாயன்—நாயந்தை—நயிந்தை=ஆண்டான், அடிமை வைத்தாளுங் குலத்தலைவன், சில குலத்தார் பட்டப் பெயர்.

நாயந்தை என்பது விளி வடிவில் நாயந்தே (நாயன்தே) என்றாகும்.

நாயன்—நாயகன்=தலைவன், கணவன், அரசன், கடவுள்.

நாயகம்=தலைமை.

நாயகன்—நாயகர்=சில குலத்தார் பட்டப் பெயர்.

நாயகன்—நாய்கன்=வணிகர் தலைவன்.

நாய்கன்—நாய்க்கன்=சில குலத்தார் பட்டப் பெயர்.

நாயகன்—நாயக்கன்=சில குலத்தார் பட்டப்பெயர்.

நாய்க்கன் நாயக்கன் என்பனவும் படைத் தலைமை குறிக்கும். இவ் வடிவங்கள் முதலாவது குலத் தலைவர்க்கு வழங்கியவை.

நாயன்—(நாயர்)—காயிறு=கோள்களுள் தலைமையான கதிரவன் அதற்குரிய கிழமை.

நாயிறு—ஞாயிறு. நாயிறு என்பதே உலக வழக்கு.

குறிப்பு :—நாயன் என்னும் பெயர் தந்தை பெயராகவும் குலப் பட்டப் பெயராகவும் வழங்கும் வழக்கு வடமொழியிலில்லை. தலைவன் கணவன் என்ற பொருளிலேயே அவை அங்கு வழங்குவன. மேலும், தமிழில் வழங்கும் பல்வேறு வடிவங்களும் வடமொழியிலில்லை. நாய நாயக (nayaka) என்ற இருவடிவங்களே அங்குள.

ஞாயிறு என்னுங் கிழமைப் பெயர் தொன்றுதொட்டு வழங்கி வருவது.

நாயகன் என்னுஞ் சொல்லுக்கு வடமொழி யகராதியிற் காட்டப்படும் வேர் நீ என்பது. அது செலுத்துதலை அல்லது நடத்துதலைக் குறிக்கும். அச்சொல்லும் நூ என்பதன் திரிபான நீ என்பதே. நீத்தல்=செலுத்துதல். நீயான்= கலஞ்செலுத்துவோன்.

V. கலாய்த்தல் (பகையாற் கலத்தல்)

இருவர் அல்லது இரு படைகள் நெருங்கிக் கலந்தே போர் செய்வதால், கலத்தற் கருத்தில் பொருதற்கருத்துத் தோன்றிற்று. சண்டையிடுதலைக் கைகலத்தல் என்று கூறுதல் காண்க.

உத்தல் = பொருத்துதல். உத்தம்=போர்.

சேர நாட்டாரான மலையாளியர் போர்க்களத்தை உத்தாங்களம் என்பர்.

உம்—அம்—அமர். அமர்தல்=பொருந்துதல். அமர்= போர். அமரம்=போர் மறவர்க்கு விடப்பட்ட மானியம்.

கல—கலாய். கலாய்த்தல்=சண்டையிடுதல்.

கல—கலாம். கல—கலகம்

(சுள்)—செள்—செரு=போர்.

(சும்)—(சம்)—சமம் = போர். சமத்தல்=கலத்தல், ஒன்றாதல். சமம்=ஒப்பு.

சமம்—சமர்—சமரம்.

"அருஞ்சம முருக்கி" (புறம். 312)

பொரு—போர். பொரு—பொருநன் = போர் செய்வோன்.

பூசு—பூசல்=போர், ஆரவாரம்.

முல்—மல் = சண்டை. முட்டுதல் = பொருந்தல், பொருதல்.

மொய்த்தல் = நெருங்கிக் கூடுதல். மொய் = போர்.

### vi. தழுவல்

அன்பு செய்பவர் அன்பு செயப்பட்டாரைத் தழுவுவர். தழுவலாவது கலந்தணைத்தல்.

உறுதல் = தழுவுதல்.

(உள்)—அள்—அளை—அணை. அணைத்தல் = தழுவுதல். அளைதல் = தழுவுதல். அணைதல் = தழுவுதல். அணை = நீரை அணைத்தல்போற் கட்டும் கரை.

வாய்க்காலிற் பக்கமாக வழிந்தோடும் நீரை மண்ணிட்டுத் தடுத்தலை அணைத்தல் என்பர் உழவர்.

(சுள்)—செள்—செரு—சேர். சேர்தல் = அணைத்தல்.

சேர்ந்து கட்டுதல் என்பது வழக்கு.

(துள்) — தழு—தழுவு.

புல்லுதல் = தழுவுதல்.

முள்—முழு—முழுவு. முழுவுதல் = தழுவுதல்.

தழுவி முழுவி என்பது வழக்கு.

முள்—முள்கு. முள்குதல் = தழுவுதல். முள்—(முய்)—முயங்கு. முயங்குதல் = தழுவுதல். முயங்கு—முயக்கு—முயக்கம். முூ.

முள்—(மள்)—மரு = மருவு. மருவுதல் = தழுவுதல். மரு—மருமம் = தழுவும் மார்பு. மரு — மார் — மார்பு. மருமம்—மம்மம்—அம்மம் = முலை, முலைப்பால்.

(முளவு)—விளவு. விளவுதல் = கலத்தல், தழுவுதல். விளவு—விளாவு—வளாவு.

### vii. மணத்தல் (புணர்தல்)

தழுவலிற் சிறந்தது மணம்.

மணத்தலாவது காமக்காதலர் தழுவிக் கூடுதல்.

(உள்)— அள்—அளை—அணை. அணைதல் = புணர்தல்.

(உள்)—இள்—இழை. இழைதல் = கூடுதல்.

குல—கல—கலவி.

கூடு—கூட்டம்=புணர்ச்சி.

குள்—கள்—கள—கண—கணம்=கூட்டம். கணவன்=கூடுபவன், கொழுநன். கணத்தல்=கூடுதல்.

கள்—(கடு)—கடி=திருமணம்.

"கடியிற் காவலும்" (மணி. 18, 98)

துவள்தல்=புணர்தல். துவளை=புணர்ச்சி.

நுள்—நொள்—நொட்டு. நொட்டுதல்=புணர்தல்.

புல்லுதல்=புணர்தல்.

புல்—பொல்—பொலி. பொலிதல்=புணர்தல்.

புள்—(புண்)—புணர்—புணர்ச்சி.

புணை—பிணை. பிணைதல்=புணர்தல்.

(முல்)—மல்—மன்—மன்று—மன்றல்=மணம்.

மன்றுதல்=கூடுதல்.

முள்—(மள்)—மண—மணம். மணத்தல்=கலத்தல் கூடுதல்.

## viii மணத்தல் (வாசனை வீசுதல்)

ஒரு பொருளின் நாற்றம் அதனையடுத்த காற்றொடும் பிற பொருளொடும் கலத்தலால், அது மணம் என்னப்பட்டது.

பூவோடு சேர்ந்த நாரும் மணம் பெறுதல் காண்க.

குரு=மணம்.

"குருஉப்புகை"=மணமுள்ள புகை (திவாகரம்)

குள்—குரு. குருத்தல்=கலத்தல், தொகுதல். (குருவி)—கருவி=தொகுதி.

"கருவி தொகுதி" (தொல். உரி. 56)

"கருவி வானம்" (பெரும்பாண். 24)

"கருவி வானம் என்புழிக் கருவி மின்னுமுழக்கு
முதலாயவற்றது தொகுதி"

என்று சேனாவரையர் கூறியிருப்பது பொருந்தாது.

  

"விலங்கிலை யெஃகின் மின்மயங்கு கருவிய" (குறிஞ்சி. 53)

என்றவிடத்தும்,

"வேல்போல மின்னு மயங்குகின்ற தொகுதிகளை யுடையவாய்" (நச். உரை)

என்றே பொருள்படும்.

கும்—கம்—கம—கமழ். கும்முதல் = கலத்தல், கூடுதல்.

குமுகுமுத்தல் = மணம் வீசுதல்.

"பசுமஞ்சள் குமுகுமுச்சு" (அழகர் கல. 10)

குமுகுமு—கமகம.

கம் என்று வாசனை அடிக்கிறது, கமகமவென்று கமழ்கிறது, என்னும் வழக்குக்களைக் காண்க.

குள்—கள்—(கடு)—கடி = வாசனை.

முள்—(மள்)—(மண்)—மணம் = வாசனை. மணத்தல் = கலத்தல்.

முள்—முரு—முருகு = வாசனை.

முரு—மரு = வாசனை. மருவுதல் = கலத்தல்.

(முல்)—மல்—மன்று—மன்றல் = வாசனை. மன்றுதல் = கூடுதல்.

மரு—மருந்து = நோய் தீர்க்கும் வாசனைத் தழை, நோய் தீர்க்கும் பொருள்.

முறு—வெறு—வெறி = மணம். வெறுத்தல் = கலத்தல், செறிதல்.

"வெறியார் நறுங்கண்ணி முன்னர்த் தயங்க" (நாலடி. 26)

## ix. இணையாதல்

ஆணும் பெண்ணுமாக இருவர் அல்லது இரண்டு சேர்ந்து புணர்வதாலும், இயங்குதிணை யுயிரிகளிற் பெரும்பாலன ஆணும் பெண்ணுமாகக் கூடி வாழ்தலாலும், உழவிற்கும் வண்டிக்கும் அடிக்கடி இரு காளைகள் பூட்டப்படுவதாலும், கை கால் முதலிய சில வுறுப்புக்கள் இவ் விரண்டாயிருப் பதாலும், ஆடை முதலிய பொருட்கள் நன்கொடையில்

பொதுவாக இணையாக வழங்கப்பெறுவதாலும், இணையைக் குறித்தற்குக் கலத்தலைக் குறிக்கும் சொற்களி னின்று பல சொற்கள் பிறப்பிக்கப்பட்டுள்ளன.

உத்தல் = பொருந்துதல். உத்தி = விளையாட்டிற்கு இருவர் சேரும் இணை. உத்திகட்டுதல் என்பது தென்னாட்டு வழக்கு.

(உள்)—இள்—இழை—இணை, ஒ. நோ. தழல்—தணல்.

சுவள்—சுவடு—சோடு = இணை.

சுவள்—சுவடி—சோடி = இணை.

இருவரும் சுவடியாய்ப் போகின்றார்கள் என்பது தென்னாட்டு வழக்கு.

(சுள்)—செள்—செண்டை = இரட்டை.

செண்டை வரிசை = சச ரிரி கக என ஏழிசைகளும் இரட்டை இரட்டையாய் வருதல்.

சொதை—சதை = இணை.

துணை = இணை, இரண்டு. துணங்கை = இரு கையுஞ் சேர்த்தடிக்குங் கூத்து.

புணர் = இரண்டு.

### (ஊ) கலங்கல் துறை

கலக்கத்திற் கேதுவாகப் பல பொருள்கள் கலத்தல் கலங்கலாகும்.

i. கலவை

உலக்குதல் = நீரையும் சேற்றையும் மிதித்துக் கலக்குதல்.

(உள்)— அள்—அண்—ஆண் — ஆணம் = கூட்டு.

வெந்த ஆணம் — வெந்தாணம் = வெந்தணம் — வெஞ்சணம். இது வ்யஞ்சனம் என்னும் வடசொல்லின் திரிபாகக் கூறப்படும்.* பச்சடி போன்ற வேகாத ஆணமும் உண்டெனவறிக.

---

* வ்யஞ்சனம் என்னும் வடசொல் வெளிப்படுத்துதல் (manifest) என்பதை வேர்ப் பொருளாகக் கொண்டிருப்பதையும், வெஞ்சணம் என்னும் தென்சொல் தமிழ்நாட்டில் பார்ப்பனத் தொடர்பற்ற மக்களிடையே வழங்குவதையும், கவனிக்க.

கும்—குமை. குமைதல்=குழம்புதல்.

குள்—குழ—குழம்பு=பல சரக்குகள் கலந்த கூட்டு.

குழம்பு கூட்டுதல் என்னும் வழக்கைக் காண்க. குழம்பு—குழம்பல்.

கூள்—கூட்டு

குல—கல—கலவை, கல—கலம்பு—கலம்பம்—கதம்பம் =பலவகைப் பூக்கள் கலந்த மாலை.

கலம்பு—கலம்பகம்=பல உறுப்புக்கள் கலந்து வருஞ் செய்யுள் நூல்.

(சூர்)—சார்—சாறு=குழம்பு.

ii. கலக்கம்

பல பொருள்கள் ஒன்றாகக் கலக்கும்போது கலக்கம் உண்டாகின்றது. பொருட் கலக்கத்தால் சிலவிடத்து மனக்கலக்கமும் விளைகின்றது.

நீரு மண்ணுங் கலப்பது கலங்கல். அதுபொருட்கலக்கம். பல ஆட்கள் கூடியிருக்கும்போது குறிப்பிட்ட ஒருவர் யார் என்று தெரியாது திண்டாடுவதும், பல வழிகள் கூடுமிடத்தில் செல்லவேண்டிய வழி எதுவென்று தெரியாது மயங்குவதும், ஒன்றைச் செய்வது அதை விட்டுவிடுவது என்னும் எண்ணங்கள் மனத்தில் தோன்றும் போது ஒன்றைத் துணியாது ஊசலாடுவதும், மனக்கலக்கமாம்.

உழம்புதல்=பலவோசை கலந்தொலித்தல், குழம்புதல்.

உழப்புதல்=சொல்லால் மழுப்புதல்.

குல—கல—கலங்கு—கலங்கல்.

கலங்கு—கலக்கு—கலக்கம்.

கல்—கலுழ்—கலுழி=கலக்கம், கலங்கல்நீர்.

கலுழ்தல்=கலங்குதல், கண்கலங்கி அல்லது மனங்கலங்கி அழுதல். கலுழ்—கலிழ்.

கலுழ்—கலுழன்=வெள்ளையுஞ் சிவப்புமாகிய இரு நிறங் கலந்த பறவை. கலுழன்—கருடன் (வ).

குழம்பு—குழப்பு—குழப்பம்.

குழு—கழு—கழும்=மயக்கம்.

"கழுமென் கிளவி மயக்கஞ் செய்யும்" (தொல். உரி. 53)

குழு—கூழ்=கலக்கம். கூழ்த்தல்=ஐயுறுதல்.

"அவனிவ னென்று கூழேன்மின்" (திவ். திருவாய். 3, 6, 9)

கூழ்படுதல்=கலக்கமுண்டாதல்.

"செல்படை யின்றிக் கூழ்பட வறுப்ப"
(பெருங். மகத. 27, 31)

குழு—கெழு. கெழுவுதல்=பொருந்துதல், மயங்குதல்.

(சுள்)—செள்—செரு—செருக்கு—செருக்கம்—செருக்கல்=கள் மயக்கம்.

செருக்கு=மயக்கம், மதம், அகங்காரம். செருக்கம்=கள்மயக்கம். செருக்கு—தருக்கு.

துதைதல்=செறிதல், கூடுதல். ததுமல்=கூட்டம், குழப்பம்.

முள்—முய—முயங்கு—மயங்கு—மயக்கம்.

முயங்குதல்=கூடுதல். மயங்குதல்=கூடுதல், கலத்தல்.

வேற்றுமை மயக்கம்=ஒரு வேற்றுமை யுருபு மற்றொரு வேற்றுமைப் பொருளிற் கலத்தல்.

திணைமயக்கம்=ஒரு திணைப் பொருள் மற்றொரு திணைநிலத்திற் கலத்தல்.

முல்—மல்—மல. மலத்தல்=மயங்குதல்.

மல—மலங்கு—மலக்கு—மலக்கம்=மயக்கம்.

மலங்கு=பாம்புடம்பும் மீன் வாலும் கலந்த நீருயிரி.

மலங்கு—விலங்கு—விலாங்கு.

மலங்கு—மதங்கு — மதக்கம் = மயக்கம். மதங்கு — மறங்கு. மறங்குதல்=மயங்குதல்.

மல—மலை—மலைவு. மலைத்தல்=மயங்குதல்.

மலம்—மதம்—மறம்=மயக்கம். மதம்—மதர்.

முள்—மள்—மரு—மருள்=மயக்கம். மருள்—மருட்கை=மயக்கம், வியப்பு, வியப்புச்செயல்.

மரு — மருமம்—மம்மம்—மம்மர் = மயக்கம்.

மம்மம் — மம்மல் = அந்திநேரம், மயக்கம், காமம், கல்லாமை.

மரு—மறு—மறுகு—மறுக்கம் = மயக்கம். மறுகுதல் = கலத்தல், மயங்குதல். மறுகு = பல பண்டங்களும் மக்களும் கூடும் பெருந்தெரு. மறுகு—மறுகை.

மல்—மால் = மயக்கம், காதல், பித்து. மால்—மாலம் = மயக்கும் வித்தை, பொய் நடிப்பு (மாய்மாலம்).

மால்—மான் = மயக்கம்.

மான்றல் = மயங்குதல்.

மால்—மாலை = பல பூக்கள் கலந்த தொடை, பல மணிகள் கலந்த கோவை, இரவும் பகலுங் கலக்கும் அந்தி வேளை. மருண்மாலை என்னும் வழக்கை நோக்குக.

மால்—மார்—மாரம் = மயக்கம், மாறாட்டம்.

மாரன் = காதல் மயக்கத்தை யுண்டுபண்ணுபவன்.

மள்—மாள்—மாழ் — மாழ்கு. மாழ்குதல் = மயங்குதல்.

மாழ்—மாழா. மாழாத்தல் = மயங்குதல்.

மாழ் = மாழை = மருட்சி, மயக்கம்.

முயங்கு—மயங்கு—மசங்கு. மயங்குபொழுது = அந்தி வேளை.

மசங்கு—மசங்கல் = அந்திப்பொழுது.

முய — மய்—மச—மசகு = திகைப்பு, மயக்கம்.

மச—மசள்—மசண்டை = அந்திப்பொழுது.

மச—மசக்கை = கருப்பிணிகள் அடையும் மயக்கம்.

மய—மயல் = மயக்கம், காதல். மயல் — மையல் = காதன் மயக்கம்.

மயல்—மயர் — மயர்வு = மயக்கம்.

முள் — (முறு) — விறு — வெறு — வெறி = மயக்கம். வெறுத்தல் = செறிதல், கூடுதல்.

iii. மதிமயக்கம்

குள்—கள் = மயக்கம், மயக்கச் சரக்கு.

களித்தல் = கட்குடித்தல், வெறித்தல். களி = கட்குடியன்.

களி—களிறு = மதமுள்ள ஆண் யானை.

மருள் = மதிமயக்கம், மதிப்புலனற்ற எச்சப் பிறவி; மருளாளி—மருள்கொண்ட தேவராளன்.

மதம் = யானையின் மதிமயக்கம். மதம் — மத்தம் = பித்து.

உன்மத்தம் = கடும்பித்து. உன்மத்தம் — ஊமத்தை = பித்த நோய் மருந்து.

மல = மத—மது = கள், தேன்; மது—மதுர்—மதுரி; மதுரித்தல் = இனித்தல்.

மதுர்—மதுரம். மது—மத்து—மட்டு = கள், தேன்.

மத—மதி = மயக்கந்தரும் நிலவு, திங்கள். ஒ. நோ. E. lunacy from L. luna = moon.

மதி—மாதம்—மாசம் (வ.).

மதி—மதிரை—மதுரை = வதிக்குலவரசர் தலைநகர்; ஒ. நோ. குதி—குதிரை.

மசள்—மசணை = மந்தன்.

வெறித்தல் = கட்குடித்து மதிமயங்குதல்.

வெறி = மயக்கம்.

iv. கருமை

நடக்கும் வழி தெரியாமலும், எதிருள்ள பொருள் தெரியாமலும், நச்சுயிரி பேய் கள்வர் முதலியவற்றிற்கு அஞ்சியும், மயங்குதற்கிடமானது கரிய இருளாதலால், மயக்கக்கருத்தில் கருமைக் கருத்தும் இருட் கருத்தும் ஒருங்கே தோன்றின. மயக்கமே மனத்திற்கு ஓர் இருள் போன்றதாம்.

உல்—அல் = கருமை, இருள். இரவு.

"அல்லார்ந்த மேனியொடு குண்டுகட் பிறையெயிற்
றசபாச வடிவமான அந்தகா" (தாயுமானவர் பாடல்).

உல்—இல்—இர்—இரா—இரவு. இர்—இருள்—இருட்டு.

"இருள்நிறப் பன்றி" (தொல்; 1568)

இர்—இரு—இரும்பு=கரிய தாது.

இரு—இறு—இறடி = கருந்தினை. இறு—இறுங்கு= காக்காய்ச் சோளம்.

குல்—கல்—கால்=கருமை.

குள்—கள்—கள்வன்=கருநண்டு.

"புள்ளிக்கள்வன்" (ஐங்; 21)

கள்—களம்—(களங்கு)—களங்கம்=கருமை, நிலாவின் கறை.

கள்—காள்—காளம்=கருமை.

காள்—காளி=கரியவள் (கருப்பாய்).

காள்—காழ்=கருமை. காழ்—காழகம்=கருமை.

காழ்த்தல்=கருத்தல், கருத்து வயிரங் கொள்ளுதல், உரத்தல்.

காழ்—காய்=காயம்=கருமை, கரிய விண்.

"விண்ணென வரூஉங் காயப் பெயர் வயின்" (தொல். எழுத். 305)

காயம்—ஆகாயம் (வ.)

கள்—கரு—கருப்பு=கருமை, பேய். கரு—கரும்பு.

கரு—கரம்பு—கரம்பை=காய்ந்த களிமண்.

கரு—கரி=கருத்தது. கரி—கரிசு—கரிசல்=கருநிலம்.

கரு—கறு—கறை=கருப்பு. கறுத்தல்=சினத்தாற் கருத்தல், சினத்தல்.

"கறைமிடற்றோன்"=கண்டங் கரிய சிவன்.

கரு—கார்=கருமை, முகில்.

கார்—காரி=கரிய எருது, கரிய சனி.

கார்—காறு. காறுதல்—கருத்தல், வயிரங்கொள்ளுதல்.

கரு—கருகு—கருக்கு. கருகுதல்=வெப்பத்தால் கருத்தல்.

கரு—கருவல், கருத்தை.

கருக்கு—கருக்கல்=விடிகாலைக் கருக்கிட்டு.

முல் — மல் — மால் = கருமை, திருமால் (கரியோன்), முகில், மால்—மழை. மால்—மாலம் = கருப்பு, பேய்.

மால்—மார்—மாரி = காளி, முகில் மழை.

மால்—மான்—மானம்—வானம் = முகில், மழை, விண்.

மான்—வான் = முகில், மழை, விண்.

மால் — மா = கருமை.

முள் — மள் — மாள் — மாய் — மாயோன் (திருமால்), மாயோள் (காளி). மாய்—மாயம் = கருமை.

மள்—(மய்)—மை = கருமை, முகில், காராடு, கரிய குழம்பு.

மை—மயில் = கரு (நீல) நிறத் தோகையுள்ள பறவை.

மயில்—மயிலை = கருமை கலந்த வெள்ளைக்காளை.

மை — மயிர் = கரிய முடி.

மை — மயி — மசி = கரிய குழம்பு. தஞ்சை நாட்டார், எழுதும் மையை மசி யென்றே கூறுவர்.

மசி—மசகு = வண்டி மை.

மசகு—மசகம் = மயிர்.

மச்சு—மச்சம் = கரும்படர். மை—மஞ்சு = முகில்.

முள்—மள் = மண் — மணி = கரியது, நீலக்கல். மணி வண்ணன், மணிமிடற்றோன் முதலிய பெயர்களை நோக்குக.

மள்—மரு—மறு = உடம்பிலுள்ள கரிய புள்ளி.

மாழ்கு — மாகு — மாகம் = கரிய விசும்பு.

மாகம்—நாகம்—நாகர். நாகநாடு = விண்ணுலகம்.

V. குற்றம்

உடம்பிலுள்ள அழுக்கு பெரும்பாலும் கருநிறமா யிருப்பதாலும், வெள்ளாடையிற் படும் கரு நிறம் மதியின்கண் மறுப்போல் தோன்றுதலாலும், கருமை குறித்த சில சொற்கள் அழுக்கையும் அழுக்குப்போன்ற குற்றத்தையும் குறிக்கும்.

கரி—கரில் = குற்றம். கரி—கரிசு = குற்றம், பாவம்.

கள்—களங்கு—களங்கம் = குற்றம்.

கறு—கறை=குற்றம்.

காழ்=காசு=, ,,

மல்—மலம்=அழுக்கு, பவ்வீ.

மள்—மரு—மறு=குற்றம். மச்சு=குற்றம்.

மயல்=அழுக்கு. மயல்—மயலை=அழுக்கு.

மாழ்—மாசு=குற்றம். ஒ. நோ. காழ்—காசு.

மை=குற்றம்.

vi. மறைவு

கருமையில்பட்ட பிறநிறமும் இருண்ட இடத்திலுள்ள பொருள்களும் கண்ணிற்குத் தெரியாது மறைந்திருப்பதால், கருமைக் கருத்தில் மறைவுக் கருத்துத் தோன்றும்.

கள்—கள்ளம்=மறைவு, திருட்டு, வஞ்சனை. கள்—கள்ளன்=திருடன்.

கள்—கள்வு—களவு=மறைவு. திருட்டு.

கள்வு—கள்வன்=திருடன்.

கள்—(கர்)—கர—கரவு—கரவடம்=களவு. கரத்தல் =மறைதல், மறைத்தல். கரவு=வஞ்சகம், களவு.

மறுத்தல்=இல்லையென்று சொல்லால் மறைத்தல்.

மறு—மற. மறத்தல்=மனத்தில் மறையப் பெறுதல்.

மறு—மறை. மறை=பொதுமக்கட்கு மறைந்திருக்கும் செய்திகளையும் உண்மைகளையும் கொண்ட நூல்.

"நரம்பின்மறை"=இசை நூல்.

மால்—மாலம்=பாசாங்கு. மாள்—மாய்—மாயம்= மறைவு, வஞ்சனை. மாய்—மாயை=ஆன்மாவின் அறிவை மறைப்பது. ஒ. நோ. சாய்—சாயை.

மாயமான்=வஞ்சனையுள்ள மான். மாயமாய் மறைந்து விட்டது என்பது வழக்கு. மாயவித்தை மாயமாலம் முதலிய பெயர்களை நோக்குக.

## (ரு) காணல் துறை

அகக் கண்ணாற் காணலும் புறக்கண்ணாற் காணலும் எனக் காணல் இருவகை. முன்னது கருதல்; பின்னது நுகர்தல்.

4. கண்டறிதல்

கண்டறிதலாவது புறக்கண்ணாற் காணல்.

''கண்டுகேட் டுண்டுயிர்த் துற்றறி'' வதெலாம் கண்டறிவேயாயினும், ஐவகை நுகர்ச்சிப் பொருள்களின் வடிவையும் காணுதற் சிறப்புப் பற்றிக் கண்ணின் தொழிலே காட்சி என விதந்து கூறப்படும்.

ஐம்புலன்களும் பொருள்களொடு பொருந்துவதனாலேயே நுகர்ச்சியும் அறிவும் ஏற்படுகின்றன.

(உள்)— அள்— அறி— அறிவு.

குள் — கள். களுதல் = பொருந்துதல்.

கள் — கரு — கரி = கண்டவன் (சாட்சி).

கள் — கண் = காணும் பொறி. கண்ணுதல் = பார்த்தல் (நாமதீப நிகண்டு).

கண் — காண் — காட்சி = பார்வை, அறிவு.

காண் — காணம் = மேற்பார்வை.

காண் — காணி. காணித்தல் = மேற்பார்த்தல்.

கண்காணி — கண்காணம். கண்காணி = மேற் பார்ப்பவன்.

துல் — துன்று — தோன்று. தோன்றுதல் = கண்ணொடு பொருந்துதல், தெரிதல், உருக்கொளல், உதித்தல், பிறத்தல்.

புல்லுதல் = பொருந்துதல்.

புல் — புலம் — புலன் = பொருந்தியறியும் அறிவு.

புலம் = அறிவு, அறிவு நூல், இலக்கணம்.

புலம் — புலமை. புலம் — புலவன்.

புலனாதல் = அறியப்படுதல். புலப்படுதல் = புலனொடு பொருந்துதல்.

புலம் — புலர். புலர்தல் = கண்ணுக்குத் தெரிதல், விடிதல்.

புலர் — புலரி = விடியல்.

புலர் — பலர் — பலார். பலாரென்று விடிந்தது என்பது வழக்கு.

11. கருதியறிதல்

கருதி யறிதலாவது அகக் கண்ணாற் கண்டறிதல்.

மனம் ஒரு பொருளொடு அல்லது செய்தியொடு பொருந்துதலே கருதலாம்.

உத்தல் = பொருந்துதல்; உத்தி = பொருத்தம், பொருந்துமுறை, பொருத்தமாகக் கொள்ளும் ஊகம்.

உன்னுதல் = பொருந்துதல், கருதுதல், தியானித்தல்.

உன் — உன்னம் = தியானம்.

உன்னித்தல் = பொருத்தமாக ஊகித்தல்.

உறுதல் = பொருந்துதல், கருதுதல்.

ஓர்தல் = பொருந்துதல், கருதுதல்; கருதியறிதல்.

குள் — கள் — (கரு) — கருது — கருத்து. கள்ளுதல் = கூடுதல், பொருந்துதல்.

கள் — கண். கண்ணுதல் = பொருந்துதல், கருதுதல், மதித்தல்.

கண் = கண்ணியம் = மதிப்பு.

(சுள்) — செள் — செ. செத்தல் = பொருந்துதல், ஒத்தல், கருதுதல். செத்தல் = கருதுதல்.

''அரவு நீருணல் செத்து'' (கலித். 45).

''வெப்புடையாடூஉச்செத்தனென்'' (பதிற்றுப். 86).

செத்தல் = ஒத்தல்.

''வெள்ளாங் குருகின் பிள்ளை செத்து'' (ஐங். 151).

செ — செத்து — சித்து. ஒ. நோ. ஒத்து. செந்துரம் — சிந்துரம்.

சித்து = கருத்து, அறிவு, கருதியதை அடையும் திறம். சித்து — சித்தன்.

முன்னுதல் = பொருந்துதல், கருதுதல் முன் — முன்னம் = கருத்து, குறிப்பு.

முன் — மன். மன்னுதல் = பொருந்துதல், கருதுதல்.

மன் — மனம் = கருதும் அகக்கரணம்.

மன்னுந்திறம் மந்திரம். திரம்=திறம். றகரத்திற்கு முந்தியது ரகரம்.

மன்+திரம்=மந்திரம்=கருத்து வலிமை, எண்ணத்தின் திண்ணம்.

உள்ளத்தை அல்லது ஆசையை அடக்கிய முனிவன், தன் கருத்து வலிமையால் தான் கருதியதை நிறைவேற்று மொழியும், தான் கண்டுபிடித்த தப்பாத உண்மைகளைச் சொல்லுமொழியும், மந்திரமாகும்;

"நிறைமொழி மாந்தர் ஆணையிற் கிளந்த
மறைமொழி தானே மந்திரம் என்ப"

(தொல்; செய். 178).

நிறைமொழி மாந்தர் மறைமொழி கருத்து வலிமையொடு கூடியது என்பதை "ஆணையிற் கிளந்த" என்னுந் தொடர் குறிப்பாய் உணர்த்தும். கருத்து வலிமையொடு கூடாவிடத்து ஒரு மொழியும் ஒரு பயனும் உறாது. மந்திரம் வாய்மொழி எனவும் படும். வாய்மையான மொழி அல்லது வாய்க்கும் மொழி வாய் மொழி. திருமூலர் அருளிய திருமந்திரமும் நம்மாழ்வார் இயற்றிய திருவாய்மொழியும், கவுந்தியடிகள் இரு பரத்தரைச் சவித்த மொழிகளும் போல்வன, மந்திரங்களாம். மந்திரத்தைக் காட்டும் மொழியையும் மந்திரம் என்றது ஓர் ஆகு பெயர்.

"எண்ணிய எண்ணியாங் கெய்துப எண்ணியார்
திண்ணிய ராகப் பெறின்" (குறள். 666).

ஆதலால், திண்ணிய வுள்ளத்தின் வழிப்பட்டதே வாய்மொழி என அறிக. மனத்துக்கண் மாசிலனான ஒருவன், ஒருவரை வாழ்விக்கவோ சாவிக்கவோ வாய் திறந்து ஒன்றைச் சொல்ல வேண்டுவதில்லை. உள்ளத்தில் உள்ளினாலும் போதும். கடவுளை வேண்டும் மன்றாட்டு எங்ஙனம் உரையின்றி உள்ளத்திலும் நிகழ முடியுமோ, அங்ஙனமே மந்திரமும் என்க.

"நிறைமொழி மாந்த ராணையிற் கிளந்த" என்னுந் தொல்காப்பியச் சூத்திரத்திற்குப் பேராசிரியர் உரைத்த உரை வருமாறு :—

"இது மந்திரச் செய்யுளுணர்த்துதல் நுதலிற்று. "இதன் பொருள் :—நிறைமொழி மாந்தரென்பது, சொல்லிய

சொல்லின் பொருண்மை யாண்டுங் குறைவின்றிப் பயக்கச் சொல்லும் ஆற்றலுடையார் என்றவாறு. அவர் ஆணையாற் கிளக்கப்பட்டுப் புறத்தார்க்குப் புலனாகாமன் மறைத்துச் சொல்லுஞ் சொற்றொடரெல்லாம் மந்திர மெனப்படும் என்றவாறு.

''அவை வல்லார்வாய்க் கேட்டுணர்க. 'தானே' என்று பிரித்தான், இவை தமிழ் மந்திரமென்றற்கும், பாட்டாகி அங்கதமெனப்படுவனவும் உள, அவை நீக்குதற்குமென உணர்க. அவை :—

''ஆரிய நன்று தமிழ்தீ தெனவுரைத்த
காரியத்தாற் காலக்கோட் பட்டானைச்—சீரிய
வந்தண் பொதியி லகத்தியனா ராணையாற்
செந்தமிழே தீர்க்க சுவா''

எனவும்,

''முரணில் பொதியின் முதற்புத்தேள் வாழி
பரண கபிலரும் வாழி—யரணிய
லானந்த வேட்கையான் வேட்கோக் குயக்கோட
னானந்தஞ் சேர்க சுவா''

எனவும்,

''இவை தெற்கண் வாயில் திறவாத பட்டிமண்டபத்தார் பொருட்டு நக்கீரர் ஒருவன் வாழவும் [ஒருவன்] சாவவும் பாடிய மந்திரம் அங்கதப் பாட்டாயின மேல் 'பாட்டுரை நூல்' (391) என்புழி அங்கதமென்றோதினான் இன்ன மந்திரத்தை. இஃது ஒருவனை இன்னவாற் றாற் பெரும்பான்மையுஞ் சபித்தற் பொருட்டாகலின் அப் பெயர்த்தாயிற்று. இக் கருத்தே பற்றிப் பிறரும்,

''நிறைமொழி மாந்தர் பெருமை நிலத்து
மறைமொழி காட்டி விடும்''

(குறள். 28.)

என்றாரென்க''.

அமைச்சன் அரசியற் கருமங்களை எண்ணும் அல்லது சூழ்ந்திறனும் மந்திரம் எனப்படும். திறமையாகச் சூழ்ந்து தப்பாது வாய்க்கும் வழிவகைகளைச் சொல்லுதலால், அமைச்சன் அரசற்குக் கூறும் அறிவுரையும் மந்திரம் எனப்பட்டது. மந்திரம் கூறுபவன் மந்திரி.

''மந்திரிக் கழகு வரும்பொரு ளுரைத்தல்''

என்றார் அதிவீரராம பாண்டியரும்:

iii. கருதும் மாந்தன்

மாந்தனை மற்ற வுயிரிகளினின்று வேறுபடுத்திக் காட்டுவது மன்னுந்திறனாகிய பகுத்தறிவே. இயங்கும் உயிரிகட்கெல்லாம் கருதுந் திறமிருப்பினும், அது மாந்த னிடத்திற்போல் மற்ற வுயிரிகளிடத்தில் வளர்ச்சியடைய வில்லை.

"மக்கள் தாமே ஆறறி வுயிரே"

என்றார் தொல்காப்பியர் (1532).

பொருள்களை உயர்திணை அஃறிணை என் இலக்கண நூலார் இரு பகுப்பாகப் பகுத்ததும், அங்ஙனம் பகுத்தற் கேற்ப முன்னரே பொதுமக்கள் அவற்றின் வினைகளைக் குறிக்கும் சொற்களை வெவ்வேறு விகுதி கொடுத்துக் கூறி வந்ததும், அவற்றின் பகுத்தறி வுண்மை யின்மை பற்றியே. மன்னுந்திறம் சிறந்திருத்தல் பற்றியே மாந்தன் மன் எனப் பட்டான்.

ஆங்கிலச் சொல்லாராய்ச்சியாளரும் man என்னும் பெயருக்கு thinking animal என்றே பொருட் காரணங் காட்டுவர். (E. man, from A. S. munan, to think.)

மன் = மன்னும் (கருதும்) உயிரியாகிய மாந்தன்.

மன்பதை = மக்கட் கூட்டம்.

மன்னுயிர் = மக்கட் குலம்.

"நின்னளந் தறிதல் மன்னுயிர்க் கருமையின்"
(திருமுரு. 278)

என்றார் நக்கீரர்.

"தம்மில்தம் மக்கள் அறிவுடைமை மாநிலத்து
மன்னுயிர்க் கெல்லாம் இனிது" (குறள், 68)

என்றார் திருவள்ளுவர்.

"மன்னுயிர்" என்பதற்கு "மன்னாநின்ற வுயிர்" என்று பரிமேலழகர் உரைக்கும் உரை பொருந்தாது. மன்னாநிற்றல் = நிலைபெறுதல்.

மன்—மான்—மானவன் = மாந்தன்

மன்—மநு (வ.).

## (கூ) பொருத்தல் துறை

பல உறுப்புக்களையும் பகுதிகளையும் பொருத்துவது பொருத்து.

### 1. உறுப்புப் பொருத்து

குள் — கள் — கண் — கணு. கண் — கணை. கணுக்கால்=கணைக்கால். கள் — களம் = உடம்பையும் தலையையும் பொருத்தும் கழுத்து.

களம் —(களத்து)—கழுத்து.

கள்—கட்டு

குள்—கொள்—கொளை=பாட்டு.

புல் — பொல் — பொரு — பொருந் — பொருந்து — பொருத்து.

புள்—(பூள்)—பூண்—பூட்டு. புள் — (புண்) — புணர் — புணர்ப்பு.

புள் —பொள்—பொட்டு=நெற்றியெலும்புப் பொருத்து.

முள்—முளி=முட்டு, கணு.

முளி—முழி—மொழி=கைமுட்டு, கரும்புக்கணு.

முழி+கை=முழங்கை. முழி+கால்=முழங்கால்.

முழி—முழம்=முழங்கையளவு.

முள்—முட்டு=கை காற் பொருத்து.

முட்டு — முட்டி = முழங்காற் பொருத்து, கைக்கணு, மடக்கிய முட்டிக் கையாற் செய்யும் மற்போர்.

முட்டு—முடு— மடு—மடை=பொருத்து, கொளுத்து.

முட்டு—மூட்டு=பொருத்து.

முண்டு=மரக்கணு, உடற்சந்து. முண்டு—முண்டம்=கணுக்காற் பொருத்து.

கட்டுதல்

(உள்)—இள்—இழை—இணை. (இள்) — இய் — இயை — இசை, இசைத்தல்=கட்டுதல்.

குள்—கள்—கட்டு. கட்டு—கட்டில்.

கட்டு—கட்டணம்=பாடை.
புள்—(புண்)—புணை—பிணை.
புண்—புணர். புணர்த்தல்=கட்டுதல்.
புண்—புணி—பிணி. பிணித்தல்=கட்டுதல்.
புள்—பொள்—பொட்டு—பொட்டணம்=கட்டு.
பொட்டணம்—பொட்டலம்.
முள்—முட்டு—மூட்டு—முட்டை.

ii. முடைதல்

உல்—அல். அல்லுதல்=கூண்டு முடைதல்.
குள்—(குய்)—குயில். குயிலுதல்=நெய்தல், பின்னுதல்.
நுள்—நெள்—நெய்—நெயவு—நெசவு.
புல்—பொல்—பொரு—பொருந்து—பொருத்து.
புல்—(புன்)—பின்.
முள்—முடு—முடை. முடைதல்=பின்னுதல்.

iii. தைத்தல்

உத்து—அத்து. அத்துதல்=தைத்தல்.
ஒட்டுதல்=தைத்தல்.
குத்துதல்=தைத்தல்.
துன்னுதல் = தைத்தல். துன் — துன்னம் = தையல். துன்னகாரன்—தையற்காரன்.

துள்—(தள்)—(தய்)—தை. தைத்தல்=துணி பலகை முதலியவற்றை இசைத்தல்.

தை—(தைச்சு)—தச்சு—தச்சன்.

வண்டிக் குடத்தில் ஆரைகளைப் பொருத்தலைத் தைத்தல் என்பர்.

பொள்—பொட்டு—பொத்து.

பொத்துதல்=மூட்டுதல். பொல்லம் பொத்துதல் என்னும் வழக்கைக் காண்க.

முள்—மூள்—மூட்டு—மூட்டை—மூடை = மூட்டப்பட்ட கோணிப்பை, மூட்டுதல்=தைத்தல்.

## (ஏ) மூடல் துறை

மூடலாவது. கொள்கலங்களின் வாயையும் போர்ப்பவற்றின் ஓரங்களையும் பொருத்தி மறைத்தல்.

i. மூடுதல்

உம்—உமி. உமிதல்=வாய் மூடி எச்சில் உமிழ்தல்; உமி—உமிழ்.

சுள்—(சூர்)—சார்த்து—சாத்து. சாத்துதல்=மூடுதல்.

தும்—துமி. துமிதல்=உமிதல். தூர்த்தல்=குழியையும் துளையையும் மூடுதல்.

பொது—பொத்து. பொத்துதல்=மூடுதல், மறைத்தல். பொது—பொதுக்கு. பொதுக்குதல்=மறைத்தல.

முள்—மூழ். மூழ்ந்தல்=மூடுதல். மூழ்—மூழல்=மூடி.

மூழ் — மூடு — மூடி. மூடு—மூடம்—மோடம்=வானம் மூடிய மந்தாரம், மந்தாரம் போன்ற மடமை.

மூடு=அறிவிலி; மூடம்—மூடன்.

மூழ்—மூய். மூய்தல்=மூடுதல், வாய்மூடி எச்சில் உமிழ்தல்.

மூய் — மொய். மொய்த்தல்=மூடுதல்.

ii. மூடிய பொருட்கள்

உம்—உமி=நெல்லை மூடியுள்ள தொலி.

உம் - ஊம்=வாய்பேசாத ஊமை.

ஊம்—ஊமை. ஊம்—ஊமன்.

வாய் பேசாதவனை வாயை உம் என்று வைத்துக் கொண்டிருக்கிறான் என்பர்.

கும்—கொம்மை=கம்பு தினை கேழ்வரகு முதலியவற்றின் உமி.

சும்—சொங்கு=சோள உமி.

மூழ்—மூகு—மூகன்=ஊமையன். மூகு—மூங்கு=ஊமை.

மூங்கு—மூங்கை=ஊமை.

மூகு—மூகா. மூகாத்தல்=ஊமையாயிருத்தல்.

iii. போர்த்தல்

உறு—உறை.

குள்—குடி=சட்டை.

கும்பு—குப்பு—குப்பா=தூரிப்பை.

குப்பு—குப்பாயம்=மெய்ப்பை, சட்டை. குப்பாயம்—குப்பாசம்.

சுல்—(சோல்)—சால்—சால்வை=போர்வை.

பொரு—போர்—போர்வை.

பொரு—பொது—பொதி. பொதிதல்=போர்த்தல்.

பொதி—பொதிர். பொதிர்தல்=போர்த்தல்.

(அ) பற்றல் துறை

பற்றலாவது, கை கால் முதலிய உறுப்புக்களைப் பிற பொருள்களோடு பொருந்திப் பிடித்தல். மனத்தில் ஒன்றைக் கொள்ளுதலும் பற்றுதலோடொக்கும்.

i. பிடித்தல்

விரல்களைப் பொருத்தி ஒரு பொருளைப் பற்றுதலே பிடித்தல். பிற வுறுப்புக்களால் ஒன்றைப் பற்றுதலும் ஒப்புமைபற்றிப் பிடித்தல் எனப்படும்.

குள்—கொள். கொள்ளுதல்=பற்றுதல். கொள்—கோள். ஏறுகோள் தீக்கோள் முதலியவற்றை நோக்குக.

கொள்கொம்பு—கொழுகொம்பு=பற்றுக்கோடு.

குது—கது—கதுவு. கதுவுதல் = பற்றுதல். கது—காது=ஒலியைப் பற்றும் செவி.

புல்—(புற்று)—பற்று.

புள்—(பிள்)—பிண்டி—பிண்டம். பிண்டம்=திரட்சி. பிண்டித்தல்—கைக்குள் சோற்றை அல்லது மாவைத் திரட்டுதல், சேர்த்தல், பிடித்தல். பிண்டி—பிடி. ஒ. நோ. கண்டி—கடி. தண்டி—தடி.

"பிள்ளையார் பிடிக்கக் குரங்காய் முடிந்தது". என்னும் பழமொழியையும், பொரிவிளங்காய் பிடித்தல்,

கொழுக்கட்டை பிடித்தல், முதலிய வழக்குக்களையும் நோக்குக.

பிடித்தல்=கைக்குள் திரட்டுதல், கைக்குள் மாத் திரளையைத் திரட்டுதல் போல் ஒன்றைப் பற்றுதல், கையிற் பிடித்துக்கொண்டதுபோல் அளவைக் குறைத்தல்.

பிடி=பிடிக்கப்படும் காம்பு அல்லது அடிப் பகுதி, கைக்குள் பிடிக்கும் அளவு.

சட்டை முதுகிற் பிடிக்கிறது, சோறு பானையடியிற் பிடித்துக்கொண்டது. வீட்டில் தீப்பிடித்து விட்டது, சம்பளத்தில் ஓர் உருபாவைப் பிடித்துவிட்டார்கள், எனக்குப் புழுங்கலரிசிதான் பிடிக்கும், என்பன போன்ற வழக்குக் களெல்லாம் உண்மையாகவும் அணி வகையிலும் பற்றற் பொருளையே குறித்தல் காண்க.

பொல்— (பொற்று) — பொற்றி — பொறி = பிடிக்குங் கருவி, சூழ்ச்சியம், இயந்திரம். எலிப்பொறி புலிப்பொறி முதலியவற்றை நோக்குக. ஐம்புலவுறுப்புக்களும் பொருள் களின் தன்மையைப் பிடித்தலின், பொறியெனப்பட்டன.

ii. கொள்ளுதல்

ஒருவர் ஒன்றைப் பெற்றபின் அதைக் கையிற் கொள்ளுதலால், கொள்ளுதல் என்னுஞ் சொல், விலையின்றிப் பெறுதலையும் விலைக்கு வாங்குதலையுங் குறிக்கும். விலையின்றிப் பெறுதல், வந்ததைப் பெறுதலும் வலிந்து பெறுதலும் என இரு வகைத்து.

கொள்ளுதல்=பெறுதல், வாங்குதல், விலைக்கு வாங்குதல்.

கொள் — கொள்ளை = கொள்ளும் விலை.

கொண்டான் = பெற்றவன், விலைக்கு வாங்கினவன், ஒருத்தியை மனைவியாகக் கொண்டவன்.

கொள்—கொண்கு—கொண்கன் = கணவன்.

கொள் — கொள்வு — கொள்வனை.

கொள்—கொள்நன்—கொழுநன் = கணவன்.

கொழுநன் — கொழுந்தன் = கொழுநனொடு கூடப் பிறந்தவன். கொழுந்தி (பெ. பா.).

கொள்—கொள்ளை=பெருவாரியாக வலிந்து கொள்வது (சூறை), பெருவாரியாக உயிர்களைக் கொள்ளும் நோய்.

கொள்—கொண்டி=கொள்ளை.

கொள்—கோள்=கொள்ளை. ஆகோள் நிரைகோள் முதலிய வழக்குக்களைக் காண்க.

கொள்—கோள்—கோடல். சூறைகோடல்=கொள்ளையடித்தல்.

கொள்ளுதல் = மனத்திற்கொள்ளுதல், கருதுதல், நம்புதல்.

கொள் — கோள்=கருத்து. கொள் — கொள்கை = கருத்து, நம்பிக்கை. கோட்பாடு=குறிக்கோள், நெறிமுறை.

iii. கொளுத்துதல்

கொளுத்துதலாவது ஒன்று இன்னொன்றைக் கொள்ள வைத்தல்; அதாவது பற்றவைத்தல்.

குள்—கொள்—கொளுவு—கொளுவி. கொள்—கொண்டி =கொளுவி.

கொள்—கொளு. கொளுத்துதல்=பற்றவைத்தல்.

அறிவு கொளுத்துதல் தீக் கொளுத்துதல் என்னும் வழக்குக்களைக் காண்க.

கொள்—கோள்=கொளுத்துகை, குறளை.

தீக்கோள் கோள்மூட்டுதல் முதலிய வழக்குக்களைக் காண்க.

கொள்—கொட்கு—கொட்கி—கொக்கி=கொளுவி.

கொள்ளி=நெருப்புப் பற்றிய கட்டை, கலகமூட்டுபவன்.
பொல்—பொரு—பொருந்து—பொருத்து.

விளக்குக் கொளுத்துதல் விளக்குப் பொருத்துதல் என்னும் வழக்குக்களைக் காண்க.

முள்—மூள்—மூட்டு: தீப்பற்றவைத்தல் தீ மூட்டுதல் என்பன வழக்கு. மூட்டுதல்=பொருத்துதல்.

மூட்டு—மூட்டம்.

மூட்டு—மாட்டு. மாட்டுதல்=கொளுவுதல், தீப்பற்ற வைத்தல். மாட்டு=மாட்டி. தலைப்பாகை மாட்டி சட்டை மாட்டி என்பன மாட்டுங் கருவிகள்.

மாட்டு—மாட்டல்=தலைமுடியில் மாட்டும் அணி.

மாட்டு=செய்யுளில் ஓரிடத்திலுள்ள தொடரை மற்றோரிடத்திலுள்ள தொடரொடு பொருத்திப் பொருள் கோடல்.

iv. கொல்லுதல்

அரிமா புலி முதலிய விலங்குகள் ஓர் உயிரைக் கொல்லற்கே பற்றுதலானும், கொல்லும் விலங்குகளும் மக்களும் ஓர் உயிரியைப் பற்றுதலுங் கொல்லுதலோ டொக்குமாதலானும், பற்றுதற் கருத்தில் கொல்லுதற் கருத்துத் தோன்றிற்று. ஆங்கிலத்திலும் பற்றுதலைக் குறிக்கும் seize என்னும் சொல், கொல்லுதலைக் குறித்தல் காண்க.

கொள்—கோள்=கொலை. கொள்ளுதல் = பற்றுதல், கொல்லுதல்.

கோளரி=கொல்லுஞ்சிங்கம்.

'புலிகோட்பட்டான்' 'பேய்கோட்பட்டான்' முதலிய தொடர்கள், புலியினாலும் பேயினாலும் கொல்லப்பட்டதைக் குறித்தல் காண்க.

கொள்—கொல்—கொலை.

கொல்—கொல்லன்=மரத்தைக் கொல்பவன், தச்சன், கம்மியன், இருப்புக்கொல்லன்.

"மரங்கொல் தச்சன்" (சிலப். 5 : 29)

ஐவகைக் கொல் தொழில்களுள் முதலாவது எழுந்தது தச்சு.

(கூ) ஒன்றல் துறை

இரு அல்லது பல பொருள்கள் ஒன்றாகப் பொருந்துதல் ஒன்றல்.

i. ஒட்டிச் செல்லுதல்

ஊர்தல் = நிலத்தை யொட்டிச் செல்லுதல், உடம்பை யொட்டி நகர்தல்.

உடு—உடும்பு = நிலத்தையும் சுவரையும் ஒட்டிப் பற்றும் உயிரி.

ஊணான் = நிலத்தை ஒட்டிப் படரும் கொடி.

ஓணான் = நிலத்தையும் மரத்தையும் ஒட்டிச் செல்லும் ஊருயிரி. ஓணான்—ஓந்தான்—ஓந்தி—ஓதி.

ஒட்டு—அட்டு—அட்டை = நிலத்தையும் மரத்தையும் ஒட்டிச்செல்லும் புழுவகை.

மரஅட்டை—மரவட்டை.

ஒள்—ஒண்—ஒண்டு. ஒண்டுதல் = மரம் சுவர் முதலியவற்றைச் சார்தல்.

ஒண்டிக்குடி = ஒட்டுக்குடி.

(புல்லி)—பல்லி = மரத்தொடும் சுவரொடும் பொருந்தி இருப்பது.

"அச்சுடைச் சாகாட் டாரம் பொருந்திய
சிறுவெண் பல்லி போல" (புறம். 256).

"பொருந்தலாற் பல்லி போன்றும்" (சீவக. 1895)

ii. உடனுறுதல்

உடு—உடல் = உயிருடனிருப்பது. உடல் = உடம்பு.

உடு—உடங்கு—உடக்கு = போலியுடம்பு.

உடன்—உடன்படு—உடம்படு.

உடங்கு = கூட.

உடந்தை = கூட்டு.

ஒல்—ஒரு—ஒருங்கு.

கூடு—கூட்டு.

iii. ஒன்றுதல்

உறுதல் = ஒன்றுதல்.

உல்—ஒல். ஒல்லுதல் = பொருந்துதல்.

ஒல் — ஒன்று — ஒற்று — ஒற்றுமை.

ஒன்று — ஒன்றி.

ஒள் — ஒண் — ஒண்டு — ஒண்டி. ஒண்ணுதல் = பொருந்துதல்.

ஒன்று — ஒற்று — ஒற்றி.

ஒண்டு — ஒட்டு.

குள் — கூள் — கூடு.

சுவள் — சுவண்டு = பொருத்தம்.

சுவள் — (சிவள்) — சிவண். சிவணுதல் = பொருந்துதல்.

(சுள்) — செள் — செரு — சேர்.

துள் — தொள் — தொடு — தொட்டிமை = ஒற்றுமை.

புல் — பொல் — பொரு — பொருந் — பொருந்து.

## iv. ஒத்தல்

உருத்தல் = ஒத்தல்.

உறுதல் = ஒத்தல்.

உ — உவ் — உவ — உவமை = ஒப்பு.

உவ — உவமம் — உவமன். ஒ. நோ: பரு — பருமம் — பருமன்.

உவத்தல் = பொருந்துதல், ஒத்தல்.

உ — ஒ. ஒத்தல் = பொருந்துதல்.

ஒ — ஒக்கல் — ஒக்கலி. ஒக்கலித்தல் = ஒப்பாதல்.

ஒ — ஒத்து — ஒத்தி — ஒத்திகை.

ஒ — ஒப்பு — ஒப்பம். ஒப்பு — ஒப்பனை. ஒப்பு = ஒப்பாரி.

ஒப்பு — ஒப்புரவு. ஒப்பு — ஒப்படி.

ஒப்பு — ஒம்பு.

ஒ — ஒவ்வு.

ஒள் — ஒட்டு — ஒட்டை = ஒப்பு, ஒத்த பருவம்.

இவன் அவனொட்டை என்று கூறுதல் காண்க.

ஒட்டை — ஓட்டை = ஒத்த பருவம்.

ஒள் — ஒரு — ஒருவு. ஒருவுதல் = ஒத்தல்.

ஓடுதல் = ஒத்தல். ஓடு — ஓட்டம் — ஆட்டம் = ஒப்பு. குரங்காட்டம் ஓடுகிறான் என்று கூறுதல் காண்க.

குள் — கள் — கண் — கண. கணத்தல் = கூடுதல், பொருந்துதல், ஒத்தல். கணக்க = போல. குரங்கு கணக்கா = குரங்குபோல. கணக்கு = ஒப்பு. அந்தக் கணக்கில் = அந்தவகையில், அதைப்போல. கண—கணகு—கணக்கு.

குள்—கள்—கள்ளுதல் = பொருந்துதல், ஒத்தல்.

கள்—கடு—கடுத்தல் = ,, ,,

குள்—கொள். கொள்ளுதல் = ,, ,,

குள் — குழு — கெழு. கெழுவுதல் = பொருந்துதல், ஒத்தல். கெழு—கேழ் = ஒப்பு.

சுள்—செள்—செய். செய்தல் = ஒத்தல்.

"வேனிரை செய்த கண்ணி" (சீவ. 2490).

செய்யார் = பகைவர். செய் = செ. செத்தல் = ஒத்தல்.

செத்து = ஒத்து (தொல். பொ. 286 உரை).

துல்—துல்லியம் = ஒப்பு, சரிமை. துல்—துலை = ஒப்பு.

துள் — தள் — தழு — தகு தகுதல் = பொருந்துதல், ஒந்தல். தகுதி = பொருத்தம், பதவிக்குப் பொருத்தம்.

துணைதல் = ஒத்தல்.

நுள்—கள்—நளி. நளிதல் = பொருந்துதல், ஒத்தல். நளி — நடி.

புல்லுதல் = பொருந்தல், ஒத்தல்.

புல்—புரை. புரைதல் = ஒத்தல்.

புல்—பொல்—போல். போலுதல் = ஒத்தல். போல்—போலி. போல = ஒப்ப.

பொல்—பொரு—பொருவு = ஒப்பு.

பொரு—பொருந்—பொருந்து.

பொரு—பொது = ஒப்பு, எல்லார்க்கும் ஒத்தது, நடுநிலை.

"ஒன்றோடு பொதுப்படா வுயர்புயத்தினான்"
(கம்பரா. நாகபாச. 75).

பொது = ஒப்பு.

பொது — பொதுவன் — குறிஞ்சிக்கும் மருதத்திற்கும் இடைப்பட்ட முல்லைநிலத்தான்.

பொது—பொதியில் (பொது+இல்) = வழக்காளிக்கும் எதிர்வழக்காளிக்கும் பொதுவான அம்பலம்.

முன்—மன். மன்னுதல்=பொருந்துதல்.

மன்—மான். மானுதல்=ஒத்தல்.

v. துலை (தராசு)

துலையின் சிறப்பியல்பு இருபுறமும் ஒத்தலாதலால், ஒத்தலைக் குறிக்குஞ் சொல்லினின்று துலைப்பெயர் தோன்றிற்று.

''துலைநாவன்ன சமநிலை''

என்று ஆத்திரேயன் பேராசிரியரும்,

''சமன்செய்து சீர்தூக்கும் கோல்''

என்று திருவள்ளுவரும், கூறுதல் காண்க.

ஒப்பு—ஒப்பராவு. ஒப்பராவுதல்=தராசு செய்தல்.
ஒப்பராவி=தராசு செய்வோன்.
துல்லுதல்=பொருந்துதல், ஒத்தல்.
துல்—துல்லியம்—துல்லிபம்=ஒப்பு. துலை=ஒப்பு.
துல்—துலம்=நிறைகோல், துலா நிறை.

துல்—துலா=நிறைகோல், நிறைகோல் போன்ற ஏற்றம், நிறைகோல் வடிவான ஓரை.

கைத்துலா ஆளேறுந்துலா முதலிய ஏற்ற வகைகளை நோக்குக.

துலாக்கோல்=கழுத்துக்கோல் என்னும் நிறை கோல்.

துலாக்கட்டை=துலாக்கோல் போன்ற வண்டியச்சுக் கட்டை.

துலா—துலாம்=நிறைகோல், துலாவோரை, ஏற்றம், ஒருநிறை.

துலாம்—துலான்=ஒரு நிறை.

துல்—துலை=நிறைகோல், துலாவோரை, ஒருநிறை, ஏற்றம்.

துலை—தொலை=ஒப்பு.

vi. **ஓவியம்**

ஒரு தோற்றத்தை ஒத்த வரைவே ஓவியம்.

உ—ஒ—ஒ = ஒப்பாகு. (ஏ).

ஒ—ஓவம் = சித்திரம். ஓ—ஓவியம் = சித்திரம்.

ஒ—ஒடு = ஒப்பு, சித்திரம். ஒடு—ஒடான்வி—ஒடாவி = சித்திரக்காரன்.

சுள்—செள்—செ. (செத்திரம்)—சித்திரம்.

ஒ. நோ. செந்துரம்—சிந்துரம்.

புல்—புள்—(பள்)—படு.

படுதல் = உறுதல், பொருந்துதல், ஒத்தல். படு—படி = ஒப்பு, ஒத்தவகை, வகை. அப்படி, இப்படி, ஒருபடியாய் வருகிறது, என்னும் வழக்குக்களை நோக்குக.

படி—படிமை = ஒப்பு, ஒத்த உருவம், வடிவம், கோலம், தவக்கோலம்.

படி—படிமம். படி—படிவு—படிவம்.

படிவு—வடிவு—வடிவம்.

vii. **நடிப்பு**

ஒருவன் செயலை ஒப்ப இன்னொருவன் செய்தலே நடிப்பாம்.

நுள்—நள்—நளி—நடி.

நள்ளுதல் = பொருந்துதல், செறிதல்.

நளிதல் = பொருந்துதல், செறிதல் = ஒத்தல்.

நளிய என்பது ஓர் உவமவுருபு.

"நாட நளிய நடுங்க நந்த" (தொல். 1232).

"நளியென் கிளவி செறிவும் ஆகும்" (தொல். உரி. 25).

நளி—நளினம் = பகடி, கோமாளிக் கூத்து.

நடித்தல் = பாசாங்கு செய்தல், கோலங்கொள்ளுதல், கூத்தாடுதல்.

நடி + அம் = நடம் = கூத்து. நடம்—நடன் = கூத்தன்.

"வளிநடன் மெல்லிணர்ப்பூங்கொடி மேவர நுடங்க"
(பரிபா. 22, 43).

நடம்—(நடல்)—நடலை = பாசாங்கு, பொய்ம்மை, வஞ்சனை.

ஒ. நோ. படம் படல்—படலை,

நடல்—நடலம் = பாசாங்கு, இகழ்ச்சி, கூத்து.

நடலமடித்தல் — பாசாங்கு செய்தல்.

நடலம்—நடனம் = பாசாங்கு, கூத்து.

இனி, நடி + அனம் = நடனம்—நடலம் என்றுமாம்.

'அனம்' ஒரு தொழிற் பெயர் விகுதி. எ. டு. விளம்பு—விளம்பனம், கண்டி—கண்டனம்.

நடம்—நட்டம்—நட்டுவன் = கூத்தாசிரியன்.

நட்டுவன்—நட்டுவம் = நட்டுவன் தொழில்.

நட்டுவம்—நட்டு.

நட்டுவத்திற்கு **மத்தளம்** சிறந்த துணையாவது. ஆதலால் நட்டுவனோடு என்றும் மத்தளக்காரன் கூடியே யிருப்பான். அதனால், நட்டுமுட்டு, நட்டுவனும் முட்டுவனும், பன்னும் இணைமொழிகள் எழுந்தன. நட்டுவன் என்னும் சொல்லை நோக்கி முட்டுவன் என்னும் சொல்லும், முட்டு என்னும் சொல்லை நோக்கி நட்டு என்னும் சொல்லும் எதுகைபற்றியமைந்தன.

நட்டு—நட்டணம். நட்டு—நட்டணை = நடிப்பு, கூத்து, கோமாளிக்கூத்து.

நடி + அகம் = நாடகம் (முதனிலை திரிந்து விகுதி பெற்ற தொழிற்பெயர்).

ஆரியர் நாவலந்தேயத்திற்கு வருமுன்னரே, தமிழர் இசை நாடகக் கலைகளில் சிறந்திருந்ததினால், அவர் அவற்றை இயலோடு சேர்த்துத் தமிழை முத்தமிழாக வழங்கி வந்தனர். தலைக்கழகத் தமிழ் முத்தமிழாகவே இருந்தது.

எல்லா நூற்கும் பொதுவான சொல் வழக்கை உலக வழக்கு செய்யுள் வழக்கு என்றும், பொருள் வழக்கை உலகியல் வழக்கு நாடக வழக்கு என்றும், இவ்விருவகையாக வகுத்திருந்தனர். உலகியல் வழக்கு உண்மையானது; நாடக வழக்கு புனைந்துரையானது. இவ்விரண்டுங் கலந்த

அகப்பொருட் செய்யுள் வழக்கைப் புலனெறி வழக்கு என்னும் பெயராற் குறித்து அதன்படியே தொன்றுதொட்டுப் பாடி வந்தனர் முன்னைத் தமிழர்.

"நாடக வழக்கினும் உலகியல் வழக்கினும்
பாடல் சான்ற புலனெறி வழக்கம்
கலியே பரிபாட் டாயிரு பாங்கினும்
உரிய தாகும் என்மனார் புலவர்."

என்று சார்பு நூலாரான தொல்காப்பியர் கூறுதல் காண்க. (அகத்திணையியல், 53).

இங்குக் காட்டப்பட்ட நடிப்புப் பற்றிய சொற்கட்கெல்லாம் வடமொழியில் மூலமாகக் குறிக்கப்படுவது நருத் ந்ருத்த என்னும் வடிவொடு நட்ட (வ.) என்னும் வடிவின் ஒவ்வாமையை என்பதாகும். அறிஞர் கண்டுகொள்க.

### viii. அளவு

ஓர் அளவினால் ஒருமுறை அளக்கப்பட்ட பொருள் அளந்த கருவியோடொத்த அளவினதாயிருப்பதால், ஒப்புமைக் கருத்தில் அளவுக் கருத்துப் பிறந்தது. எண்ணல் எடுத்தல் முகத்தல் நீட்டல் என்னும் நால்வகையளவுள் முன்னதொழிந்த ஏனை மூன்றிலும், இன்னதுதான் அளவு கருவி என்னும் யாப்புறவில்லை. மக்களெல்லார்க்கும் பொதுவான அளவு கருவிகள் எங்கணும் பெரு வழக்காக வழங்கி வரினும், என்றும் எவரும் தம் வசதிக்கேற்ப எதையும் அளவு கருவியாக வைத்துக்கொள்ளலாம். பருமனிலோ நெடுமையிலோ, ஒரு பொருளுக்கு ஒத்த அளவு இன்னொரு பொருளிற் கொள்ளுவதே அளத்தல் என்க. வசதிபற்றிச் சில அளவு கருவிகள் ஏற்பட்டிருப்பினும், உண்மையில் அளக்கும் பொருளுக்கும் அளக்கப்படும் பொருளுக்கும் வேறுபாடில்லை. அளக்கப்படும் பொருளைக் கொண்டே அளக்கவுஞ் செய்யலாம். துணியால் துணியை அளப்பதையுங் காயால் காயை நிறுப்பதையுங் காண்க.

உல் – அல் — அல —(அலவு)— அலகு = அளவு.

அல்லுதல் = பொருந்துதல், பொருத்துதல் (முடைதல்).

உல்—(உள்)— அள் – அள — அளவு — அளவை.

அள்ளுதல் = செறிதல், பொருந்துதல்.

புள் — (பள்) — படு — படி. படுதல் = தொடுதல், பொருந்துதல், ஒத்தல். படுதல் = ஒத்தல்.

"மலைபடவரிந்து" (சீவக. 56).

"படியொருவ ரில்லாப் படியார் போலும்" (தேவா். 44, 7).

படி = ஒப்பு.

படி = ஒத்த அளவு, அளவு, முகத்தலளவு கருவி (நாழி), எடுத்தலளவு கருவி (படிக்கல்), தரம், வகை. நாள் தொறும் நாழியால் அளந்து கொடுக்கப்படும் கூலம், நாட்செலவுக் காசு.

வரும்படி = வருமளவு.

படிப்படியாக = அளவளவாக, மெல்லமெல்ல.

படித்தரம் = நாடொறும் கோயிற்களந்து கொடுக்கப் பெறும் ஒழுங்கு.

படிமுறை = மேன்மேலளவு.

படிக்கட்டு = மேன்மேலளவான கட்டு.

எனக்கு ஒருவகையாய் வருகிறது என்பதை எனக்கு ஒருபடியாய் வருகிறது என்பர்.

நாழியையும் நிறைகல்லையுங் குறிக்கும் படி என்னும் சொல்லும், மூலத்தின் ஒப்பைக் குறிக்கும் படி என்னும் சொல்லும், ஒன்றே. ஒப்புமைக் கருத்தை யுணர்த்தும் படி என்னும் சொல், போன்மையைக் குறித்து உருவம் பற்றிய சொற்களையும், அளவைக் குறித்து அளவு கருவி பற்றிய சொற்களையும் பிறப்பித்ததென்க.

முன் — மன். மன்னுதல் = பொருந்துதல்.

மன் — மான். மானுதல் = ஒத்தல்.

மான் — மானம் = ஒப்பு அளவு, படி, (நாழி). நாழியை மானம் என்பது வடார்க்காட்டு வழக்கு.

மானவட்டில் = அளவு வட்டில். எண்மானம் = எண்ணளவு.

வருமானம் = வருமளவு, வரும்படி.

மன் — மான் — மா. ஒ. நோ. பண் — பாண் — பா.

மா என்னும் சொல் அள என்னும் பொருளில் ஒரு காலத்து வழங்கிய ஏவல் வினை.

மா + திரம் = மாத்திரம் = அளவு. மா + திரை = மாத்திரை = அளவு. திரம் திரை என்பன தொழிற்பெயர் விகுதிகள்.

திரம்—திரை. ஒ. நோ. அனம்—அனை. (வஞ்சனம், வஞ்சனை)

'அவன் எனக்கு எம்மாத்திரம்?' என்னும் தொடரில், மாத்திரம் என்னும் சொல் அளவைக் குறித்தல் காண்க.

'எவ்வளவு?' என்பதை வடார்க்காட்டார் 'எம்மாத்தம்?' (எம்மாத்திரம் ?) என்பர்.

மானம் என்னுஞ் சொல், அளவு என்னும் பொருளை அடிப்படையாகக் கொண்டு ஒரு தொழிற்பெயர் விகுதியாகவும் வரும்.

எ. டு. கட்டுமானம் = கட்டும் அளவு, கட்டடம்.

படிமானம் = படியும் அளவு, படிவு.

அடைமானம் செரிமானம் சேர்மானம் தீர்மானம் முதலிய தொழிற்பெயர்களில், மானம் என்பது விகுதியளவாக நின்றது.

மான்—மானி. ஒ. நோ. தீர்மானி—தீர்மானம்.

தீர்தல் = முடிதல். தீர்மானம் = முடிவு. தீர்மானித்தல் = முடிவு செய்தல்.

மானி = அளப்பது, அளவு கருவி. எ—டு. வெப்பமானி.

மானித்தல் = அளவிடுதல், மதித்தல், கருதுதல்.

மானி — மானியம்—மானிபம் = மதித்தளிக்கும் நிலம்.

## ix. கணக்கு

அளவிடுதல் = கணக்கிடுதல்.

குள் — குண் — குணி. குணித்தல் = அளத்தல், அளவிடுதல்.

குணிப்பு = அளவு.

குணி — கணி. கணித்தல் = அளவிடுதல், கணக்கிடுதல்.

கணி = கணிப்பவன். கணி—கணியன்.

கணி — கணிதம்.

குள் — கள் — கண் — கண — கணகு — கணக்கு — கணக்கன்.

கணகு — கணகன் = கணக்கன்.

கணக்கு = அளவு, எண், தொகை, கூட்டல் கழித்தல் பெருக்கல் வகுத்தல் முதலிய அளவீடு.

அதற்கொரு கணக்கில்லை, கணக்கு வழக்கற்றுக் கிடக்கிறது, என்னுந் தொடர்களில், கணக்கு என்னுஞ் சொல் அளவைக் குறித்தல் காண்க. கணக்கன், கணக்காயன், ஊர்க்கணக்கன் கணக்கப்பிள்ளை திருமுகக்கணக்கு முதலிய பதவிப் பெயர்கள் தொன்று தொட்டுத் தமிழ்நாட்டில் வழங்கி வருபவை. கணக்கன் என்னும் குடிப்பெயரைக் கொண்டவர் தூய தமிழ் மரபினர். பழந்தமிழர் இம்மிக் கணக்கும் கீழ்முந்திரி வாய்பாடும் பயின்றவர்.

## (௧0) உறழ்தல் துறை

உறழ்தலாவது ஒன்றாது மாறுபடுதல். அது அகத்தால் உறழ்தலும் புறத்தால் உறழ்தலும் என இருவகை. முன்னது வெறுத்தல்; பின்னது உரசுதல்.

### i. உரசுதல்

உல் — உர் — உரிஞ். உரினுதல் = உராய்தல். உரிஞ் — உரிஞ்சு.

உர் — உரசு.

உர் — உரை — உராய்.

உர் — அர் — அரம். அர் — (அரவு) — அராவு.

அர் — அர — அரக்கு. அரக்குதல் = தேய்த்தல்.

குர — குரப்பு — குரப்பம் = குதிரை தேய்க்குங் கருவி.

துவை — தோய் — தேய். துவைத்தல் = தேய்த்தல், அரைத்தல்.

துவையல் = அரைக்கப்பட்ட கூழ்.

நுள் — நெள் — நெறு — நறு — நறுமு. நறுமுதல் பல்லைக் கடித்தல்.

நறு — நறுநறு = (பல்லைக் கடித்தற் குறிப்பு.)

நுறு — நெறு — நெறுநெறு (பல்லைக் கடித்தற் குறிப்பு).

நுள் — நெள் — நெரு — நரல். நரலுதல் = உரசியொலித்தல், கத்துதல்.

"ஆடு கழை நரலும்" (புறம். 120).

"வெண் குருகு நரல" (அகம். 14).

நரல்—நரலை=ஒலி, கடல்.

நரல்=பேசும் மாந்தன், மக்கட் கூட்டம். மாந்தனை மற்ற வுயிர்களினின்று பிரித்துக் காட்டுவது, அவனது பேசுந் திறனே. நரல்—நருள்.

நருள் பெருத்துப் போய்விட்டது என்பது தென்னாட்டு உலக வழக்கு.

நரல்—நரன்—நரம்.

வால்+நரம்=வானரம். (வாலையுடைய நரன்போன்ற குரங்கு).

ii. தீப்பற்றுதல்

பொருள்கள் ஒன்றோடொன்று உரசுவதால் சூடு பிறக்கின்றது. மூங்கிலும் அரணியும் சக்கிமுக்கியும் அவைபோல்வன பிறவும், ஒன்றோடொன்று உரசுவதால் தீயெழுகின்றது.

தோய்—தேய்.

தேய்தல்=உரசுதல். தேய்த்தல் (பி. வி.).

தேய்—தேய்வை=உரசும் சந்தனக்கட்டை

தேய்—தே—தீ=நெருப்பு. தேய்—தேயு (வ.).

நுள்—நெள்—நெரு—நெரி. நெரிதல்=நெருங்குதல், உரசுதல், நசுங்குதல்.

நெரு—நெருப்பு.

iii. தெய்வம்

தீயானது முதற்காலத்தில் தெய்வமாக வணங்கப்பட்டதினால், தீயின் பெயரினின்று தெய்வத்தைக் குறிக்கும் பெயர்கள் திரிந்தன.

(சுள்—சுர்—சுரம்—சுரன்=தேவன்).

தேய்—தே=தெய்வம், தலைவன்.

தே—தேவு—தேவன்.

தேய்—(தெய்)—தெய்வு—தெய்வம்.

iv. மாறுபடுதல்

உறு — உறழ் — உறழ்ச்சி. உறழ்தல் = கருத்து மாறுபட்டுரையாடல், சொற்கள் தோன்றலும் திரிதலுமாகப் புணர்தல்.

உடு — உடல் — உடற்று. உடலுதல் = சினத்தல், பொருதல்.

உடற்றுதல் = சினப்பித்தல், வருத்துதல், அழித்தல்

உடு — ஊடு — ஊடல். ஊடுதல் = கோபித்துரையாடாமை.

சுறு — சுறட்டு = பிடிவாதம். சுறட்டன் = தொந்தரைக்காரன்.

துல் — துன் — துனி. துனித்தல் = சினத்தல், வெறுத்தல்.

புல் — புல — புலவி. புலத்தல் = கோபித்துக்கொள்ளுதல்.

முல் — முறு — முறை. முறுத்தல் = கோபித்தல், சினந்து நோக்கல்.

முறு — முறுமுறு — முறுமுறுப்பு.

முறைத்தல் = சினந்து நோக்கல்.

முல் — முன் — முனிதல் = கோபித்தல், வெறுத்தல். முனிவு = கோபம், வெறுப்பு.

முனி = உலகை வெறுத்தவன். முனிவு — முனிவன்.

முன் — முனை. முனைதல் = கோபித்தல், வெறுத்தல்.

முனைவு — கோபம், வெறுப்பு. முனைவன் = முனிவன்.

முள் — முர — முரள் — முரண் — முரண்டு = பிடிவாதம்.

முரணுதல் = மாறுபடுதல். முரண்டு = மாறுபாடு, எதிர்ப்பு, அடங்காமை.

முள் — (முண்) — முணவு. முணவுதல் = வெறுத்தல், சினத்தல்.

முண — முணை — முணைதல் = வெறுத்தல்.

மேலோர்க்கு அடங்காது முரண்டுபண்ணுவதைத் தில்லுமுல்லு அல்லது திண்டு முண்டு என்று கூறுவது வழக்கம்.

## (கக) திரளல் துறை

ஒன்றாகச் சேரக்கூடிய பல அணுக்கள் அல்லது பகுதிகள் சேரின், திரட்சியுண்டாகும்.

i. திரட்சி

திரண்ட பொருள்கள் திரட்சி பற்றிய சொற்களால் குறிக்கப்பெறும்.

உவ — உவா — உவவு = முழுமதி.

உல் — உலம் = திரட்சி, திரண்ட கல். உலக்கை = திரண்ட தடி.

குள் — குழு — குழவி = அம்மிக்குழவி. குழுவுதல் = திரளுதல்.

குழு — குழை = குண்டலம்.

குழு — கொழு — கொழுக்கட்டை.

குழு — கழு — கழுகு = திரண்ட பறவை.

குள் — குண் — கண் — கணை = திரட்சி. கணை — கணையம் = எழுமரம்.

குண் — குண்டு — குண்டலம். குண்டு — கண்டு = கட்டி.

கற்கண்டு நூற்கண்டு முதலியவற்றை நோக்குக.

குண்டு — குண்டன்.

குண்டுக்கழுதை, குண்டாந்தடியன் முதலிய தொடர்களில், குண்டு என்னுஞ் சொல் திரட்சியைக் குறித்தல் காண்க.

குண்டு — குண்டி.

குள் — குட்டி — கட்டி. கேழ்வரகுக் களிக் கிண்டும்போது படும் மாக்கட்டியைக் குட்டி என்பர். குட்டிபடுதல் என்பது வழக்கு.

கும் — கொம் — கொம்மை = திரட்சி.

கொம் — கொம்பு — கம்பு — கம்பம்.

குவ — குவவு = திரட்சி. குவடு = திரண்ட சிகரம், மலை. குவடு — கோடு.

குள்—கொள்—கொட்டை = திரண்டது.

குல்—கோல் = திரட்சி, திரண்ட கம்பு.

"கோல்தொடி" = திரண்ட வளையல்.

கோல்—கால் = கம்பு, பந்தலைத் தாங்கும் கம்பு, தூண், தூண்போன்ற உறுப்பு, அவ்வுறுப்பின் அளவு (¼). இப் பொருள் வரிசையைத் தலைகீழாகக் கூறுவர் உரையாசிரியன்மார்.

கால் போல் நீண்டு செல்லும் பொருள்களெல்லாம் கால் எனப்படும். கால் = நீர்க்கால், காற்று, காலம்.

கால்—காற்று. கால்—காலம்.

சுள்—சுளை = திரட்சி, திரண்ட பழச்சதைப் பகுதி.

சுளையாய் நூறுஉருபா வாங்கிக்கொண்டான் என்னும் வழக்கைக் காண்க.

சுள்—செள்—செண்டு = மழு. செள்—செரு—சேர்.

"சேரே திரட்சி" —(தொல். உரி. 65).

சுள்—(சொள்)—சோடு = திரட்சி. இத்தச் சோடு என்னும் வழக்கைக் காண்க.

சோடு—சோட்டா = திரண்ட தடி.

துள்—(தூள்)—தூண்—தூணம்.

துள்—தள்—தண்டு—தண்டம். தண்டு—தண்டி தடி. தண்டித்தல் = தடித்தல், பருத்தல்.

தண்டு = திரண்ட கம்பு, திரண்ட சேனை.

ஆங்கிலத்தில் Club, staff என்னும் சொற்கள் திரண்ட கம்பையும் குழுவையும் குறித்தல் காண்க.

தண்டு = படை. தண்டநாயகன் = படைத்தலைவன்.

தண்டுதல் = சேர்த்தல், திரட்டுதல்.

துள்—தொள்—தொண்—தொண்ணை = தடி.

தொள்—தொழு—தொழுதி = திரட்சி.

"தொழுதிச் சிறகிற் றுயராற்றுவன" (சீவக. 1187).

தொள்—தோள் = திரண்ட புயம்.

தோள்—தோடு = திரட்சி.

துல்—தில் —(திர்)— திரள் — திரளை — திரணை = திரண்டமேடு. திரள்—திரடு.

துள்—(திள்)—திண் — திண்ணை. (திள்) — திட்டு — திட்டை. (திள்)—திடு—திடல்—திடர். திள்—திண்டு.

புல்—பொல்லு = தடி.

புள்—(பிள்)—பிண்டு—பிண்டம் = திரட்சி.

முள்—முண்டு = திரட்சி.

முண்டு—முண்டா = தோள்.

முண்டு—முண்டான் = மஞ்சட் கிழங்கு.

முள்—முழு—முழா = திரட்சி, மத்தளம், முழா—முழவு—முழவம். வொலி.

முழவுக்கனி = பலாப்பழம்.

முழா—மிழா = திரண்ட மான்.

முடா—மிடா = திரண்ட பானை.

முழுத்தல் = பருத்தல். முழுமை = திரட்சி. முழுத்த ஆண்பிள்ளை என்று கூறும் வழக்கைக் காண்க.

முழுமகன் = தடியன், மூடன்.

முள்—(மள்)—மழு = திரண்ட ஆயுதம்.

முழு—(முது)—முதல் = திரண்ட மூலதனம்.

முதல்—முதலாளி.

முதல்—முதலை = திரண்ட மர அடிபோன்ற நீருயிரி.

முதலை—மதலை = தூண், பற்றுக் கோடு.

முதல்—முசல்—முசலம் = திரண்ட உலக்கை. முசல்—முசலி.

முழு—விழு = திரண்ட, பெரிய, சிறந்த.

முள் — முரு — முரள் — முரண் — முரடு = பெரியது, திரண்டது. கழுமுரடு = மிகத்திரண்ட பொருள்.

முரடு—முரசு = திரண்ட கட்டையாற் செய்யப்பட்ட மத்தளம், பேரிகை. முரசு—முரசம்.

முரடு—முருடு = முண்டுக்கட்டை.

முள்—மொள்—மோள்—மோளம்—மேளம்.

மோளம் – மோழகம்—மேழகம்—ஏழகம்.

மொள்—மொத்து = திரட்சி, திரண்டது.

மொத்து—மொத்தம்; மொத்து—மொத்தை = திரளை, மொத்தை—மொந்தை.

மொத்தை—மோத்தை = விலங்கின் ஆண். விலங்குகளின் ஆண் பொதுவாகப் பெண்ணினும் பருத்திருப்பதால், கடா மோத்தை மேழகம் (மோழகம்) முதலிய பெயர்களாற் குறிக்கப்பெறும்.

மொத்தை—மொச்சை = திரண்டபயறு.

மொத்து—மத்து = திரண்ட கடை கருவி.

மத்து—மத்தி—மதி—மசி.

மத்தித்தல் = மத்தினாற் கடைதல். மதித்தல் = கடைதல் போற் கையினால் அழுத்திப் பசையாக்குதல். மசிதல் = பசையாதல்.

சோற்றை மதித்துக் குழந்தைக்கு ஊட்டு என்று கூறுதல் காண்க.

கனை தழங்கு முதலிய சொற்கள் திரண்டொலித்தலைக் குறிக்கும்.

ii. திரண்ட அடி

மரஞ்செடிகொடிகளின் அடி, அவற்றின் மற்றப் பகுதிகளைவிடப் பருத்திருப்பதால், பருமைக் கருத்தை அடிப்படையாகக்கொண்ட பல சொற்கள் அடியைக் குறிக்கத் தோன்றியுள்ளன.

உள் — அள் — அண்டு. அண்டுதல் = நெருங்குதல், முட்டுதல், பொருந்துதல் (கூடுதல்), திரளுதல், பருத்தல்.

அண்டு—அண்டி—அடி = பருத்தது, பருத்த அடி; தாநோ: தண்டு—தண்டி—தடி;

அடி = மரத்தின் அடிப்பகுதி, மூலம், ஆதி, பழைமை; மரத்தடிபோன்ற பாதம், கால், செய்யுளடி, அடியளவு (foot); ஒன்றன் அடிப்பாகம்;

அண்டு → அண்டி = உடம்பின் அடித்துளை (anus). அண்டி தள்ளுதல் = அடித்துளைப் பகுதி வெளி வருதல் (Prolapsus ani).

அண்டி தள்ளுதலை அண்டு தள்ளுதல் என்றுங் கூறுவர்.

அண்டிமா = பழத்தின் அடியிற் கொட்டையுள்ள மர முந்திரி.

அண்டிமாம்பழம், அண்டிமாங்கொட்டை அண்டிக் கொட்டை என்பன தென்னாட்டு வழக்கு.

அண்டுதல் என்னுஞ் சொற்கு மேற்குறித்த பொருள்களுள்ளமை கீழ்வருந் தொடர்களாலும் மேற்கோளாலும் அறியப்படும்.

(1) கிட்டுதல், நெருங்குதல். (இது வெளிப்படை).

(2) முட்டுதல். அண்டை கொடுத்தல் = முட்டுக் கொடுத்தல்.

அண்டு — அண்டை — அடை.

பட்டடை = தட்டும் அணைகல், அடைகல்.

(3) பொருந்துதல், ஒத்தல், தகுதல், ஏற்றல்:

"ஆகார மாமுவமைக் கண்டாது"

—(ஞானவா. முமுட்சு, 27.)

அண்டிப் பிழைத்தல் = ஒருவனைப் பற்றுக்கோடாகக் கொள்ளுதல்.

அண்டைவைத்துத் தைத்தல் = ஒட்டுப்போட்டுத் தைத்தல்.

அண்டு = மணிவடவுரு, சங்கிலி வளையம் (link).

அந்தச் சங்கிலிக்கு இன்னும் நாலு அண்டு வேண்டும் என்பது வழக்கு.

(4) பருத்தல். அண்டு — அண்டா = போகணி வடிவான பெருங்கலம். ஒ. நோ. குண்டு — குண்டா.

'ஆ' ஒரு தொழிற் பெயர் விகுதி.

எ-டு : உண் — உணா = உணவு.

அடி என்னுஞ்சொல், முதலாவது பருத்தது என்னும் பொருளில் மர அடியையே குறித்தது. எல்லாப் பொருள்களின் அடிப்பாகத்தையும் குறிக்க வழங்கியபின், அது தன் சிறப்புப்பொருளை இழந்தது.

குழு—கழு—கழி=கரும்புத்தண்டு. கருப்பங்கழி என்பது வழக்கு.

துள்—தள்—தாள்=நெல் புல் முதலிய பயிர்களின் அடி.

தள்—தண்டு=கீரை வாழை முதலியவற்றின் அடி. தண்டுக்கீரை தண்டங்கீரை கீரைத்தண்டு முதலிய வழக்குகளைக் காண்க.

தள்—தட்டு=சோளம் கரும்பு முதலிய பயிர்களின் அடி.

தட்டு—தட்டை.

துள்—துறு—தூறு=தென்னை, பனை முதலியவற்றின் வேரொட்டிய அடி.

புள் — பூண்டு — பூடு = வெங்காயம் வெள்ளைப்பூண்டு முதலியவற்றின் அடி.

முழு—(முது)—முதல்=புளி, வேம்பு முதலிய மரங்களின் அடி, அடி, காரணம். முழுமுதல்=திரண்ட அடி, கடவுள்.

முள்—மூள்—(மூண்டு)—மூடு=வாழை கற்றாழை தாழை முதலியவற்றின் வேரொட்டிய அடி.

மூட்டோடு மரத்தைச் சாய்த்துவிட்டான் என்பது வழக்கு.

முல்—(மூல்)—மூலம்=அடி, கிழங்கு, வேர், ஆதி, காரணம், வேர்போல் அடியில் முளைக்கும் நோய்.

மூலம் என்னுஞ் சொல் முதலாவது மரவடியையே குறித்திருத்தல் வேண்டும்.

"போதி மூலம் பொருந்தி" (மணி. 26, 47).

மூல—மூலி=மருந்திற்குரிய வேர்ச் செடிகொடி. மூலி—மூலிகை.

iii. திரண்டொலித்தல்.

உலம் — உலம்பு. உலம்புதல் = பேரொலி செய்தல்.

குமுகுமெனல் = பேரொலி செய்தல்:

"குமுகுமெனவே முழக்க"

(திருப்போ. சந். பிள்ளைத். சிறுபறை. 2)

கும்—குமுறு. கும்—குமுதம் = பேரொலி.

"கதறிமிகு குமுதமிடு பரசமயம்" (திருப்பு. 948)

துள்—தள்—தழ—தழங்கு: தழங்குதல் = முழங்குதல்.

முள்—(மள்)—மண் = முழக்கு.

"மண் முழா மறப்ப" (புறம். 65)

முள்—முழ—முழங்கு—குழக்கு—முழக்கம்.

குறிப்பு:—இங்குக் குறிக்கப்பட்ட சொற்கள் ஒலிக் குறிப்புத்தழுவியவை.

iv. பூப்படைதல்

நிலைத்திணையில், திரண்ட அல்லது பருத்த முதலும் சினையும் முதிர்ச்சியடையும்; அதனால், திரட்சிபற்றிய சொற்கள் சில பூப்படைதலை உணர்த்தும்.

உருத்தல் = முதிர்தல்.

கும்—குமர் = திரண்டவள், கன்னி, கன்னிமை, இளமை, அழிவின்மை (என்று மிளமை).

மூப்பு சாக்காட்டிற் கேதுவாதலால், இளமை அழியாமையைக் குறித்தது.

கும்மல் = கூடுதல், குவிதல், திரளுதல். கும்—கொம்—கொம்மை = திரட்சி.

பூப்படைந்தவளைத் திரண்டவள் என்பது கொங்கு நாட்டு வழக்கு. ஒ. நோ. E. virgin, pom L. virgo, to swell.

குமர்—குமரி = கன்னி, கன்னியான காளி (துர்க்கை), கன்னிமை, அழிவின்மை.

குமர்—குமரன் = திரண்டவன், இளைஞன், முருகன். சேயோனைப் பண்டைத்தமிழர் இளைஞனாகவே கருதியிருந்ததால், அவன் குமரன் என்றும் முருகன் என்றும் அழைக்கப்பட்டான். (முருகு = இளைமை. முருகன் = இளைஞன்).

குமரன் குமரி என்னும் தென்சொற்களைக் குமாரன் குமாரி என நீட்டி மகனையும் மகளையும் குறிக்க வழங்கியது பிற்காலத்து ஆரிய வழக்கு. தமிழில் இளைஞன் இளைஞை என்றே அவை பொருள் தரும்.

குமரன் குமரி என்னும் தெய்வங்கள் தொன்று தொட்டுத் தமிழரால் வணங்கப்பட்டு வருபவை.

குல் — கல் — கன். கன்னுதல் = திரளுதல், பழுத்தல். அரத்தங் கட்டுதலை 'இரத்தல் கன்னுதல்' என்பர்.

கன் — கன்னி = திரண்டவள், பழுத்த இளைஞை, குமரிநிலை, இளமை, மணமாகாமை.

கன்னி—கன்னிகை = இளங்கன்னி, 'கை' ஒரு குறுமைப் பொருள் விகுதி—. ஒ — நோ. குடி — குடிகை — குடிசை.

v. மொத்தம் (முழுமை)

மொத்தம் என்பது, ஒரு வகைப் பொருள்கள் அல்லது பலவகைப் பொருள்கள் எல்லாம் சேர்ந்த முழுத்திரட்சி.

புள்—(பிள்)—(பிண்டு)—பிண்டம் = தொகுதி, முழுமை, உடம்பு.

முள் — முழு — முழுது = முழுமை. முழுது—முழுவது.

முழு—முழுவல்—முழுவன்.

முழு—(முது)—முதல் = உடம்பு.

முல்—முற்று = முழுது.

முது—மொது—மொத்து—மொத்தம்.

முள்—(மள்)—வள்—வள்ளிது = முழுமை. வள்ளிது—வள்ளிசு.

vi. பருமை

திரண்ட பொருள் பருத்திருக்கும்.

(உரு)—இரு—இருமை = பருமை.

இரு—இறு—இறும்பு = மிகப்பெரியது, வியக்கத் தக்கது.

உறு = பெரிய. உறுமை = பருமை.

குரு = பருமை. குரு — குரை = பருமை. குரு—கரு—கருமை = பருமை.

குள்—கல்—கடு—கடா=பருமையானது, பருமையான ஆண் விலங்கு: கடாநாரத்தை=பெருநாரத்தை;

கள்—(கய்)—கயம்=பருமை;

கள்—(சொள்)—சொண்டு=தடித்த உதடு;

துள்—தூண்—தூணி. தூணித்தல்=பருத்தல்;

துள்—(துடம்)—தடம்=பருமை.

தட—தடா—தடவு. தடா=பெரும்பானை;

துள்—தொள்—தொட்ட=பெரிய.

(தும்) — திம் — திம்மன் = பருத்தவன், பருத்த ஆண் குரங்கு.

(நுள்)—நள்—நளி=பருவை.

"தடவுங் கயவும் நளியும் பெருமை"—(தொல். உரி. 22.)

புல்—பல்—பலா=பரும் பழமரம். பலா—பலவு.

பல்—பன்—பனை=பருங்கொட்டை மரம், அல்லது புல் வகையில் தினை என்பதனொடு எதுகையாகவுள்ள பெயரைக் கொண்ட பெருமரம்.

"தினையளவு போதாச் சிறுபுன்னீர் நீண்ட
பனையளவு காட்டும் படித்தால்"

என்று கபிலரும்,

"தினைத்துணை நன்றி செயினும் பனைத்துணையாக்
கொள்வர் பயன்றெரி வார்"

என்று வள்ளுவரும் (குறள். 104). கூறியிருத்தல் காண்க.

பல்—பரு—பருமம்—பருமன். பரு—பருமை.

பரு—பெரு—பெருகு—பெருக்கு—பெருக்கம். பெருக்கு—பெருக்கல்.

புள்—(பள்)—படு—பாடு. படுபாவி=பெரும்பாவி;

புது—(பூது)—பூதம்=பெரியது, பெரும்பேய்.

(இரும்பூது)—இறும்பூது=மிகப்பெரியது, வியப்பானது;

புது—பொது—பொத்து=பொத்தை=பெருமிளகாய்;

பொத்து—போத்து=விலங்கின் ஆண்.

பொத்து—பொந்து – பொந்தன் = தடித்தவன்;

பொந்து—பொந்தி. பொந்தித்தல் = பருத்தல்.

பொந்தி—போந்தி = வீக்கம். போந்திக்கால் = யானைக் கால்.

பொந்து—போந்து = பனை. போந்து — போந்தை = பனை.

முள் — மள் — மாளிகை = பெருமனை. மாளிகை— மளிகை.

முரு—மொக்கு—மொக்கை—பெரியது.

மொக்கை — மக்கை. மக்கைச் சோளம் = பெருஞ் சோளம். மக்கையன் = மந்தன்.

மொக்கு — மொங்கு — மொங்கான் = பெரியது, பெருந்தவளை.

முது — மொது — மொத்து — மொந்து — மொந்தன் = பெருவாழை. மொத்தன்—மந்தன்.

மொந்து — மந்து — மந்தம் = தடித்தன்மை, கூரின்மை, அறிவின்மை, சுறுசுறுப்பின்மை, செரியாமை, ஒளியின்மை.

மந்தம் — மந்தாரம்.

## vii. பெருமை (சிறப்பு)

மதிப்பிற்கும் புகழிற்கும் ஏதுவான அறிவாற்றலதிகார செல்வங்களின் பருமையே பெருமை.

உரவோன் = பெரியோன்.

குரு—பெருமை, பெரியோன். குரு—குரவு – குரவன் = பெரியோன். அரசன் ஆசிரியன் தாய் தந்தை அண்ணன் ஆகிய ஐவரும் ஐங்குரவர் என்றும், தாய்தந்தையர் இரு முதுகுரவர் என்றும், கூறப்படுதலால்; குரு என்னும் சொல்லுக்குப் பெரியோன் என்பதே மூலப்பொருளாகும்; குரவர் என்னுஞ்சொல் பெற்றோரை விதந்து குறித்தல் போல, குரு என்னும் சொல் ஆசிரியனை விதந்து குறிக்கின்ற தென்க.

குரு—குரை – பெருமை.

குல்—கல்—கன்—கன—கனம் = பெருமை.

சுள்—(சூர்)—சீர்—சிற—சிறப்பு.

புல்—பல்—பரு—பெரு—பெருமை.

முள்—மள்—மண்—மாண்—மாண்பு. மண் = மாட்சிமை. மாண் — மாட்சி. முகு—மகம் = பெருமை.

மகம் — மகத்து — மகந்து — மாந்து — மாந்தன் = படைப்பிற் பெரியவன்.

முன்—மன்—மான்—மானம் = பெருமை.

குறிப்பு: மகன் என்னும் பெயர் மகம் என்பதனின்று திரிந்ததாகவுங் கொள்ள இடமுண்டு. ஆயினும், பிள்ளை என்னும் இளமைப்பெயர் ஆண்பிள்ளை பெண்பிள்ளை எனப் பெரியோர்க்கும் வழங்குதலானும், மகன் மக்கள் என்னும் பெயர்கள் பிள்ளையர்க்கும் பெரியோர்க்கும் பொதுவாயிருத்தலானும், இளமைபற்றிய மகன் என்னும் பெயரே பெரியோனையுங் குறித்ததாகக் கொள்ளப்பட்டது.

'ஐயன்'

நெருக்கம் செறிவு தொடுதல் பொருந்தல் ஒன்றல் திரட்சி பருமை பெருமை என்பன, முறையே ஒன்றினின் றொன்றெழுந்த தொடர்ச்சிக் கருத்துக்கள்.

உள்—அள்—அண. அண்ணுதல் = நெருங்குதல்.

அள்ளல் = நெருக்கம்.

அள் = செறிவு. அள்ளுதல் = செறிதல்.

அள்—அள—அளவு—அளாவு. அளவுதல் = தொடுதல், பொருந்தல், கலத்தல்.

அள் = பற்றிரும்பு.

அள்ளுதல் = சேர்த்தல், பொருத்தல், பூட்டுதல்.

அள்ளுக்கட்டுதல் = இரும்புத் தகட்டால் இறுக்குதல். அள் = பூட்டு, வண்டிவில்லைத் தாங்குங் கட்டை.

அள் = வன்மை. வன்மைக் குணம் திரட்சி பருமை பெருமை திண்மை முதலியவற்றால் ஏற்படுவது.

அள்—(அய்)—ஐ = பெருமை, பெரியோன், தலைவன், தந்தை, அரசன், ஆசிரியன், கணவன்.

ஐ—ஐயன் (ஐ+அன்) = பெரியோன், மூத்தோன், உயர்ந்தோன், தலைவன், தந்தை, அரசன், ஆசிரியன், முனிவன், (அந்தணன்), பார்ப்பான் (கோயிற்காரியம் பார்ப்பவன்), தேவன், சாத்தன்;

ஐயன்—ஐயை (பெண்பால்) = பெரியோள், தலைவி, ஆசிரியை, ஆசிரியன் மனைவி, துறவினி (தவப்பெண்), காளி, (துர்க்கை), மலைமகள் (பார்வதி);

ஐ அல்லது ஐயன் என்னும் பெயர், முதலாவது மூப்பு காப்பு அறிவு தவம் முதலியனபற்றி, பெரியோன் அல்லது தலைவன் என்ற பொருளையே குறித்தது. இன்றும் பெரியோரையெல்லாம் ஐயா என்றே அழைத்தல் காண்க.

"என்னை முன் நில்லன்மின்" (என்ற குறளில்; 771)

'ஐ' தலைவனைக் குறித்தது;

ஐங்குரவர் என்னும் ஐவகைப்பட்ட பெரியோருள், முதல்வன் தந்தை. பிறப்பை அடிப்படையாகக்கொண்ட ஆரியக்குல முறைப்படி, தமிழருள் ஏற்றிழுவுபெற்ற ஒரு சார் மேலோரும் ஒருசார் கீழோரும், தந்தையை முறையே ஐயா என்றும் ஐயன் என்றும், தொன்றுதொட்டு (ஆரியர் தென்னாடு வருகைக்கு முன்பிருந்தும், தமிழ் குமரி நாட்டில் தோன்றியதிலிருந்தும்), அழைத்து வருகின்றனர். ஐயா என்பது ஐயன் என்பதின் விளிவடிவம். அன்னீற்றுப் பெயர் உலக வழக்கில் உயர்வு குறியாமைபற்றி, ஐயா என்னும் விளிவடிவமே ஐயன் என்னும் எழுவாய் வடிவத்திற்குப் பதிலாகவும் வழங்கி வருகின்றது.

தந்தையை நிகர்த்தவள் தாய். ஐயை என்னும் பெண்பாற்பெயர், பொதுவாகப் பெரியோளைக் குறிக்கும்போது திரியாதும், தாயைக் குறிக்கும்போது ஆய் என்று திரிந்தும், வரும். ஆய்—ஆய்ச்சி (இரட்டைப் பெண்பால்). ஆயன் என்னும் ஆண்பாற்பெயர் இடையனையே குறித்தலையும், ஆய்ச்சி என்னும் பெண்பாற் பெயர் இடைச்சியைக் குறித்தலோடு தாய் பாட்டி என்னும் பொருள்களில் வழங்குதலையும், நோக்குக.

அன்னையுந் தந்தையும் முன்னறி தெய்வமாதலாலும், திருமணமாகும்வரை மக்கள் பெற்றோரோடேயே உறைதலாலும், ஏதேனுமொரு துன்பங்கண்டு அரற்றும்போதும் ஓர் இறும்பூது கண்டு வியக்கும்போதும்; சிறாரும் இளைஞரும்

பெற்றோரை விளித்தல் இயல்பு. இதனால், பெற்றோரைக் குறிக்கும் சொற்களினின்று, இரக்கக் குறிப்பிடைச் சொற்களும் வியப்புக் குறிப்பிடைச் சொற்களும் தோன்றியுள்ளன.

| பெற்றோர் பெயர் | இரக்கக் குறிப்பிடைச் சொல் | வியப்புக் குறிபிடைச் சொல் |
|---|---|---|
| அப்பன் | அப்ப, அப்பா, அப்பப்ப, அப்பப்பா | அப்ப, அப்பா, அப்பப்ப, அப்பப்பா |
| அச்சன் | அச்சோ | அச்சோ |
| அம்மை | அம்மா, அம்மவோ அம்மகோ, | அம்ம, அம்மா அம்மம்ம |
| அன்னை | அன்னோ | அன்னோ |

இங்ஙனமே, 'ஐ' 'ஐயன்' என்னும் பெயர்களினின்றும், ஐய, ஐயவோ—ஐயகோ, ஐயே, ஐயோ, ஐயையோ முதலிய இரக்கக் குறிப்பிடைச் சொற்களும், ஐ, ஐய, ஐயோ முதலிய வியப்புக் குறிப்பிடைச் சொற்களும்; பிறந்துள்ளன.

சுட்டொலிக் காலத்திற்கு முந்திய குறிப்பொலிக் காலத்தில் தோன்றிய வியப்புணர்வொலிகளுள் ஒன்று ஆய் என நெடின் முதலாகவே தோன்றியிருத்தல் வேண்டும். அது பின்னர் ஆய்—அய் (ஐ) எனக் குறுகியிருக்கலாம். அவ்வுணர்வொலிக் குறுக்கம் வேறு; அள் என்னும் அடிப் பிறந்து தந்தையைக் குறிக்கும் சொல்லினின்று திரிந்து இன்று வழங்கும் ஐ (அய்) என்னும் வியப்பிடைச்சொல் வேறு.

''ஐ வியப்பாகும்'' (தொல். 868)

தந்தைக்கு அடுத்தவன் தமையன். தம் என்னும் முன்னொட்டுப் பெற்ற ஐயன் என்னும் பெயரே, தமையன் என்பது.

''முன்னின்று மொய்யவிந்தா ரென்னையர்''

(பு. வெ. 8, 22)

என்பதில், ஐயர் என்பது தமையன்மாரைக் குறித்தது.

உறவுமுறையல்லாத பெரியோருள், தந்தைக்கு நெருங்கியவன் ஆசிரியன். ஆசிரியர் இல்லறத்தாரும் துறவறத்தாருமாக இரு சாரார். எக்குலத்தாராயினும் இல்லறம் நடத்தும் ஆசிரியரையும், ஐயர் என்றழைப்பது

வடார்க்காட்டு வழக்கு. முனிவரான ஆசிரியர் எங்கும் ஐயர் என்னும் பெயர்க்குரியர்.

"ஐயர் யாத்தனர் கரணம் என்ப" (தொல். 1091)

என்பதில், ஐயர் என்பது முனிவரைக் குறித்தது. பிங்கலம் முனிவர் தொகுதியை ஐயர் தொகுதி என வகுத்துக்கூறும். முனிவர் பலவகையிலும் மிகப் பெரியார் என்பது, 'பெரியாரைத் துணைக்கோடல்' 'பெரியாரைப் பிழையாமை' என்னும் திருக்குறளதிகாரங்களால் அறியப்படும். தமிழ் நாடு புகுந்த பிராமணர் இருவகை நிலைப்பட்டு ஆசிரியத் தொழிலையே முதலாவது மேற்கொண்டமையால், அவர் ஐயர் எனப்பட்டனர். பூசாரியரான புரோகிதரும் ஒருசார் ஆசிரிய வகுப்பினரே. இதுபற்றியே, தமிழ் நாட்டுக் கிறித்தவக் குருமாரான பாதிரிமாரும் ஐயர் என அழைக்கப் பெறுகின்றனர். நாட்டுப் பாதிரிமாரை நாட்டையர் என்பர். குரு என்னும் பெயர் கலையாசிரியனையும் மதவாசிரியனையும் பொதுப்படக் குறிப்பது. அவ்விருவகையாரின் தொழி லொப்புமையை உணர்த்தும்.

அவர் என்னும் தென்சொல் தெலுங்கில் வாரு எனத் திரிவதால், அவர்கள் என்னும் உயர்வீற்றிற் கொத்த வாரு என்னுஞ் சொல்லொடு கூடி ஐயவாரு என நிற்கும் தெலுங்குப் பெயர், ஐயவாரு எனத் திரிந்து மால் நெறியார் (வைணவர்) ஆன தெலுங்கப் பிராமணரைக் குறிக்கும் ஐயகாரு என்பது, ஆங்கிலத்தில் ஐயங்கார் என்னும் வடிவங் கொள்ளும்.

ஒரு நாட்டு மக்களின் ஒப்புயர்வற்ற ஆட்சித் தலைவன் அரசனாதலின், அவனும் ஐயன் எனப்படுவன்.

ஒரு பொண்ணுக்கு வாழ்க்கைத் தலைவன் அவள் கணவனாதலின், அவன் அவட்கு ஐயனாவன்.

"என்னைக்கு முதவாது" ( .

என்பதில், ஐ என்பது கணவனைக் குறித்தது.

இனி, எல்லா வுலகங்கட்கும் ஒரு பெருந்தலைவனான இறைவனுக்கு. ஐயன் என்னும் பெயருரிமை சொல்லாமலே விளங்கும். ஐயை என்னும் பெயர் காளியையும், மலை மகளையுங் குறித்தலால், ஐயன் என்பது சிவனைக் குறித்தல் தேற்றம். முழுமுதற்றெய்வம் பெருந் தெய்வம் சிறுதெய்வம் எனத் தெய்வம் முத்திறப்படுதலால், பிற்காலத்தில் சிவன்

மகனாகக் கூறப்பெற்ற வணிகத் தெய்வமான சாத்தன். ஐயன் என்றும் ஐயனார் என்றும் ஆண்பால் வடிவிலும் உயர்வுப் பன்மை வடிவிலும் குறிக்கப்பெறுவன்.

இங்ஙனம், ஐயன் என்னும் சொல், பல்வேறு பொருள் குறித்துத் தொன்றுதொட்டுத் தமிழ் நாட்டில் திரிந்தும் திரியாதும் வழங்கியிருப்பவும்; அணுவளவும் ஆரியத் தொடர்பற்ற பறையருள்ளிட்ட சில தமிழ்ப் பழங்குடிகள் ஐயன் என்னும் சொல்லையே தந்தை பெயராகக் கொண்டிருப்பவும்; வழக்கிற்கும் வரலாற்றிற்கும் மொழி நூற்கும் முற்றும் மாறாக, ஆரியன் என்னும் வருணப் பெயரின் சிதைவே ஐயன் எனும் தமிழ்ச் சொல் என, ஓரிரு தனிப்பட்டவர் நூலிற் கூறியிருப்பதுடன் சென்னைப் பல்கலைக்கழகத் தமிழ் அகராதியிலுங் குறித்திருப்பது, மிகமிக வருந்தத்தக்கதொன்றாம்.

பெருமைக் கருத்து திரட்சிக் கருத்தின் வழிப்பட்ட பருமைக் கருத்தினின்றே தோன்றியிருப்பதால், நெருக்கமும் செறிவும் புணர்ப்பும் வன்மையும் குறிக்கும் அள் என்னும் அடிச்சொல்லினின்று, முற்கூறிய முறைப்படி, ஐ என்னும் சொல்லும் அதன்வழி ஐயன் ஐயை முதலிய சொற்களும் திரிந்திருப்பது, இயற்கைக்கும் ஏரணத்திற்கும் ஏற்றதே.

ஐயன் என்னுஞ் சொற்கு மூலம் 'ஐ' யாதலால், அது 'ஆர்ய' என்னுஞ் சொல்லொடு பொருந்தாமையையும் கண்டு கொள்க.

## viii. திண்மை

பல அணுக்கள் அல்லது பொருள்கள் மிக நெருங்கிச் சேர்வதால் திண்மை உண்டாகும்.

உறு — உற — உறப்பு. உற — உறை. உறைதல் = கட்டியாதல்.

உறு — இறு — இறுகு — இறுக்கு — இறுக்கம்.

இறுக்குதல் = இறுகுமாறு அமுக்கிக் காட்டுதல்.

குள் — கள் — கட்டு — கட்டி = இறுகியது. கட்டி — கெட்டி.

கள் — காள் — காழ் — காய். காழ்ப்பு = வைரம். காய்த்தல் = உழைப்பால் கை இறுகுதல், பிஞ்சு முதிர்ந்து இறுகுதல், காய் காய்த்தல்.

சுள்—செள்—செறி—செறிவு.

துள்—தின்—திண்—திட்பு—திட்பம்.

திண்—திணுகு—திணுங்கு—திணுக்கம். திண்—திணி.

நுறு—நெறி. நெறித்தல்=விறப்பாகுதல்.

முள்—முறு—முறுகு—முறுகல்=சூட்டினால் இறுகியது.

முறு—முற—முறமுறப்பு=விறப்பு.

முறு—விறு—விற—விறப்பு.

விறு—வெறு—வெறி. வெறித்தல்=செறிதல்.

விற—விறை. விறைத்தல்=குளிரால் இறுகுதல்.

முள்—(மொள்)—மொய். மொய்த்தல்=இறுகுதல்.

### ௧௯. திண்ணம்

திண்ணம் என்பது தட்டையான பொருளின் பருமன். உரம்=திண்ணம்.

ஓலை=திண்ணிய இலை. மெல்லிய தகட்டை ஓலையா யிருக்கிறது என்று கூறும் வழக்கமிருப்பினும், இலையை விட ஓலை திண்ணமாயிருத்தலைக் கவனிக்க.

ஓடு=திண்ணமான காய்த்தோல்.

குள்—கள்—கட்டு—கட்டி—கெட்டி. கெட்டிக் காப்பு=திண்ணமான காப்பு.

துள்—தொள்—தோள்—தோடு=திண்ணமான பழத்தோல், ஓலை.

துள்—(தின்)—திண்—திண்ணம்.

துல்=தில்—திர்—திரம்—திறம்—திறன்.

முள்—முரள்—முரண்=திண்ணமான சிப்பி.

### ௨௦. கனம்

திண்மையானதும் திண்ணமானதும் கனக்கும்.

குரு=கனம். குரு—குரூஉ.

"பசுமட் குரூஉத்திரள்" (புறம். 32).

குல்—கல்—கன்—கன—கனம்.

(புள்)—(பள்)—பளு—பளுவு.

xi. வலிமை

கனமுள்ளது வலியது:

உரம்—உரன். உரம்—உரவு—உரவோன்=வலியோன்.

உறு—எறுழ்=வலி.

குள்—கள்—கட்டு—கட்டி—கெட்டி.

துல்—தில்—திர்—திரம்—திறம்—திறன் திறல்.

திறம்—திறமை.

பொரு—போர்=வலிமை.

முல்—முன்—முன்பு=வலிமை.

முல்—மல்=வலிமை.

மல்=வல்—வலி—வலிமை.

வல்—வலு—வலுவு.

வல்—வன்—வன்பு—வற்பு.

வல்—வலம்=வலிமை, வெற்றி.

வலக்கை=பயிற்சியினால் வலிமைபெற்ற கை.

வலம்=வலக்கைப் பக்கம். வலம்—வலவன்=வலப் பக்கத்துக் காளை, ஊர்தியை வலமாகப்பொறிதிரித்தோட்டு பவன். வலம்வருதல்=நகரை வலமாகச் சுற்றிவருதல்.

முள்—மொள்—மொய்=வலிமை. மொய்—மொய்ம்பு =வலிமை.

முள் (மள்)—வள்=வலிமை.

xii. கடினம்

வலியது கடினமானது:

குல்—கல்=கடினமானது. கல்—கன்று. கன்றுதல்= காய் கிழங்கு முதலியன கடினமாதல். கன்று—கண்டு.

குள்—கள்—கடு—கடுமை:

கடு—கடினம். கடு—கட்டம்.

வன்—(வய்)—வயிர். வயிர்த்தல்—வயிரங் கொள்ளுதல், செற்றங் கொள்ளுதல். வயிர்=கொம்பு. வயிர்—வயிரம் —வைரம்.

வயிர்—வயிரி. வயிரித்தல்=கடினமாதல்,

வயிர்—வயிரி—வைரி=பகை, பகைவன்.

xiii. உறுதி

உரம் — உரன்.
உறு—உறுதி, உறுதலை.
குள் — கள்—கட்டு = உறுதி.
கட்டு—கட்டி—கெட்டி.
துல்—தில்—திர் — திரம்—திறம்—திறன்.
துள் —(திள்)—திண்—திண்ணம்.
திண்—திடம்.
திண் — திண்ணம் — திண்ணக்கம் = நெஞ்சழுத்தம்.
திண்—திடம்—திடாரி—திடாரிக்கம் = நெஞ்சுரம்.

## (8) வளைதலியல்

வேரும் ஆணியும் போன்ற நீண்ட பொருட்கள், தாம் முட்டின பொருளோடொன்றாவிடத்துச் சாயும். இயங்கு திணையுயிரிகள் சுவரும் மலையும் போன்றவற்றால் தடையுண்டவிடத்துப் பக்கமாகத் திரும்பிச்செல்லும்.

### (க) வளைதல் துறை

i. கோணுதல்

கோணுதலாவது, நேராகச் செல்லும் பொருள் ஒரு பக்கமாகச் சாய்தல்.

உல்—ஒல்—ஒல்கு. ஒல்குதல் = சாய்தல்.
உறு—இறு — இற—இறப்பு = கூரைச்சாய்வு.
இற—இறவாணம், இறவாரம் = கூரைச்சாய்வு.
குள்—கொள்—கோள்—கோண். கோணுதல் = சாய்தல்.
கோண் — கோடு. கோடுதல் = சாய்தல்.
கோண்—கோணம் = சாய்வினால் உண்டாகும் மூலை.

சுள்—சள்—சழி. சழிதல்—கலமும் பெட்டியும் பக்கமாக அமுங்கிச் சரிதல்.

சள்—சரு—சருவு. சருவுதல் = சாய்தல்.
சரு—சரி—சரிவு. சரிதல் = சாய்தல்.

சரி=அடிவாரம்.

சரு—சார். சார்தல்=சாய்தல்.

தூணில் சாய்ந்துகொண்டிருக்கிறான் என்பதும், தூணில் சார்ந்துகொண்டிருக்கிறான் என்பதும் ஒன்றே. சேர்தலைக் குறிக்கும் சார் என்னும் சொல்லும், சாய்தலைக் குறிக்கும் சார் என்னும் சொல்லும் வெவ்வேறு.

சார்—சாரல்=மலைச்சரிவு, சாய்ந்து பெய்யும் மழை.

சாரலன்=சாரல்நாடன், மலைநாடன்.

சாரலன்—சேரலன்—சேரல்—சேரன்=மலை நாடன், முத்தமிழ் வேந்தருள் ஒருவன்.

சள்—சாள்—சாடு. சாடுதல்=சாய்தல். சாடு—சாட்டம்—சாய்வு. சாடு—சாடை=நேரன்மை, சாயல், ஒப்பு.

சாள்—சாய்—சாய்வு. சாய்வு சரிவு என்பது வழக்கு.

சாயுங்காலம்—சாயங்காலம்—சாய்ங்காலம்=கதிரவன் சாயும் வேளை (ஏற்பாடு).

சாய்—சாயை=நிழல். நிழல் சாய்தல் என்னும் வழக்கை நோக்குக. சாய்—சாயல்=நிழல், ஒருமருங்கு ஒப்பு.

(தலை) சாய்த்தல்=தூங்குதல். சாய்—சயனம் (வ.).

சாய்—சா—சாவு. சாதல்=சாய்ந்து விழுதல்போல் இறத்தல்.

துல்—தில்—திரு—திரும்—திரும்பு. திரும்புதல்=சாய்தல்.

உச்சிவேளைக்குப்பின் உடம்பு நிழல் சாய்வதை அடித் திரும்புதல் என்று கூறுதல் காண்க.

முல்—(மூல்) மூலை=கோணம்.

முள்—முட—முடங்கு—முடங்கி=மூலை. மூலை முடங்கி என்பது வழக்கு.

முள்—(மூள்)—(மாள்)—மாண்—மாணல்=சாய்வு, வளைவு. கோணல் மாணல் என்பது வழக்கு.

மாள்—மாடு—மாடை = சாய்வு. சாடைமாடை என்பது வழக்கு. நேராகப் பழிக்காமல் சாய்வு போன்ற நேரல் முறையில் பழித்தல், சாடைமாடையாய்த் திட்டுதல் எனப்படும்.

மள்வள்—வாள்—வார். வார்தல் = சாய்தல், சரிதல்.

வார்—வாரம் = சரிவான இடம். அடிவாரம் = மலைச் சரிவு.

தாழ்வாரம் = கூரைச்சரிவு.

வாள்—வாடு—வாட்டம் = சாய்வு. வாட்டம் சாட்டம் என்பது வழக்கு. அங்கணம் வாட்டம் சாட்டமாய் இருக்க வேண்டும் என்பர்.

11. வளைதல்

வளைதலாவது, கொடியும் மெல்லிய கம்பியும் போன்ற நீண்ட துவள்பொருட்கள் வட்டமாகும் வரை மேன்மேலும் பலபடியாய்க் கோணுதல்.

உறு—இறு. இறுதல் = வளைதல்.

இறு—இற = வளைந்த பெருங்கூனி (prawn)

இற—இறா—இறவு. இறா—இறால்—இறாட்டு.

இற—இறை = பெண்டிரின் வளைந்த முன்கை.

குல்—குல—குலவு. குலவுதல் = வளைதல். குலவு—குலாவு.

குல்—குன்—குனி. குனிதல் = வளைதல்.

குன்—கூன் = வளைந்த முதுகு. கூனுதல் = வளைதல்.

கூன்—கூனி = சிற்றிறால்.

குள்—குழி—குழியம் = வளைதடி.

குள் — (குண்) — குண — குணகு — குணக்கு = வளைவு. குணகுதல் = வளைதல்.

குள்—கூள்—கூளி = வளைந்த வாழைப்பழம்.

குள்—குரு—குருகு = (வளையல்), வளைந்த கழுத்துள்ள நீர்ப்பறவையினம்.

குள் — குட — குடம் = வளைவு. குடா = வளைவு. குடந்தை = வளைவு. குட—குடக்கம் = வளைவு.

குரு—குர—குரங்கு=வளைவு, கொக்கி. குரங்குதல்=வளைதல்.

குர—குறள்—குறண்டு. குறண்டுதல்=வளைதல்.

குறள்—குறடு=வளைந்த அலகுள்ள கருவி.

குள்—கொள்=வளைந்த காணக்காய். கொட்பு=வளைவு.

கொள்—கொடு—கொடுமை=வளைவு. கொடுங்கோல்=வளைந்த கோல். கொடுக்காய்ப்புளி=வளைந்த காயுள்ள மரவகை. கொடுக்கு=வளைந்த முள்.

கொடு—கொடி=வளைந்த தண்டு. கொடு—கொடிறு=வளைந்த குறடு, குறடு போன்ற அலகு (jaw).

கொள்—(கொட்கு)—கொக்கு=வளைந்த கழுத்துள்ள பறவையினம்.

கொள்—கொம்—கொம்பு=வளைந்த கோடு, வளைந்த விலங்குக் கொம்பு.

கொள்—கோள்—கோண்—கோணம். கோணப்புளி=கொடுக்காய்ப்புளி. கோணம்=கூன்வாள்.

கோண்—கோடு. கோடுதல்=வளைதல், கோடு—கோட்டம்=வளைவு. கோடு=வளைந்த யாழ்த்தண்டி, யாழ்த்தண்டி, பிறை வளைவு.

"வடகோ டுயர்ந்தென்ன தென்கோடு சாய்ந்தென்ன
வான்பிறைக்கே" (பட்டினத்தார்).

சுள்—சுளி. சுளிதல்=வளைதல்.

சுள்—சுர்—சுரி. சுரிதல்=வளைதல்.

சுவள்=சவள். சவளுதல்=வளைதல்.

துள்—துட—(துடம்)—தடம்=வளைவு.

"தடவென் கிளவி கோட்டமுஞ் செய்யும்"
(தொல். உரி. 22.)

துவளுதல்=வளைதல்.

நுள்—நுட—நுடம்=வளைவு, கால் கை வளைவு.

நுட—நுடங்கு. நுடங்குதல்=வளைதல்.

நுள்—நெள்—நெளி=வளைவு, வளைந்த அணி. நெளிதல்=வளைதல்.

நுள—(நொள்)—நொடி. நொடித்தல்=வளைதல்:

புள்—புரு—புருவம்=வளைந்த கண்பட்டை:

புரு—புரி. புரிதல்=வளைதல்.

புரு—(புறு)—புறை—பிறை=வளைந்த நிலா.

முலி — வில் = வளைந்த எய்கருவி. வில் — விலா = வளைந்த நெஞ்செலும்பு.

முள்—முரு—முருகு=வளைந்த காதணி.

முள் — முறு — முறி. முறிதல் = வளைதல்; முறி — மறி: மறிதல்=வளைதல்.

முள்—முட—முடம்=வளைவு, கைகால் வளைவு.

முடம்—(முடல்)—முடலை=பெருங்குறடு.

முடம்—முடங்கு. முடங்குதல்=வளைதல்: முடங்கு—மடங்கு. மடங்குதல் = வளைதல். முடங்கு — முடக்கு — முடக்கம். மடங்கு — மடக்கு — மடக்கம். முடங்கல் = சுருண்டு முடங்கிய திருமுக வோலை.

முள்—(மள்)—வள்—வளை—வளைவு. வள்—வள்ளி= கொடி. இனி, புள்—பள்—வள் எனினுமாம்.

வுள்—வளார்=வளைந்த சிறு போத்து.

வளார்—விளார்—மிலார்—மிலாறு.

வள்—வாள்—வாளி=வளைந்த தூக்குப்பிடி.

வள்—(வண்)—வணங்கு. வணங்குதல்=வளைதல்.

"சொல்வணக்கம் ஒன்னார்கட் கொள்ளற்க வில்வணக்கம்
தீங்கு குறித்தமை யான்" (குறள். 827.)

வணங்கு—வாங்கு. வாங்குதல்=வளைதல், வளைத்தல்.

வாங்கு—வங்கு—வங்கி=வளைந்த தத்தி (பிச்சுவா), நெளிவு.

வங்கி வளையல்=நெளி வளையல்:

வாங்கு—வாங்கா=வளைந்த ஊது கருவி:

வாங்கா—வங்கா.

வண்—வணர் = யாழ்க்கோட்டின் வளைந்த கடை.

வணர்—வணரி = வளைதடி.

முள்—(முடு)—முடி—மடி. மடிதல் = வளைதல், மடங்குதல்.

முரு—முரி—மூரி = வளைவு. முரிதல் = வளைதல்.

முள்—முறு—முறை—மிறை = வளைவு.

குல்—(மல்)—வல்—வல. வலத்தல் = வளைதல்.

### iii. வணங்குதல்

மக்கள் கடவுளையும், தாழ்ந்தோர் உயர்ந்தோரையும் வணங்கும்போது உடம்பு வளைதலால், வளைதற் கருத்தில் வணக்கக் கருத்துப் பிறந்தது.

உறு—இறு—இற—இறை—இறைஞ்சு. இறைஞ்சுதல் = வளைதல், வணங்குதல்.

குடம்—குடந்தம் = வளைவு, வணக்கம். குடந்தம் படுதல் = வளைதல், வணங்குதல், தொழுதல்.

குள்—(மள்)—வள்—(வண்)—வணங்கு—வணக்கு—வணக்கம். வணங்குதல் = வளைதல், தொழுதல்.

### iv. திரும்புதல்

ஒரு பொருள் வளையும்போது அது தான் முன்பு புறப்பட்ட இடத்தை அல்லது திசையை நோக்குதலால், வளைதற் கருத்தில் திரும்பற் கருத்துப் பிறந்தது.

துள்—(துரு)—திரு—திரும்—திரும்பு.

திரு—திரி. திரிதல் = திரும்புதல்.

முள்—முறு—முறி—மறி. மறிதல் = திரும்புதல்.

முள்—முடு—முடங்கு—மடங்கு. மடங்குதல் = திரும்புதல்.

மடங்கு—மடங்கல் = இடையிடை திரும்பிப் பார்க்கும், அதாவது முன்னும் பின்னும் நோக்கிச் செல்லும் அரிமா, அதுபோன்ற கூற்றுவன்.

## v. மீள்தல்

மீள்தலாவது திரும்பி வருதல்.

துள்—(துரு)—திரு—திரும்—திரும்பு.

திரு—திரி. திரிதல்=திரும்புதல்.

"ஒன்றைச் செப்பினை திரிதியென்றான்"

(கம்ப. அங்கத. 10.)

முள்—(மூள்)— மீள் — மீட்சி. மீள்தல் = திரும்புதல். மீட்டல்=திருப்புதல், அடைவு வைத்த பொருளைத் திருப்புதல்.

மூள்—மூட்டு—மீட்டு. மீட்டுதல்=திருப்புதல், அடைவு வைத்த பொருளைத் திருப்புதல். மூட்டுதல் என்பதே உலக வழக்கு.

மீள்தல்=பகைவர் கையினின்று அல்லது துன்பத்தினின்று திரும்புதல். மீட்டல்=பகைவர் கையினின்று அல்லது துன்பத்தினின்று விலக்கிக் காத்தல்.

மீள்—மீட்பு—மீட்பன்.

நிரைமீட்சி என்பது நிரை திரும்பி வருதலையும் மீட்கப்படுதலையும் குறித்தல் காண்க.

## vi. மடங்குதல்

இலையும் தாளும் துணியும் போன்ற பொருட்களின் ஓரமும், கைகால் முதலியவற்றின் முனையும், திரும்புதலே மடங்குதலாம்.

சுள்—சுர்—சுரி. சுரிதல்=மடிதல், மடிப்பு விழுதல்.

முள்—முடு—முடங்கு—மடங்கு.

முடு—முடி—மடி. மடிதல்=மடங்குதல்.

மடித்தல்=தாள் துணி முதலியவற்றை மடக்குதல்.

மடி=மடிக்கப்பட்ட சேலை, அரையிற் கட்டின ஆடையின் மேல் விளிம்பைப் பைபோல் மடித்த பகுதி.

மடங்கு—மடக்கு=அலகை மடக்கிவைக்குங் கத்தி.

மடக்குதல்=மடித்தல்.

## vii. திரைதல்

திரைதலாவது மடிப்பு விழுதல் அல்லது மடிப்பு விழுந்து சுருங்குதல்.

சுள்—சுர்—சுரி. சுரிதல்=மடிப்பு விழுதல், திரைதல்;

சுரித்தல்=திரைதல், சுருங்குதல்.

சுரித்த மூஞ்சி=மூப்பினால் திரைந்த முகம்.

சுரிதகம்=கலிப்பாவின் பிறவுறுப்புக்களிற் கூறப்பட்ட பொருளைச் சுருக்கி அல்லது தன்னுள் அடக்கிக் கூறும் முடிவுறுப்பு. சுரிதகம், தரவு தாழிசை முதலியவற்றிற் கூறப்படும் பொருளை அடக்கிக் கூறுவதனாலேயே, அடக்கியல் எனப்பட்டதென்றறிக.

சுள்—சுரு—சுருங்கு—சுருக்கு—சுருக்கம்.

குடையை மடக்குதலைக் குடையைச் சுருக்குதல் என்றும், திரை விழுதலைச் சுருக்குவிழுதல் என்றும் கூறுதல் காண்க.

துள்—(துரு)—திரை. திரைதல்=மடிப்பு விழுதல், அலையெழுதல், சுருங்குதல், திரளுதல்.

திரைத்தல்=மடித்துச் சுருக்குதல், மடித்துத் திரட்டுதல்.

திரை—திரையல்=சுருங்குகை, வெற்றிலைச் சுருள்.

திரை—திரங்கு. திரங்குதல்=திரைந்து சுருங்குதல், வற்றிச் சுருங்குதல், சுருளுதல்.

திரங்கு—திரக்கு. திரக்குதல்=சுருங்குதல்.

## viii. திருப்புதல்

திருப்புதலாவது பக்கந் திருப்பிப் புரட்டுதல்.

திரும்பு—திருப்பு—திருப்பி.

தோசை திருப்பி=தோசையைப் புரட்டுங் கருவி.

புரள்தல்=திரும்புதல். புரண்டுபடுத்தல் = திரும்பிப் படுத்தல்.

புரள்—புரட்டு. புரட்டுதல்=ஒன்றைத் திருப்புதல்.

புரட்டு—புரட்டி. தோசை புரட்டி=தோசை திருப்பி.

புரட்டு—புரட்டல்=புரட்டிச் சமைக்குங் கறி.

ix. மடக்குதல்

மடக்குதலாவது ஒன்றைத் திருப்பி அதன் செலவைத் தடுத்தலும் அதை அமர்த்துதலும்.

முள் — முறு — முறி — மறி. மறித்தல்=மடக்குதல், அமர்த்துதல்.

கிடைமறித்தல்=கிடையமர்த்துதல்.

மறி—மறியல்=தடுத்தல்.

முள்—முடு—முடங்கு—மடங்கு—மடக்கு.

மடக்குதல்=திருப்புதல், தடுத்தல், அமர்த்தல், வெல்லுதல்.

மடங்குதல்=தோற்றல், அடங்குதல்.

கிடை மடக்குதல்=கிடையமர்த்துதல்.

முடங்கு—முடக்கு. முடக்குதல்=தடுத்தல்.

x. முடங்கிக் கிடத்தல்

முடங்கிக் கிடத்தலாவது சோம்புதலும் பயன்படாது ஓரிடத்துத் தங்குதலும்.

இயங்கு திணையுயிரிகள் தூங்கும்போது பொதுவாய்க் கைகால முடக்கிக்கொள்வதால், முடங்கற் கருத்தில் மடிமைக் கருத்துத் தோன்றிற்று.

இனி, மடக்குண்டு கிடத்தலே முடங்கிக் கிடத்தல் எனினுமாம்.

முடங்குதல்=தூங்குதல், வழங்காது ஓரிடத்தமர்தல்.

பண முடக்கம்=பணம் வழங்காது ஓரிடத்துத் தங்குதல்.

முள் — முடு — முடி — மடி. மடிதல் = தூங்குதல், சோம்புதல். மடி=சோம்பல், கட்டுக்கடைச் சரக்கு.

மடிவீகதல்=கட்டுக்கடைச்சரக்கு நாறுதல்.

xi. பன்முறை குறித்தல்

ஒன்றைத் திரும்பத் திரும்பச் செய்தல் அதைப் பன்முறை செய்தலாதலால், திரும்பற் கருத்துச் சொல் பன்முறைக் கருத்துணர்த்தும்.

திரும்ப, திரும்பத் திரும்ப, திரும்பவும், திரும்பியும்.
திருப்பி, திருப்பித் திருப்பி, திருப்பியும்.
திரிய, திரியவும்.
மடங்கி, மடங்கி மடங்கி.
மடக்கி, மடக்கி மடக்கி.

மடக்கு = ஒரு சொல்லைப் பொருள் வேறுபட மடக்கி மடக்கிக் கூறும் அணி.

மறிந்து,
மறித்து, மறித்தும்.
(முறு—மறு) மறுக்க, மறுத்து, மறுத்தும்.
மீள, மீண்டும், மீண்டும் மீண்டும்.
மீட்டும்.

வளைய, வளைய வளைய, வளைத்து, வளைத்து வளைத்து.

குறிப்பு:—இங்குக் குறிக்கப்பட்டவற்றுள் மடக்கு என்னுஞ் சொல்லொன்றே பெயர்; பிறவெல்லாம் இடைச் சொல்.

## xii. வேறாதல்

ஒன்றைத் திரும்பச்செய்வது வேறொரு முறை செய்வதும், ஒன்றினின்று திரிதல் அதனின்று வேறுபடுதலு மாதலால், திரும்பற் கருத்துச்சொல் வேறாதற் கருத்தைத் தழுவிற்று.

மறு = வேறு. மறு பிறவி = வேறு பிறப்பு.
மறுபடி = வேறொரு முறை. மறுநாள் = அடுத்த நாள்.
மறு—மற்று = வேறு, திரும்பவும், வேறாக.
மற்று—மற்ற—மற்றை (பெயரெச்சம்)
மற்றொன்று = வேறொன்று.
மற்றப்படி = வேறுவகையில்.
மற்றவன் = வேறொருவன், பிறன், அடுத்தவன்.

## xiii. மாறுதல்

வேறாதற் கருத்து மாறுதற் கருத்தைத் தழுவும்.
திரும்பு—திருப்பு. திருப்புதல் = மொழிபெயர்த்தல்.

சொல்லைத் திருப்புதல்=சொல்லை மாற்றுதல்.

திரும்பு—திறம்பு. திறம்புதல்=வேறுபடுதல், மீறுதல்.

திரிதல் = வேறுபடல், மாறுதல். திரித்தல் = வேறுபடுத்தல்.

திரி—திரிவு—திரிபு.

திரிசொல்=இயற்சொல்லினின்று திரிந்த சொல்.

புல் — புரு — புரள். புரள்தல் = சொல் மாறுதல். புரள் — புரளி = மெய்ம்மாற்று, பொய். புரள் — புரட்டு — புரட்டன். புரள்—பிறள்—பிறழ்ச்சி. புரள்—புரட்சி.

முறு—மறு—மறுத்தல்=மாற்றுதல். மறு—மறுப்பு.

மறு—மறை=மறுப்பு. எதிர்த்து—எதிர்மறை.

மறுக்களித்தல்=பழைய கொள்கைக்கு மாறுதல்.

மறுதலித்தல்= ,,

மறு—மாறு—மாற்று—மாற்றம்.

## xlv. மடங்களவு

ஒன்றைத் திரும்பத் திரும்பச் செய்வது அதைப் பன்மடங்கு பெருக்குவதாயிருத்தலால், திரும்பற் கருத்துச் சொல் மடங்களவைக் குறித்தது.

ஆங்கிலத்தில் turn (திரும்பு) என்னுஞ் சொல் முறையையும், fold (மடி) என்னுஞ் சொல் மடங்கையும், குறித்தல் காண்க.

எ-டு: Five turns, ten fold.

(துடம்)—தடம்=வளைவு. தடம்—தரம்=முறை.

ட—ர, போலி. ஒ. நோ. படவர்—பரவர்.

தடம்—தடவை=முறை.

திரும்பு—திருப்பு=தடவை.

முடங்கு—மடங்கு. இருமடங்கு=இருமுறையளவு.

முடி—மடி=மடங்கு. இருமடியாகு பெயர், மும்மடிச் சோழன், நான்மடித் தொலைவரி (தந்தி) முதலிய தொடர்களை நோக்குக.

முறு—முறை=வளைவு, தடவை.

முள்—(மூள்)—(மாள்)—மாண் = மடங்கு.

"பன்மாண்" (பரிபா. 13, 62)

வள்—(வாள்)—வாட்டி = தடவை.

சுற்று வட்டம் வளையம் முதலிய சொற்கள் முழுவளைவு குறித்தவை.

## XV. வருதல்

ஓரிடத்திற்குச் சென்றவன் திரும்புதலே வருதலாம். இன்று சென்னைக்குச் சென்று நாளைக்குத் திரும்புவேன் என்னுங் கூற்றில், திரும்புவேன் என்பது திரும்பிவருவேன் என்று பொருள்படுதல் காண்க.

செல்லுதல் வருதல் என்பன திசைநோக்கி வேறுபட்டனவேயன்றி, வினைவடிவில் வேறுபட்டனவல்ல. ஒருவன் ஓரிடத்தினின்று மற்றோரிடத்திற்குச் செல்லும்போது, அவ்வினை புறப்பட்ட இடத்தை நோக்கிச் 'செல்லுதல்' என்றும், புகும் இடத்தை நோக்கி 'வருதல்' என்றும் கூறப் படும். ஆதலால், ஒருவன் ஓரிடத்திற்குப் புதிதாய் வரினும் மீண்டுவரினும், திசைபற்றி இரண்டும் ஒன்றாகவே கொள்ளப் படும்.

வள் = வளைவு. வள்—வரு—வார்—வா—வ.

ஒ. நோ. தள்—தரு—தார்—தா—த.

வரு : வருகிறான், வருகை, வருவாய், வரவு.

வார் : வாரானை (வருகை), வாரும், வாருங்கள் (ஏவற் பன்மை).

வார், வா (ஏவல் ஒருமை).

வ : வந்தான், வம்மின் (ஏவற்பன்மை).

வருகிறான் வருவான் என்னும் நிகழ்கால எதிர்கால முற்று வடிவுகளிலும், வருகை என்னும் தொழிற்பெயரிலும், வரு என்பது பகுதியாயிருத்தலானும்; வார் என்னும் ஒருமை யேவலிலும், வாரும் வாருங்கள் என்னும் பன்மை யேவலிலும், வார்தல் வாரானை என்னும் தொழிற்பெயர்களிலும், வார் என்பது பகுதியாயிருத்தலானும்; வா என்னும் ஏவலொருமை வடிவினின்று வாதல் வாவு என ஏதேனும் ஒரு தொழிற்பெயர் பிறவாமையானும், வருதல் என்னும் வினைக்கு ருகரங்கூடிய

வரு என்பதே பகுதியாம். வள் என்னும் அடியினின்று முதலாவது திரியக்கூடிய வைவர்—வரு என்பவையே.

இங்கு வருதல் வினைக்குக் கூறியதைத் தருதல் வினைக்குங் கொள்க. கோர் என்னும் சொல் கோ எனக் குறைந்ததுபோல, வரு என்பதன் திரிபான வார் என்னுஞ் சொல்லும் வா எனக் குறைந்ததென்க. நோ என்னும் வினை இறந்தகாலத்திலும் ஏவலிலும் நொ (நொந்தான், நொம்மாடா) எனக் குறுகியதுபோல, வா தா என்பனவும் வ த எனக் குறுகின.

வார் = வா (ஏவலொருமை).

''வந்திக்க வாரென'' (பரிபா. 20, 70).

''லாரடா வுனக்கியாது தானர்தம் மகளடுக்கிமோ''
(பாரத. வேத்திர. 12).

## Xvi. வரைதல்

வரைதலாவது எழுதுதல். எழுதுதல் என்பது, எழுத்து எழுதுதலையும் படம் வரைதலையும் பொதுப்படக் குறிக்கும். முற்காலத்தில் படவெழுத்தே (Heiroglyphic or picture-writing) தமிழகத்தில் வழங்கியதால், எழுத்து என்னும் சொல் படத்தையும் வரிவடிவையும் ஒருங்கே உணர்த்திற்று.

படமும் எழுத்தும் பெரும்பாலும் வளைகோடுகளாலாவதால், வளைதற் கருத்தில் வரைதற் கருத்துப் பிறந்தது.

இருதிணையுயிரிகளின் உடம்பிலும் இயல்பாகக் காணப்படும் கோடுகள் பொதுவாக வளைந்தேயிருத்தலின், கோடு என்னும் பெயர் முதலாவது வளைகோட்டையே குறித்துப் பின்பு ஒப்புமைபற்றி நேர் கோட்டையும் குறித்தது.

கோடுதல் = வளைதல். கோடு = வளைகோடு, வரி(கோடு).

வரிக்குதிரை வரிப்புலி முதலியவற்றின் கோடுகளை நோக்குக.

வள்—வர்—வரி. வரிதல் = வளைதல், வளைத்து அல்லது சுற்றிக்கட்டுதல்.

வரி = வளைகோடு, கோடு, கோட்டுவடிவான எழுத்து, வரைவு, வரணனை, வரணிக்கும் பாட்டு அல்லது காதற் பாட்டு, கட்டு.

ஆற்றுவரி கானல்வரி முதலிய இசைப்பாட்டு வகைகளை நோக்குக.

வரித்தல் = எழுதுதல், வரைதல், பூசுதல், காதலியின் தோளிலும் மார்பிலும் வரைதல், அவளை மணத்தல், வளைத்து அல்லது சுற்றிக்கட்டுதல்.

வரி—வரன் = மணவாளன்.

வரி—வரணம் (வரி + அணம்) = எழுத்து, வரைவு, பூச்சு, நிறம், குலம், வகை, ஓசைவகை, பண், பாட்டு.

வரணம் (வ.) —வரணி (வ.). வரணித்தல் = வரைதல், சொல்லால் வரைதல்.

வரணி—வரணனை (வரணி + அனை). வரணம் வரணி வரணனை என்பன தென் சொல்லடியாய்ப் பிறந்த வடநாட்டுச் சொற்கள்.

வள் → வண்—வண்ணம் = எழுத்து, வரைவு, பூச்சு, நிறம், வகை, செய்யுள், ஓசைவகை.

வண்ணம்—வண்ணகம் = அராகம் என்னும் வண்ண வுறுப்பு. வண்ணக வொத்தாழிசைக்கலி தொன்றுதொட்டு வழங்கும் தமிழ்ச் செய்யுள் வகை.

வண்ணத்தான்—வண்ணான் = ஆடைக்கு நிறமூட்டுபவன்.

வண்ணத்துப்பூச்சி—வண்ணாத்திப்பூச்சி.

வண்ணம் → (வண்ணகன்) → வண்ணக்கன் = கட்டி நாணயத்தின் வண்ணத்தை (உரைத்து) நோட்டஞ் செய்பவன்.

வண்ணம்— வண்ணி. வண்ணித்தல் = வரணித்தல்.

வண்ணி—வண்ணகம் = வரணித்துப் புகழ்கை.

ஒ. நோ. சுள் — சுண் — சுண்ணம் — சுண்ணகம். சுண்ணித்தல் = நீறாக்கல்.

வரி → வருவு. வருவுதல் = கோடிடுதல். வருவூசி = கோடிடும் ஊசி.

வரி — வரை = கோடு, கீறல். வரைதல் = ஓவியம் வரைதல், எழுத்து எழுதுதல், கட்டுரை அல்லது நூல் எழுதுதல், காதலியின் தோளிலும் மார்பிலும் தொய்யில் வரைதல், அவளை மணத்தல்.

குறிப்பு :—வண்ணம் வண்ணகம் என்பன தொன்று தொட்டு வழங்கிவரும் தமிழிலக்கணக் குறியீடுகளாதலானும், அவற்றாற் குறிக்கப்படுவன தனித்தமிழ் யாப்பு வகைளாதலானும், அக்குறியீடுகட்கு மூலம் தனித்தமிழ்ச் சொற்களே.

இனி, வண்ணம் என்னும் சொல், வகை என்னும் பொருளில், அவ்வண்ணம் இவ்வண்ணம் எவ்வண்ணம் என இருவகை வழக்கிலும் பெருவழக்காய் வழங்குதலையும் நோக்குக.

நிறம் என்னும் வரணப் பெயரும் திறம் என்னும் வகைப் பெயரும் இசைவகையைக் குறித்தல் போன்றே: அவ்விரண்டையும் குறிக்கும் வண்ணம் என்னும் பெயரும் இசை வகையைக் குறித்ததென்க. தொல்காப்பியத்தில் 20 வண்ணங்களும், அவிநயத்தில் 100 வண்ணங்களும் கூறப்பட்டுள.

''வண்ணந் தானே நாலைந் தென்ப''

என்று தொல்காப்பியம் (செய். 210) வழிநூன்முறையிற் கூறுவது கவனிக்கத்தக்கது.

### xvii. வரம்பு

ஓரிடத்தின் எல்லை கோட்டினால் குறிக்கப்படுவது வழக்கமாதலின், கோடிடுதல் எல்லை குறித்தலையுணர்த்திற்று.

வரைதல் = கோடிடுதல், எல்லை குறித்தல், வரையறுத்தல், விலக்குதல்.

வரை = கோடு, எல்லைக்கோடு, அளவு, எல்லை.

'வரையறுத்தல்', 'அடிமுதல் முடிவரை', 'இதுவரையும்', 'இதுவரைக்கும்' முதலிய வழக்குக்களைக் காண்க.

வரை – வரம்பு = கோடு, எல்லை, அளவு, தாண்டக் கூடாத எல்லைபோன்ற அறவிதி, சட்டம்.

வரம்பு – வரப்பு = வயலெல்லையாகிய சுற்றுத்திடர்.

## (உ) இயங்கல் துறை

### 1. அசைதல்

அசைதல் என்பது, ஏதேனுமொரு பொருள் இடவலமாகவேனும் முன் பின்னாகவேனும் சாய்தல் அல்லது

வளைதலேயாதலின், வளைதற் கருத்தில் அசைதற் கருத்துப் பிறந்தது.

உல்—உல—உலவு—உலாவு. உலாவுதல் = அசைதல்.

உல்—அல்—அலை. அலைதல் = அசைதல். அலை—அசை.

அல்—ஆல்—ஆடு. ஆடுதல் = அசைதல்.

உல் — உலு — உலுங்கு — உலுக்கு. உலுங்குதல் = அசைதல். உலுக்குதல் = அசைத்தல்.

உலுங்கு—அலுங்கு— அனுங்கு— அனுக்கு.

உலுக்கு — அலுக்கு = கமகம். அலுக்குதல் = குரலை இனிமைபட வளைத்தல் அல்லது அசைத்தல்.

அலுங்கு—அலங்கு— அலங்கல் = அசைதல்.

உலு — உலுப்பு. உலுப்புதல் = அசைத்தல்.

உல்—ஒல் — ஒல்கு. ஒல்குதல் = வளைதல், அசைதல்.

உள்—(உய்)—உயல். உயலுதல் = அசைதல்.

(உய்) — (உய) — இய — இயங்கு—இயக்கு—இயக்கம் = அசைவு, கிளர்ச்சி. இயங்குதல் = அசைதல்.

குல்—குலு—குலுங்கு—குலுக்கு. குலுங்குதல் = அசைதல்.

(சுல்)—சல்—சலி. சலித்தல் = அசைதல், அசைந்தல், அசைத்துத் தெள்ளுதல். சலியடை = சல்லடை.

துள்—துள—துளங்கு—துளக்கு—துளக்கம்.

துளங்குதல் = அசைதல்.

துள் —(துய்)—துயல். துயலுதல் = வளைதல், அசைதல்.

நுள் — நுண் — நுணங்கு. நுணங்குதல் = வளைதல், அசைதல்.

நுள் — நுட — நுடங்கு. நுடங்குதல் = வளைதல், அசைதல்.

## 11. இயங்குதல்

ஒரு பொருள் அசைவதினால் அது சற்று இடம் பெயர்கின்றது. ஓரிடத்தினின்று இன்னோரிடத்திற்குப் பெயர்தலும் அசைவின்பாற்படும். ஆங்கிலத்திலும் move என்னுஞ்

சொல், அசைதலையும் இடம் பெயர்தலையுங் குறித்தல் காண்க.

உல—உல—உலவு—உலாவு. உலாவுதல்=இயங்குதல்.

உல்—ஒல்—ஒல்கு. ஒல்குதல்=நடத்தல்.

ஒல்கு—ஒழுகு—ஒழுக்கு—ஒழுக்கம்=நடத்தை.

ஒழுகுதல்=நடத்தல், முக்கரணத்தால் நடத்தல்.

உல்—அல்—அலை—அசை. அசைதல் = நடத்தல், மெல்ல நடத்தல்.

உன்-(உய்)—உய—இய—இயங்கு—இயக்கு—இயக்கம் =செலவு. இயங்குதல்=செல்லுதல்.

உய — உயவு. உயவுநெய் = வண்டி செல்லுதற்கு வேண்டும் மசகு.

உய—உயல்—இயல். இயலுதல்=நடத்தல், நிகழ்தல், நிழக முடிதல், செல்லுதல்.

இய—இயவுள்=செலுத்துவோன், கடவுள்.

இயல்=நடத்தை, தன்மை.

இயல்—இயல்பு=தன்மை.

இயல்—இயற்கை=தன்மை, தன்மையாக அல்லது தானாக நடப்பது.

சல்—செல்—செலவு.

### iii. வருந்துதல்

அசைவினாலும் செலவினாலும் உடம்பிற்குத் தளர்ச்சியும் வருத்தமும் பிறக்கும். அதனால், அசைவும் செலவும் குறித்த சொற்கள் தளர்ச்சியும் வருத்தமுங் குறிக்கும். உள்ளத்தின் அசைவு துன்பம், உடலின் அசைவு வருத்தம்.

உல்—அல்—அல்லல்=துன்பம்.

அல்—அல்லா. அல்லாத்தல்=துன்புறுதல்.

அலசுதல்=அசைதல், வருந்துதல். அலசடி=துன்பம்.

அலைதல் = அசைதல், வருந்துதல். அலைத்தல் = வருத்துதல்.

ஆறலைத்தல்=வழிப்போக்கரை வருத்திப் பறித்தல்.

அலைச்சல்=திரிதல், வருத்தம்.

அலை—அசை—அசைவு=தளர்ச்சி, வருத்தம், துன்பம்.

சுல்—சல் — சலி — சலிப்பு. சலித்தல் = தளர்தல், வருந்துதல்.

சில்—செல்—செல்லல்=துன்பம்.

"செல்லல் இன்னல் இன்னா மையே" (தொல். உரி. 6)

துளங்குதல்=அசைதல், வருந்துதல்.

## (ங) முறிதல் துறை

### முறிதல்

முறிதலாவது, விறப்பான நீள் பொருள்கள் ஒன்றை முட்டிச் சாயுமிடத்து அல்லது வளையும்போது ஒடிதல். இவ்வியற்கை விதியறிந்தே, வரிச்சையும் கரும்பையும் ஒடிக்கவேண்டியவிடத்து முழங்காலை முட்டவைத்துச் சாய்ப்பர்.

உடு—ஒடு—ஒடி. ஒடு=வளைவு, நெளிவு. ஒடு—ஒடுக்கு, உலோகக் கலங்களின் நெளிவை ஒடு அல்லது ஒடுக்கு என்பர். அதை நீக்குதற்கு ஒடுத்தட்டுதல் அல்லது ஒடுக்கெடுத்தல் என்று பெயர்.

ஒடிதல்=முறிதல். ஒடி—ஒசி.

உறு—இறு. இறுதல்=வளைதல், முறிதல்.

நுள் — நொள் — நொடி. நொடித்தல் = வளைதல், ஒடிதல்.

நுள் — நெள் — நெரு — நெரி — நெரிசல் = நெருங்கி முட்டுதல், உடைதல்.

கண்ணாடி மட்கலம் முதலிய பொருள்கள் ஒன்றோடொன்று முட்டி நெரிந்துபோவது, அவற்றின் பகுதிகள் சாய்ந்து முறிதலே.

நெரிதல்=வளைதல், முறிதல்.

நெறிதல்=வளைதல். நெறித்தல்=புறவிதழொடித்தல்.

முள்—முறு—முறி. முறிதல்=வளைதல், ஒடிதல்.

முறி=முறிந்த துண்டு, சீட்டு.

## (ச) திருகல் துறை

### திருகல்

ஒரு நீண்ட பொருள் முழு வட்டமாகாது மேலும் மேலும் பல நெளிவுகளாக அல்லது வளைவுகளாகத் தொடர்தல் திருகலாம்.

சுள்—சுரு—சுரி. சுரியாணி=முறுக்காணி.

துள் — (திள்) — திரு — திருகு — திருகல். திருகு — திருக்கு=திருகிவைக்கும் அணி அல்லது ஆணி, முறுக்கு, மாறுபாடு, வஞ்சனை.

திருகும் ஆணி திருகாணி. திருகலான கள்ளி திருகு கள்ளி.

திருகு=கொண்டைத் திருகுபோல் திருகிவைக்கும் அணி.

திருகி=தேங்காய் திருகிபோன்ற கருவி.

திரு—திரி. திரிதல்=முறுகுதல். திரித்தல்=முறுக்குதல்.

திரிசடை திரிதாடி திரிமருப்பு முதலியன முறுக்குண்ட பொருள்களின் பெயர்கள்.

புள் — புரு — புரள் — புரளை — புரடை — பிரடை — பிருடை=யாழ் முறுக்காணி, திரித்துக் கூறும் பொய்.

புரு — புரி = முறுக்குண்ட நூல், கயிறு, புரிதல் = முறுகுதல்.

புரு—புரள்—புரண்டை—பிரண்டை = புரண்டிருக்கும் அல்லது முறுக்குண்டிருக்கும் கொடி.

முள் — முறு — முறுகு — முறுகல். முறுகு—முறுக்கு= திருகலாகவுள்ள பலகாரம், முறுக்கும் ஆணி முறுக்காணி.

திருகல் முருகல் என்பது வழக்கு.

முள்—(மள்)—வள்—வளை=சங்கு (முறுகியிருப்பது).

## (ஞ) வட்டத் துறை

வளைந்த பொருளின் இருமுனையும் தொடுமாறு முழு வளைவானதே வட்டம்.

1. வட்டமானவை

உறு—இறு—இறால்=வட்டமான தேன்கூடு. இறத்தல்=வளைதல்.

உள் — (அள்) — (ஆள்) — ஆழி = வட்டம், மோதிரம், சக்கரம்.

குல்—(குல)—குலவை—குரவை=வட்டமாக நின்றாடுங் கூத்து.

குள்—(குரு)—குருகு=வளையல்.

குள்—குண்டு—குண்டலம்=வட்டம், சுன்னம்.

குள்—குட—குடம்—(குடகம்)—கடகம் = வளையல், வளைந்த மதில், வட்டமான பெட்டி.

(குடுகு)—கிடுகு=வட்டமான கேடகம், வட்டமான அறை, கேடகம் போன்ற தென்னந்தட்டி.

கிடுகு—கிடுகம்—கேடகம்.

குண — குணகு — குணக்கு — குணுக்கு = கனத்த காது வளையம்.

குள்—கொள்—கோள்—கோடு—கோட்டம் = வட்டம், மாவட்டம். கோரம்=வட்டில்.

சுல்—சில்=சக்கரம்.

சுல்—சுன்—சுன்னம்=சுழி, வட்டம். சுன்—சுன்னை= சுழி.

சுள்—சுழி=வட்டம். சுழித்தல்=வட்டம் வரைதல்.

சுள்—சுட்டி=வட்டமான அணி, வட்டமான பொறி. சுட்டித்தலை=சுட்டியுள்ள தலை.

சுவள்—சவள்—(சகள்)—சகண்டை=வட்டமான பறை.

சகண்டை—சக்கடை=சக்கரம், சக்கரமுள்ள வண்டி, பறை.

சக்கடை—சகடு—சகடம்=வண்டி, வட்டில்.

சகடு—சகடி. சகடு—சாகாடு. சகடு—சாடு.

சக்கடை—சக்கடை—சக்கடா.

சுள்—(சள்)—சரு—சரி=வளையல் வகை.

சுள்—சுளை—சுளையம்—சொளையம்=சுன்னம்.

சுள்—(சுர்)—சூர்—சூர்ப்பு=கைக்கடகம்.

புள்—புரு—புரி—பரி—பரிதி=வட்டம், வட்டமான கதிரவன். பரிதி—பருதி.

பரி—பரிசை—வட்டமான கேடகம்.

பரி—பரிசு—பரிசல்=வட்டமான கூடைத்தோணி.

புள்—(பள்)—பண்டி=சக்கரம், சக்கரமுள்ள வண்டி.

பண்டி—பாண்டி—பாண்டில்=வட்டம், அகல், வட்டமான கிண்ணம், சாலர்.

முள்—முட்டு—முட்டை=சுழி, சுன்னம்.

முள்—(மள்)—(மண்)—மணி=வட்டமான வெண்கலம்.

முண்டு—மண்டு—மண்டி. மண்டியிடுதல்=காலை மடித்தல் அல்லது மடக்குதல்.

மண்டுதல்=வளைதல். மண்டு—மண்டலம்=வட்டம், வட்டகையான் நாட்டுப்பிரிவு, நாற்பான் நாள்வட்டம்.

மண்டலம்—மண்டலி. மண்டலித்தல்=வட்டமாதல், முழுமையாதல், நிரம்புதல்.

மண்டலம்—மண்டிலம்=வட்டம், வட்டமான கோள், (கதிரவன் திங்கள் முதலியன), வட்டமான கண்ணாடி.

மண்டில யாப்பு, மண்டலித்தல், நிலைமறி மண்டிலம், அடிமறி மண்டிலம் முதலியன தொன்றுதொட்டு வழங்கி வரும் தமிழ் யாப்பிலக்கணக் குறியீடுகள். அடிநிரம்பி வருதல் மண்டில யாப்பாகும். வட்டரவுக் கருத்து முழுமை அல்லது நிறைவுக் கருத்தைத் தழுவும்.

(மள்)—வள்—வள்ளம்=வட்டமான கலம்.

வள்—வள்ளி—வளையல்.

வள்—வளை. வளை—வளையம். வளை—வளையல், வளைவி.

வள்—வட்டு=வட்டமான கருப்புக்கட்டி, வட்டமான ஒடு.

வட்டு—வட்டி=வட்டமான பெட்டி.

வட்டி—வட்டில்=வட்டமான கலம்.

வட்டு—வட்டம்—வட்டகை, வட்டாரம்.

வட்டு—வட்டணம்=வட்டமான கேடகம். வட்டணம் —வட்டணி; வட்டணித்தல்=வட்டமாதல், வட்டமாக்குதல்.

வட்டு—வட்டணை=வட்டம், கேடகம், சாலர்.

வட்டு—வட்டரவு=வட்டவடிவு.

வள்—வண்டு=வளையல். வட்டமான பூச்சி.

வண்டு—வண்டி=சக்கரம், சக்கரத்தையுடைய ஊர்தி. வண்டி—வண்டில்.

வள்—வாள்—வார்—வார்ப்பு=வளையல்.

வாள்—வாளி=மூக்கிலும் காதிலும் அணியும் கம்பி வளையம்.

## 11. சூழ்தல்

சூழ்தலாவது ஒன்று இன்னொன்றைச் சுற்றி வளைதல்.

உள்—உடு. உடுத்தல்=சுற்றிக் கட்டுதல். உடு—உடுப்பு. உடு—உடை.

உடுத்தல்=சூழக்கொண்டிருத்தல்.

"நீராருங் கடலுடுத்த நிலமடந்தை" (மனோன்மணீயம்).

உல்—உலவு—உலாவு. உலாவுதல்=சூழ்தல்.

"தூஉலாய்க் கிடந்த" (சீவக. 550).

ஊர்=கதிரவன் திங்களைச் சூழும் வட்டக்கோடு.

"செங்கதிர் தங்குவதோ ரூருற்றது" (கம்ப. சரபங். 9)

ஊர்கோள்=நிலாவைச் சுற்றியிருக்குங் கோட்டை.

குள்—கொள்—கோள்—கோடு—கோட்டை=நகரைச் சூழ்ந்திருக்கும் மதில், நிலாவைச் சூழ்ந்திருக்கும் ஊர்கோள்.

சுல்—சுற்று—சுற்றம். சுற்றுதல்=சூழ்தல்.

சுள்—சூழ். சூழ்தல்=நாற்புறமும் வளைதல், அங்ஙனம் வளைதல்போல் ஒரு காரியம் பற்றிய எல்லாவற்றையும்

எண்ணுதல். சூழ் — சூழ்ச்சி — சூழ்ச்சம் = மந்திரம் (ஆலோசனை), நுண்ணறிவு, விரகு (உபாயம்).

சூழ்ச்சி — சூழ்ச்சியம் = மதி நுட்பமான அமைப்பு.

சூழ் — சூழல் = சுற்றுச்சார்பு, இடம்.

சுள் — (சூள்) — சூட்டு = சக்கரத்தின் சுற்றுச்சட்டம்.

சூறுதல் = சூழ்தல்.

''சூறிள விமையோர்'' (பாரத. காண்டவ. 31)

புள் — புரி — புரிசை = நகரைச் சுற்றியுள்ள மதில்.

புரி — பரி, பரித்தல் = சூழ்தல்.

''குருதி பரிப்ப'' (அகம். 31).

பரிவேடம் = ஊர்கோள்.

முள் — முறு — முற்று — முற்றுமை = மதிலைச்சூழ்தல்.

முள் — (மள்) — வள் — வளவு = வீட்டின் சுற்றுப்புறம்.

வள் — வளாகம் = சுற்றியுள்ள நிலப்பகுதி.

வள் — வளை — வளைசல் = வளவு.

வள் — வட்டை = சக்கரத்தின் சூட்டு.

வள் — வட்டு — வட்டம் = ஊர்கோள்.

முல் — (மல்) — வல் — வல, வலத்தல் = வளைதல், சூழ்தல்.

வல — வலை = சூழ்ந்து ஒன்றைப் பிடிக்கும் கயிற்றுக் கருவி.

வள் — வாள் — வார் — வாரி = நிலத்தைச் சூழ்ந்த கடல்.

வார் — வாரணம் = கடல். வார்தல் = வளைதல், சூழ்தல்.

வாரணம் — வாரணன் = கடல் தெய்வம்.

வாரணன் — வருணன்.

''வருணன் மேய பெருமண லுலகமும்'' (தொல். அகத். 5)

### iii. சுருள்தல்

சுருள்தலாவது, ஒரு நீண்ட துவள்பொருள் ஒரு வளையமாகவோ பல வளையமாகவோ அமைதல். அது போன்ற தோற்றமும் இயக்கமும் அதன்பாற்படும்.

குள் — குழல். குழலுதல் = சுருளுதல்.

"கடைகுழன்ற கருங்குழல்கள்" (சீவக. 164).

குள்—(குள்)—குருள் = சுருள்.

(குரு)—குறண்டு. குறண்டுதல் = சுருள்தல்.

குள்—கொள்—கோள்—கோடு = சங்கு. கோடுதல் = வளைதல், சுழிதல்.

சுள்—(சுரு)—சுருள் = சுருண்ட பொருள்.

சுருள்—சுருளி.

சுருள்—சுருளை—சுருணை.

சுருள்—சுருட்டு—சுருட்டை—சுருண்ட மயிர். சுருட்டு = சுருட்டப்பட்டது. சுருட்டு—சுருட்டி.

(சுரு)—சுரி. சுரிதல் = சுருள்தல்.

"சுரியிரும் பித்தை" (பொருந. 160).

சுரிதல் = சுழிதல்.

"வெள்ளைச் சுரிசங்கொடு" (திவ். திருவாய. 7,1,3).

சுரிமுகம் = சங்கு.

சுரி = உடம்புச் சுழி.

"சுரிநெற்றிக்காரி" (கலித். 101)

சுரி—சுரியல் = நீர்ச்சுழி. சுரி—சுரிந்து = நீர்ச்சுழி.

சுள்—சுழி = உடம்புச்சுழி, அதையுடையவன் செய்யுங் குறும்பு, நீர்ச்சுழி.

புள்—புரி. புரிதல் = சுருள்தல்.

"புரிக்குழன் மடந்தை" (சீவக. 2688)

புரிதல் = சுழிதல். புரி = சங்கு.

"புரியொருகை பற்றி" (திவ். இயற். 1, 31)

வலம்புரி = வலமாகச் சுழிந்த சங்கு. இடம்புரி = இடமாகச் சுழிந்த சங்கு.

முள் — முட — முடங்கு — முடங்கல் = ஓலைச்சுருள், திருமுகம்.

முடங்குதல்=வளைதல், சுருள்தல்.

முள்—வள்—வளை=சங்கு. வளைதல்=சுழிதல்.

வள்—வண்டு=சங்கு. வண்டு—வண்டல்=நீர்ச்சுழி.

வள்—வாள்—வார்—வாரணம்=சங்கு.

iv. சுற்றுதல்

சுற்றுதலாவது, ஒன்று இன்னொன்றைச் சுற்றிவருதல் அல்லது வட்டமிடுதல்.

உல்—அல்—ஆல். ஆலுதல்=சுற்றி ஆடுதல்.

ஆல் — ஆலா = வானத்தில் வட்டமிட்டுப் பறக்கும் பறவை.

ஆல்—ஆலை=கரும்பாலைபோல் சுற்றியாடும் இயந்திரம்.

ஆல்—ஆலத்தி=கண்ணெச்சில் கழித்தற்கு விளக்கையாவது, மஞ்சள் நீரையாவது ஒருவர் தலையைச் சுற்றியெடுத்தல்.

ஆலத்தி—ஆளத்தி=வலிவு மெலிவு சமன் என்னும் முந்நிலையிலும் சுற்றிப் பண்ணிசைத்தல்.

ஆல் — ஆலு — ஆடு. ஆடுதல் = சுற்றுதல். ஆடு — ஆட்டு—ஆட்டம்.

உல்—உல—உலவு, உலவுதல்=சுற்றி வருதல்.

உலவு—உலாவு. உல—உலா—உலாத்து.

உலா = வெற்றிவேந்தன் தலைநகரைச் சுற்றிவரும் பவனி, அதைப்பற்றிய நூல்.

உலவு—உரவு. உலாவு—உராவு.

உல—உலவை=உலவிவருங் காற்று.

குள் — கொள் — கொட்டு. கொட்டுதல் = சுற்றுதல், சுற்றிவருதல். கொள்—கொட்பு.

"காலுண வாகச் சுடரொடு கொட்கும்
முனிவரும்" (புறம். 43)

"கொடும் புலி கொட்கும் வழி" (சிறுபஞ். 80)

கொள்—கோள்=அண்டத்தைச் சுற்றிவரும் விண்மீன்.

சுள்—சுளை—சொளை—சொளையம். சொளையமாடுதல்=திருடும் நோக்கத்துடன் வீட்டைச் சுற்றி வருதல்.

சுல்—சுல—சுலவு—சுலாவு. சுலாவுதல்=சுற்றுதல்.

சுலாவு=சுற்றி வீசுங் காற்று.

சுல்—சுற்று,

சுள்—சூழ். சூழ்தல்=சுற்றுதல்.

"சூழ்கதிர் வான் விளக்கும்" (பு. வெ. 9, 16)

துள்—(திள்)—திரு—திரி. திரிதல்=சுற்றுதல்.

"சுடரொடு திரிதரும் முனிவரும்" (சிலப். 12)

முள்—வள்—வட்டு—வட்டம்=சுற்று, ஒரு கோள் வான மண்டலத்தை ஒருமுறை சுற்றிவருங் காலம். வியாழன் சுற்றிவருவது வியாழ வட்டம்.

வட்டு—வட்டணை—(1) வட்டமான செலவு,

"மாப்புண்டர வாசியின் வட்டணைமேல்"
(கம்ப. படைத். 97)

(2) இடசாரி வலசாரியாகச் சுற்றுகை,

"சுற்றிவரும் வட்டணையில்" (பெரிய பு. ஏனாதி. 29)

V. கட்டுதல்

ஒரு பொருளை நூலாலும் கயிற்றாலும் சுற்றிக் கட்டுவதால், சுற்றுதற் கருத்திற் கட்டுதற் கருத்துத் தோன்றிற்று.

சுற்றுதல்=ஆடையை அரையைச் சுற்றிக் கட்டுதல்.

புரி—பரி—வரி. வரிதல்=கட்டுதல். வரித்தல்=கட்டுதல். வரி=கட்டும் அரசிறை. உழவர் கண்டுமுதலில் ஆறிலொரு பகுதியை அளந்து சாக்கிற் கட்டியதனால், அரசிறை வரி எனப்பட்டது. அரிசி பிடித்தல் என்பது எங்ஙனம் அரிசியைச் சாக்கிற் பிடித்து வாங்குதலைக் குறிக்குமோ, அங்ஙனமே வரி கட்டுதலென்பதும் வரிப்

பகுதியைச் சாக்கிற் கட்டி வரித்தண்டலாளரிடம் ஒப்பு வித்தலைக் குறிக்கும்.

முள் — முடு — முடி — முடிச்சு = வளைத்துக் கட்டிய கட்டு, முடிச்சுப்போன்ற மரக்கணு.

முடி = வளைத்துக் கட்டிய கட்டு. முடிதல் = வளைத்துக் கட்டுதல்.

முடி — முடிப்பு = முடியப்பட்ட பொருள்.

vi. சுழலுதல்

சுழலுதலாவது, ஒரு பொருள் தன்னைத் தானே சுற்றுதல். சுழற்றுதல் அங்ஙனஞ் சுற்றுவித்தல்.

உல் — உலம் = சுழற்சி. உலம்வா — உலமா — உலமரல்.

உலமருதல் = சுழலுதல், மனம் சுழலுவதுபோல் வருந்துதல்.

உழலுதல் = சுழலுதல். உழல் — உழலை = உழலும் ஆலையுலக்கை அல்லது வாயிற் குறுக்குமரம்.

உழல் — உழற்று — உழற்றி = சுழற்சி,

உழல் — உழன்றி = மாட்டுக் கழுத்தில் கட்டும் உழலைத் தடி.

உல் — அல் — ஆல் — ஆலு — ஆடு. ஆடுதல் = சுழலுதல்.

குள் — குறு — (கறு) — கற — கறங்கு = காற்றாடி. கறங்குதல் = சுற்றுதல், சுழலுதல்.

குறு — கிறு — கிறுகிறு = கிறுகிறுப்பு = தலைச்சுற்று.

சுற்றும் பொருளை நோக்கிக் கிறுகிறுவென்று சுற்று கிறது என்பதையும், 'கிறுகிறு வாணம் கின்னறு வாணம்' என்று சொல்லிக்கொண்டு சிறுவர் சுற்றியாடி விளையாடு வதையும், தலை வலிக்கும்போது கிறுகிறு வென்று வரு கிறது என்று சொல்வதையும் நோக்குக.

கிறு — கிறுக்கு = தலைச்சுற்று, மூளைக்கோளாறு, பைத் தியம். ஒருவர் நீண்டநேரம் சுற்றியாடுவதால் தலைமயக்கம் உண்டாதல் காண்க.

கிறுகிறுத்தல் = தலை சுற்றுதல், மயக்கமாதல்.

"தலைசுழன்று கிறுகிறுத்து" (பிரபோத. 18, 54)

கிறு — கிறங்கு — கிறக்கம் = மயக்கம். கிறங்குதல் = மயங்குதல்.

குள் — கொள் — கொட்பு = சுழற்சி. கொள் — கோள் = கதிரவனைச் சுற்றும் விண்மீன்.

"வளிவலங் கொட்கு மாத்திரம்" (மணி. 12, 91)

சுள் — சுழல் — சுழற்சி — சுழல் — சுழற்று — சுழற்றி — சுழட்டி.

சுரித்தல் = சுழலுதல்.

"சுரிக்கு மண்டலந் தூங்குநீர்ச் சுரிப்புற வீங்க"
(கம்ப. இராவணன் தேரேறு. 30).

சுள் — சுறு — சூறை = சுழித்தடிக்குங் காற்று.

சூர்த்தல் = சுழலுதல். சூர்ப்பு = சுழற்சி.

துள் — (திள்) — திரி. திரிதல் = சுழலுதல். சூறைவளி = சூறாவளி.

"வலந்திரியாப் பொங்கி" (பு. வெ. 9, 12).

திரித்தல் = சுழற்றுதல்.

"எஃகு வலந்திரிப்ப" (திருமுரு. 111).

திரி — திரிகை = திரிகல்.

திவி — தெரு — தெரும் = சுழற்சி. தெரும்வா — தெருமா — தெருமரல்.

"அலமரல் தெருமரல் ஆயிரண்டும் சுழற்சி"
(தொல். உரி. 13).

புள் — (புய்) — புயல் (Cyclone).

முள் — வள் — வளி = வளைந்து வீசுங்காற்று.

வள் — வட்டு — வட்டணை = வாள்போல் படைக்கலத்தைச் சுழற்றுதல்.

vii. அலைதல்

ஒரு பொருள் சுற்றும்போதும் சுழலும்போதும் பல இடத்தைச் சார்தலால், சுற்றுதலையும் சுழலுதலையுங்

குறிக்குஞ் சொற்கள் சில, அங்குமிங்கும் அலைதலைக் குறிக்கும்.

உல்—அல்—அலை.

உழலுதல் = அலைதல்;

சுழலுதல் = அலைதல். சுற்றுதல் = அலைதல்;

திரிதல் = அலைதல்.

## (கூ) உருட்சித் துறை

உருட்சி என்பது கனவட்டம். பரப்பு மட்டும் உள்ளது வட்டம்; பரப்பும் கனமும் உள்ளது கனவட்டம்.

குண்டுருட்சி நீளுருட்சி என உருட்சி இருவகைப்படும்.

### i. உருள்தல்

உருள்தலாவது, உருட்சிப் பொருள்கள் புரண்டு புரண்டோடுதல்.

உல்—அல்—அலை. அலைதல் = உருள்தல், அலைத்தல் = உருட்டுதல்.

"தேறல் கல்லலைத் தொழுகும்" (புறம். 115).

அலை = உருளும் திரை.

உருள்—உருளி = உருளும் சக்கரம்.

உருள் — உருட்சி. உருள் — உருட்டு — உருட்டல்; உருட்டு—உருட்டி.

### ii. குண்டுருட்சி (உருண்டை)

பந்துபோன்றது குண்டுருட்சியாகும்.

உல்—உல—உலகு = உருண்டையான ஞாலம், அது போன்ற தோள்.

உலகு—உலகம்.

உருள்—உருண்டை—உண்டை.

குள்—குளிகை = உருண்ட மாத்திரை.

குளி—குளியம் = உருண்டை, மருந்து (மாத்திரை).

குளியம்—குழியம் = வாசனையுருண்டை.

குள்—குண்டு = உருண்டை.

குல் — கோல் — கோலி = உருண்டை, சிற்றுருண்டை.
குள் — கொள் — கோள் — கோளம் = உருண்டை.
கோள் — கோளா = உருண்டைக்கறி.
சுள் — சுழி — சுழியம் = உருண்டைப் பலகாரம்.
புள் — (பொண்டு) — போண்டா = உருண்டைப் பலகாரம்.
முள் — முழி — விழி = கண்ணின் கருவிழி, விழி.
மூக்கும் முழியும் என்பது உலக வழக்கு.
முள் — (முடம்) — முடல் — முடலை = உருண்டை.
வள் — வட்டு — வட்டணை = உருண்டை.
(வடம்) — வடகம் = தாளிக்கும் உருண்டை

111. உருண்ட திரட்சி

உருண்ட திரட்சியாவது குண்டாயிருந்தும் முழு வுருண்டையல்லாதது.

உல் — உலம் = உருண்ட திரட்சி, உருண்ட கல்.
குள் — குண்டு = உருண்டு திரண்டது.

குண்டுக்கல், குண்டுக் கோதுமை, குண்டுச் சம்பா, குண்டுமணி, குண்டு மல்லிகை, குண்டூசி முதலிய பெயர்கள், உருண்ட திரட்சிப் பொருள்களைக் குறிக்கும்.

குண்டு — குண்டா = உருண்டு திரண்ட கலம்.
குண்டு — கண்டு = நூற்பந்து.
குண்டு — குட்டு = முட்டை (தெ.).
குடம் = உருண்டு திரண்ட கட்டை அல்லது கலம்.
கும் — கும்பு — கும்பம் = உருண்டு திரண்ட கலம்.
கும்பச்சுரை = உருண்டு திரண்ட சுரை.
கும்பு — கும்பா = உருண்டு திரண்ட கலம்.
குள் — கொள் — கோள் — கோளம் — கோசம் = முட்டை.
குள் — கொள் — கொட்டை = உருண்டை தலையணை.
குல் — சூல் = முட்டை.

"குமலி தந்த மனவுச்சூ லுடும்பின்"
(பெரும்பாண். 132).

சுல் — சுன் — (சுனை) — சினை = முட்டை.
சுள் — (சொள்) — சோளம் = உருண்ட கூலம்.

முன்—முட்டை.

முன்—முட்டு—முத்து = உருண்ட கல் அல்லது விதை.

ஆமணக்கு முத்து, குருக்கு முத்து, புளிய முத்து, வேப்ப முத்து முதலிய வழக்குக்களைக் காண்க.

முள்—(மள்)—மண்—மணி = உருண்ட கூலம் அல்லது விதை, உருண்ட பாசி.

நென்மணி, குன்றிமணி முதலிய வழக்குக்களைக் காண்க.

iv. நீளுருட்சி

உருளை போன்றது நீளுருட்சியாம்.

உல்—உலம்—உலக்கை.

உருள்—உருளை—உருடை (—ரோதை).

குறிப்பு: முன்பு கூடலியல்-திரளல் துறையில் குறிக்கப்பெற்ற உலக்கை குண்டலம் முதலிய ஒருசில சொற்கள் திரட்சிக்கருத்தொடு உருட்சிக் கருத்தும் கொண்டவையென அறிக.

## (9) துளைத்தலியல்

ஒன்றை வலிதாய்த் தொட்டபொருள் கூர்நுனியுள்ளதாயிருப்பின், அது வளையாவிடத்து அதனால் முட்டப்பட்ட பொருளைத் துளைக்கும்.

வேர் மண்ணையும், ஊசி துணியையும், பூச்சி ஏட்டையும், ஆணி மரத்தையும், அம்பு உடம்பையும், கம்பி நிலத்தையும், பிற பிறவற்றையும் துளைக்கும்.

ஒரு பொருளை வினைமுதல் (கருத்தா) துளைப்பினும், வினைமுதலாற் கையாளப் பெறும் கருவி துளைப்பினும், சொல்லாக்க நெறிக்கு இரண்டும் ஒன்றே.

வலிதாய்த் தொடும் பொருள்களுள், கூர் நுனியுள்ளவை சற்று உள்ளிறங்கு மாதலால், அதனையே துளைத்தலின் துவக்க நிலையாகக் கொள்ளல்வேண்டும். கடினமான பொருளைத் துளைப்பனவெல்லாம் கூர்நுனி யுள்ளனவாகவே இருக்கும்.

## (க) குழித்தல் துறை

குழித்தலாவது பள்ளம் உண்டுபண்ணுதல்.

### 1. குத்தல்

குத்தல் என்பது ஒன்றன் உள் றங்குமாறு கூர்ப் பொருளாற் குத்துதல். குத்து—குத்தி—கத்தி.

தொடுதலியலிற் கூறிய குத்தல் குத்தித் தொடுதல் என்றும், இங்குக் கூறியது குத்தித் துளைத்தல் என்றும், வேறுபாடறிக.

(உர்) — அர் — அர — அரங்கு. அரங்குதல் = அம்பு முதலியன தைத்தல்.

குத்து—குத்தி=குத்துங் கருவி, கொழுவொடு சேர்ந்த கலப்பைப் பகுதி.

குத்து—கொத்து—கொட்டு. களைக்கொத்து களைக் கொட்டு முதலிய பெயர்களை நோக்குக.

(துள்)—(தள்) — (தய்) — தை. முள் தைத்தல் = முள் உள்ளிறங்குதல்.

புள் — பொள் — பொளி. பொளிதல் = உளியாற் கொத்துதல்.

பொள்—பொ. பொத்தல்=குத்தித் துளைத்தல்.

பொள்—பொது. பொதுத்தல்=முள் முதலியன பாய்தல்.

பொது—பொதிர். பொதிர்த்தல்=குத்துதல்.

### 11. கீறுதல்

கீறுதலாவது கூர்ங் கருவியாற் குத்தி நீள இழுத்தல்

குள்—கிள்—கீள். கீள்தல்=கிழித்தல், பிளத்தல்.

கிள்—கிழி. கீள்—கீழ். கீழ்தல்=கிழித்தல், பிளத்தல்.

குள்—குறு—கிறு—கிறுக்கு. கிறுக்குதல்=கீறிவரைதல், கோடு கிறுதல்.

கிறு—கீறு—கீறல்.

கீறு—கீற்று=கீறியவரை, கீறிய துண்டு, துண்டு, தட்டித் துண்டு.

கீற்று—கீச்சு. கீச்சுதல்=கோடு கிழித்தல்.

கிள்—(குறு)—கூறு=பகுதி, துண்டு.

புள்—பொள்—பொளி—பொளித்தல்=கிழித்தல்.

புள்—(புறு)—பூறு—பீறு. பீறுதல்=நகத்தாற் கீறுதல்.

iii. பொறித்தல்

பொறித்தலாவது, கடினமான பொருளிற் குழித் தெழுதுதல்.

குள்—குழி—. குழித்தல்=குழித்தெழுதுதல்.

புள் — பொள் — பொளி. பொளிதல் = வெட்டுதல், எழுத்து வெட்டுதல்.

பொளி—பொறி—பொறித்தல்=குழித் தெழுதுதல்.

புள்—பிள்—விள்—வெட்டு.

iv. கிண்டுதல்

கிண்டுதலாவது பொருள்களைக் கிளைத்தல் அல்லது குடைதல்.

உளர்தல் = தலைமயிரைக் கிண்டுதல், அரும்பைக் குடைதல்.

உழுதல் = கிண்டுதல், மயிரைக் கோதுதல்.

குடைதல்=கிண்டுதல். குடை—கடை.

"நெய்குடை தயிரின்" (பரிபா. 16, 3.)

கடை—கடலை=கடையப்படும் பயறு.

கடை—கடைச்சல்.

குள்—கொழு — கோழி = நிலத்தையும் குப்பையையும் கிளைக்கும் பறவை. கொழு=நிலத்தை உழும் காறு.

கொழு—கொழுது. கொழுதுதல்=மயிர் குடைதல்.

கொழுது—கோது.

குள்—கிள்—கிளர்—கிளறு — கிளாறு. கிளாறுதல் = கிண்டுதல்.

கிள்—கிளை. கிளைத்தல் = கிண்டுதல், கிண்டியது போற் பிரிதல்.

கிள்—கேள் — கேள்வி. கேட்டல் = கிண்டுதல்போல் வினவுதல், வினவியதற்கு ஒருவர் விடுக்கும் விடையைச் செவிமடுத்தல், செவிமடுத்தல்.

கிள்—கிண்டு — கெண்டு. கெண்டுதல் = கிளைத்தல். தோண்டுதல்.

கெண்டு—கெண்டி = நீருண்கலத்தின் கிளை போன்ற உறிஞ்சி, அது உள்ள கலம்.

கிள்—கெள்—கேள் — கேழல் = நிலத்தைக் கிண்டும் பன்றி, அதையொத்த யானை.

துல் = துன். துன்னுதல் = உழுதல், கிண்டுதல், துன்னூசி = கலப்பைக் குத்தி.

துள்—துழ — துழவு. துழ — துழா — துழாவு. துழாவுதல் = கிண்டுதல்.

துள்—தொள்—தொய். தொய்தல் = உழுதல்.

நுள்—நள்—நண்டு. நண்டுதல் = கிண்டுதல்.

நண்டற்சோறு = தைப்பொங்கலிற் கிண்டிச் சமைத்த சோறு.

நண்டல் = கிண்டிக் குழைந்த சோறு. நண்டல் கிண்டிப் படைக்கிறது என்பது உலக வழக்கு.

நண்டல் பிண்டல் = கூழுங் கட்டியுமாய் ஆக்கிய சோறு; சோற்றை நண்டல் பிண்டலாக்கி விட்டான் என்பது வழக்கு.

நண்டு = நிலத்தைக் கிண்டிச் செல்லும் நீருயிரி.

நண்டு—ஞெண்டு.

நுள்—நெள்—நெண்டு; நெண்டுதல் = கிண்டுதல்.

நெண்டு = நண்டு. நெண்டு — ஞெண்டு = நண்டு. ஞெண்டுதல் = கிண்டுதல்.

முள்—முண்டு. முண்டுதல் = பன்றி முகத்தாற் கிளைத்தல்.

V₃ அறுத்தல்

அறுத்தலாவது, வாளால் நீட்டுவாகில் பலமுறை துளைத்துக் கீறுதல் அல்லது துளைத்துத் துணித்தல்.

(உர்)—அர் — அரங்கு: அரங்குதல் = அம்புமுதலியன தைத்தல். (துளைத்து அறுத்தல்.)

அரங்கு — அரக்கு: அரக்குதல் = கிளைதறித்தல், வெட்டுதல்.

"தாருந் தோளுமரக்கி" (விநாயக: பு. 42, 4.)

அரங்கு = அறுக்கப்பட்ட அறை. வட்டாட்டிற்கும் சூதாட்டிற்கும் வகுத்த கட்டம், நடத்திற்கும் நாடகத்திற்கும் வகுத்த நிலம் அல்லது மேடை.

"அரங்கின்றி வாட்டாடி யற்றே நிரம்பிய
நூலின்றிக் கோட்டி கொளல்." (குறள். 401.)

அரங்கேற்றம் = மேடையேறிக் கல்வித்திறமும் கலைத் திறமும் காட்டல்.

ஒரு வீடு பல அறைகள் கொண்டிருப்பதை அரங் கரங்காயிருக்கிறது என்பது தென்னாட்டு வழக்கு.

அரங்கு—அரங்கம் = நாடகவரங்கு, சூதாடுமிடம், போர்க்களம், நீரால் அறுக்கப்பட்ட ஆற்றிடைக்குறை, காவிரிக்கும் கொள்ளிடத்திற்கும் இடைப்பட்ட ஆற்றிடைக் குறையைச் சேர்ந்த திருவரங்கம்.

அரங்கம் — அரங்கன் = திருவரங்கத்தில் பள்ளிகொண் டிருக்கும் திருமால்.

அரங்கம் திருவரங்கம் அரங்கன் என்பனவே தொன்று தொட்டு வழங்கிவரும் வடிவங்கள். ரங்கம் ஸ்ரீரங்கம் ரங்கன் என்பன இடைக்காலத்தில் முதற்குறையாகத் திரிந்த வட சொற்களாகும்.

அரங்கு அல்லது அரங்கம் என்னும் சொற்கு அறுக்கப் பட்டது என்பதே மூலப்பொருள்; அர்(உர்) என்பதே மூலம்; ரங்கம் என்னும் தலையற்ற சொற்கு மூலமுமில்லை; மூலப் பொருளுமில்லை.

அர்—அறு—அறுப்பு.

அறு—அறுவு—அறுவடை.

அறு—அறுவை—அறுக்கப்படும் துணி, துணி.

அறு—அறை=துண்டம், கட்டிடப்பகுதி, அறுக்கப்பட்ட அல்லது வகுக்கப்பட்ட இடம், அரங்கு, சூதாடும் கட்டம், பாத்தி.

அரங்கு அறை என்னும் இரு சொற்கட்கும் உரிய பொருள்கள் ஏறத்தாழ ஒன்றாயிருப்பதாலும், அவ் இரு சொற்கட்கும் அர் என்பதே மூலமாதலாலும், அறையென்னும் சொல் தனித்தமிழ்ச் சொல் என்பது வெள்ளிடைமலை யாதலாலும், அரங்கு அல்லது அரங்கம் என்னும் சொல்லும் தென் சொல்லேயென்று தெளிக.

vi. பிளத்தல்

பிளத்தலாவது ஒரு பொருளை ஒரே முறையில் வெட்டித் திறத்தல் அல்லது துணித்தல். தானாய்த் திறத்தலும் பிளத்தலே.

உடை—உடைப்பு, குள்—கள்—கண்—கணி—கணிச்சி= பிளக்குங் கோடரி.

குள்—கிள்—கிறு—கீறு—கீறல்.

துள்—துற—துறப்பு=திறத்தல்.

துற—துறவு=திறவு. துற—திற—திறவு.

திற—திறப்பு. துறப்புக் குச்சு=திறவுகோல்.

துற—துறவை=திறந்த வெளியிடம்.

மண்டை பிளத்தலை மண்டை திறத்தல் என்று கூறுவது வழக்கு.

திற—தெறி. தெறித்தல்=பிளத்தல், உடைதல்.

புள்—பொள்—பொளி. பொளிதல்=வெட்டுதல், பிளத்தல்.

பொள்—போழ், போழ்தல்=பிளத்தல். போழ்=துண்டு.

புள்—பிள்—பிடு. பிடுதல்=கையாற் பிளத்தல்.

பிள்—பிளவு=துண்டு.

பிடு—பிது—பிதிர். பிதிர்தல்=பிண்டு உதிர்தல்.

பிள்—விள்—விடு. விடுதல்=பிளத்தல். விள்ளுதல்= பிளத்தல்.

### vii. வெடித்தல்

வெடிக்கும் பொருள் ஒன்றைப் பிளந்துகொண்டு வெளிவருவதால், பிளத்தற்கருத்தில் வெடித்தற் கருத்துத் தோன்றிற்று.

புள் — பிள் — பிடு — பிடுங்கு — பிடாங்கு = பிடுங்கும் வேட்டு.

பிடாங்கு—பீரங்கி.

அடைத்திருந்தது திடுமெனத் தானே திறந்துவிட்டால், பிடுங்கிவிட்டதென்பர். பிடாங்கு வேட்டைப் பீரங்கி என்பது தஞ்சை வழக்கு.

பிள்—விள்—விடு—வெடு—வெடி;

விள்—(வெள்)—வெட்டு—வேட்டு.

### viii. விரிதல்

பிளந்த பொருள் விரியும்.

நொள்—நொகு—நொக்கு = வெடிப்பு.

கும்—கம்—கமர் = வெடிப்பு.

புள்—பிள்—விள்.

விள்ளுதல் = பிளத்தல், விரிதல்.

விள்—விள—விளவு. விளவுதல் = கமராதல்.

விள்—விரி—விரிவு. விரிதல் = பிளத்தல், வெடித்தல். பித்தச் சூட்டினாற் பாதத்தில் வெடிக்கும் வெடிப்பைப் பித்த விரிவு என்று கூறுதல் காண்க.

விரி—விரல் = கையினின்று விரிந்தது.

விள்—விரு—விருவு = நிலச்சிறு வெடிப்பு;

விள்—விடு—விடர் = மலை வெடிப்பு, குகை.

விடுதல் = பிளத்தல், விரிதல். விடு—விடவு = விடர்.

விள்—(விய்)—வியம்—வியன்—வியல் = விரிவு, அகற்சி, பரப்பு.

வியல் — (வியலன்) — வியாழன் = கதிரவனைச் சுற்றும் கோள்களெல்லாவற்றிலும் பெரியது.

"வியல்என் கிளவி அகலப் பொருட்டே"
(தொல். உரியியல், 66.)

விள்—வெள்—வெடி—வெடிப்பு. வெடித்தல்=பிளத்தல்.

ix. வாய் விரிதல்

பிள்—பிளா—பிழா=வாயகன்ற ஓலைக்கொட்டான்.

பிழா—பிடா=வாயகன்ற நார்ப்பெட்டி.

பிடா—பிடகு—பிடகம்=தட்டு, பெட்டி.

பிள்—(பெள்)—பெட்டி=ஓலை நார் மரம் முதலியவற்றால் செய்யப்பட்ட வாயகன்ற ஏனம்.

பெட்டி—பெட்டகம்.

(பெள்)—பேள்—பேழ்=பிளவு, விரிவு, அகற்சி. பேழ்வாய்=அகன்ற வாய்.

பேழ்—பேழை=வாயகன்ற செப்பு அல்லது மரக்கலம்.

X. பிரிதல்

பிளந்த பொருள் வேறாகப் பிரியும்.

புல்—பில்(வில்)—விலகு—விலக்கு—விலக்கம்.

விலகு—விலங்கு. விலங்குதல்—விலகுதல்.

புள்—புய். புய்த்தல்=பிரித்தல், பிடுங்குதல், புய்—பிய்.

பிய்—(பெய்)—பெயர். பெயர்தல்=பிரிதல், விலகுதல். பெயர்—பேர்.

புள்—பிள்—பிரி—பிரிவு—பிரிவினை.

பிள்—பிடு—பிடுங்கு. பிடுங்குதல்=பெயர்த்தல், பறித்தல்.

பிடு—(பிது)—பிதுங்கு—பிதுக்கு—பிதுக்கம்.

பிதுங்குதல்=பெயர்தல், பெயர்ந்து வெளிவருதல்.

(பிது)—பிதிர். பிதிர்தல்=பெயர்தல், பிதுங்குதல்.

பிள்—விள். விள்ளுதல்=விலகுதல்.

விள்—விடு—வீடு=விடுதல், நீங்குதல், செலவு விட்டிருக்கும் இடம் (இல்லம்), பற்றுவிடுகை, பேரின்ப நிலையம்.

விடு—விடுதி; விடு—விடுதலை;

விடுதல் = பிரிதல், நீங்குதல்; விட்டிசைத்தல் = பிரிந்தொலித்தல்;

xi. விடுத்தல்

விடுத்தலாவது சிக்கலான பொருளை விடுவித்தல்;

புள் — பிள் — பிய் — (பியி) — பிசி = பிய்ப்பதுபோல் விடுக்கும் விடுகதை.

பிள்—பிடு—பிது—பிதிர் = விடுகதை. பிதிர் — புதிர்.

பிள்—விள். விள்ளுதல் = பிதிர் விடுத்தல். விள்—விடு விடுத்தல் = பிட்டுச் சொல்லுதல், விடுவித்தல். விடு—விடை = பிதிர்போன்ற அறியா வினாவை விடுவித்தல்போற் கூறும் மறுமொழி.

xii. சேய் பிரிதல்

பிள் — பிற — பிறப்பு. பிற — பிறவி. பிற — பிறந்தை = பிறவி, இனம் (genus.)

தாயும் பிள்ளையும் வேறுவேறு பிரிந்துவிடவேண்டும் என்று பேறுகாலத்திற் பெண்டிராற் கூறப்படுதல் காண்க; தாய் வயிற்றினின்று சேய் பிரிதலே பிறத்தலாம்.

xiii. மலம் பிரிதல்

(புல்) — (பில்) — பேல்.

புள் — புழுக்கை — பிழுக்கை.

(புள்) — பிள் — (பிய்) — பீ.

பிள் — பீள் — பீளை — பூளை = கண் மலம்.

பிள் — (விள்) — விட்டு — விட்டை.

xiv. நீர்ப்பொருள் பிரிதல்

(புல்) — பில் — பிலிற்று. பிலிற்றுதல் = சிந்துதல், பீச்சுதல்.

பில் — பீல் — பீர் = ஒரு பீச்சு.

பீல் — பீற்று — பீச்சு. ஒ—நோ: கீற்று — கீச்சு.

பிள்—பிழி—பிழியல்;
பிள்—பிய்—பெய்—பெயல்;

XV. பகுதல்

பொருள்கள் பல பகுதிகளாய்ப் பிரிதலே பகுதலாம்;
புள்—(பள்)-(பழு)—பகு; ஒ. நோ; தொழு—தொகு;
பகுதல்=பிரிதல்; பக்கிசைத்தல்=பிரிந்தொலித்தல்;

பகு—பகுதி=பிரிவு, கூறு, கண்டுமுதலில் ஆறிலொரு கூறான அரசிறை, பகுசொல்லுறுப்பாறனுள் ஒன்றான முதனிலை;

பகுதி விகுதி என்னும் தென்சொற்களின் பொருளும், ப்ரக்ருதி விக்ருதி என்னும் வட சொற்களின் பொருளும், வெவ்வேறாம். பகுதி = கூறு. விகுதி = ஈறு: விகுதல் = முடிதல். ப்ரக்ருதி=இயற்கை (முன் செய்யப்பட்டது), இயல்பு. விக்ருதி=விகாரம். பகுதியும் திரிபை (விகாரத்தை) அடையக் கூடுமாதலாலும், சந்திசாரியை இடைநிலை என்பவும் திரிபை யுண்டுபண்ணுதலாலும், விகுதியென்னும் உறுப்பிற்குத் திரிபு என்னும் பொருள் பொருந்தாது. பகுதி விகுதிகள் முறையே முதனிலை இறுதிநிலையென்று பெயர் பெறுதலாலும், அவற்றிற்குக் கூறு ஈறு என்பனவே சொற்பொருள் என்பது துணியப்படும். களத்தில் முதலாவது அரசனுக்குச் செலுத்தப்படும் பகுதி சிறப்பாகப் பகுதி என்றே பெயர் பெற்றதுபோல், பகுசொல்லுறுப்புக்களுள் முதன்மையானதும் பகுதியென்றே பெயர்பெற்றதென்க. ஆகவே, பகுதி விகுதி யென்பன ப்ரக்ருதி விக்ருதி என்பவற்றின் திரிபல்லவென்று தெளிந்து கொள்க. பகுதி விகுதியென்னும் தென்சொற்களினின்றே ப்ரக்ருதி விக்ருதி என்னும் வட சொற்களைத் திரித்துக்கொண்டு, அவற்றிற்குப் பொருந்தப் புளுகலாக வேறு பொருள் கூறுகின்றனர் வடவர் என்க.

பகு—பகம்=பகுதி, ஆறு என்னும் தொகை.

வேளாளன்விளைவு, அரசன் தென்புலத்தார் தெய்வம் விருந்து ஒக்கல் தான் என்னும் அறுவர்க்குப் பகிர்ந்தளிக்கப் பட்டதனாலும், பகுசொல் பகுதி விகுதி சந்தி சாரியை இடைநிலை வேறுபாடு (விகாரம்) என்னும் ஆறுறுப்புக் களாய்ப் பகுக்கப்பட்டதனாலுமே, பகம் என்னும் சொற்கு ஆறு என்னும் தொகைப்பொருள் தோன்றிற்று;

பகு — பகம் — பகவன் = பகுத்தளித்துக் காப்பவன், பலர்க்கும் படியளப்பவன், ஆண்டவன்.

வேளாளன் அறு சாரார்க்கும், அரசன் அரசியல் வினைஞர்க்கும், ஆண்டை அடிமையர்க்கும், படியளப்பது போல; ஆண்டவனும் பலர்க்கும் உணவைப் பகுத்தளித்துக் காப்பவன் என்னும் கருத்தில், அவனைப் பகவன் என்றனர். இன்றும் ஆண்டவனைப் படியளக்கிறவன் என்று பொதுமக்கள் கூறுதல் காண்க. Lord என்னும் ஆங்கிலச் சொல்லும் இதே கருத்துப் பற்றி யெழுந்திருப்பது கவனிக்கத்தக்கது.

E. Lord, O. E. hlaford (loafward)=bread. keeper.

இனி, அவரவர்க்குரிய நன்மை தீமைகளை வகுப்பவன் என்றுமாம்.

"பால்வரை தெய்வம்" (சொல். 58)

என்று தொல்காப்பியர் கூறியதை நோக்குக.

இனி, பகு—பகவு—பகவன் என்றுமாம். எங்ஙனமாயினும் பொருள் ஒன்றே.

பகு—பகுப்பு. பகு—பகல்—பால். பகு—பகை.

பகு—பக்கு—பங்கு. பக்கு—பக்கம்—பக்கல்.

பகு—பகிர்—பகிர்வு. பகு—பகர். பகர்தல் = பொருள்களைப் பகுத்து விலை கூறுதல்.

பகு—பாகு = பகுதி, பக்கம், பக்கமாயிருந்து பேணுபவன் (பாகன்).

பாகு—பாகன். பாகு—பாகம். பாகு—பாகை.

பாகு—பாக்கு = பகுதி, கூறு. பாக்கு—பாக்கியம் = கூறு, நற்கூறு, பேறு.

"அலரெழ ஆருயிர் நிற்கும் அதனைப்
பலரறியார் பாக்கியத் தால்". (குறள், 1141)

"பால்வாய்க்குழவி" என்னும் சிலப்பதிகாரத் தொடருக்கு (15 : 23), "மேற்பெறக்கடவ நல்ல பகுதியைத் தன்னிடத்தே யுடைய குழவி" என்று அடியார்க்கு நல்லார் கூறுதல் காண்க.

பாக்கு என்னும் சொல்லை bhag என எடுத்தொலிப் பதனாலேயே அது வடசொற்போல் தோன்றுகின்றது. இயம் என்பது ஓர் ஈறு. ஒ. நோ. கண்—கண்ணியம், பண்—பண்ணியம்.

பாக்கு—பாக்கம்=பக்கம், பக்கமான இடம், பட்டினப் பகுதி. பாக்கம்—வாக்கம்.

பாக்கு—பாங்கு—பாங்கர். பாங்கு—பாங்கன்

பகு—பா—பாத்தி. பா—பாது. பாதிடு—பாதீடு.

பகு—வகு—வகுதி. வகு—வகுப்பு.

வகு—வகை. வகு—வகுந்து=வகை, வகுத்த வழி. வழிவகுத்தல், வழிவகை என்பன மரபு.

வகு—வக்கு=வகை, வழி.

வகு—வகிர்—வகிடு=வகிர்ந்த உச்சி, உச்சிக்கோடு.

வகு—வாகு—வாக்கு=பக்கம், திசை.

இடக்கை வாக்கு, காற்றுவாக்கு முதலிய வழக்குக்களைக் காண்க.

பகு என்னும் சொல் தென்சொல் என்பதற்குக் காரணங்கள் :—

(1) வடமொழியில் பகு என்னுஞ் சொற்கு மூலமாகக் காட்டப்படும் bhaj என்பதற்கு ஆணிவேரேனும் வரலாறேனும் இல்லை.

அதோடு, bhaj (to divide) என்னும் மூலத்தினின்று வேறுபட்டதாக bhanj (to break) என்றொரு மூலம் காட்டப் படுகின்றது. உண்மையில் இரண்டும் ஒன்றே. தமிழ்ப் பகுதியின் திரிந்த வடிவுகளே வடமொழியில் மூலமாகக் காட்டப்பெறுகின்றன. பகுதிக்கும், முந்தியது மூலம் அல்லது வேர்.

(2) Bhaj என்னும் மூலத்தின் திரிவுகளாக, bhakti, bhaga, bhagavan, bhaga, bhagya முதலிய சில சொற்களே வடமொழியிற் காட்டப்பெறுகின்றன. தமிழிலோ நாற்பதிற்கு மேற்பட்ட சொற்கள் பகு என்னும் பகுதியினின்று திரிந்துள்ளன.

(3) பகுதி பக்கம் பாகம் முதலிய பல சொற்களும் பகு என்னும் ஒரே பகுதியினின்று திரிந்திருக்கவும், அவற்றின் திரிபுகளான ப்ரக்ருதி பக்ஷம் bhaga முதலிய வடசொற்கள் வெவ்வேறெழுத்துக்களைக் கொண்டனவாய் வெவ்வேறு மூலத்தனவாகக் காட்டப்படுகின்றன.

XVi. தோண்டுதல்

தோண்டுதலாவது ஒரு பொருளின் பரப்பு பள்ளமாகக் குடையப்படல். உள் — அள் — (அழு) — அகு — அகழ் — அகழி.

குல் — கல். கல்லுதல் = தோண்டுதல். கல் — கலம் = தோண்டப்பட்ட ஏனம். கல் — கன். கன்னுதல் = தோண்டுதல். கன் — கன்னம் = தோண்டுதல். துளைத்தல், துளை, துளையான காது. கன்னக்கோல் = தோண்டுங் கருவி.

கன் — கனி = தோண்டப்பட்ட சுரங்கம்.

குல் — கில். கில் — கீள் = கீழ். கீழ்தல் = தோண்டுதல்.

குள் — குழை — குடை. குடைதல் = தோண்டுதல்.

குள் — (குய்) — குயில். குயிலுதல் = தோண்டுதல். குயில் — குயிலுவம் = மரத்தைக் குடைந்து செய்யப்பட்ட இசைக் கருவி.

சுல் — சூல். சூலுதல் = தோண்டுதல்.

துள் — (தூள்) — தூணி = தோண்டப்பட்ட கலம், ஓரளவு.

துள் — துரு — தூரி — தூரியம் = குடைந்து செய்யப்பட்ட இசைக்கருவி.

துள் — தொள் — தொடு. தொடுதல் = தோண்டுதல்.

தொள் — தோள்.

"கேட்பினுங் கேளாத் தகையவே கேள்வியால்
தோட்கப் படாத செவி." (குறள், 418)

தோள் — தோண்டு. தோண்டு — தோண்டி.

தோள் — தோண் — தோணி = தோண்டப்பட்ட மரக் கலம்.

நுள் — நொள் — நோள் — நோண்டு. நோண்டுதல் = தோண்டுதல்.

புள் — பொள் — பொய். பொய்தல் = துளைத்தல், தோண்டுதல்.

### xvii. தேடுதல்

நிலத்திற்குள்ளிருக்குங் கிழங்கையும், எறும்புகள் சேர்த்து வைத்திருக்கும் அடிப்புல்லையும், பொன்னையும், புதையலையும், மக்கள் தோண்டியெடுப்பதனால், தோண்டற் கருத்தில் தோண்டுதற்கருத்துத் தோன்றிற்று. கிண்டுதலும் தோண்டுதலின்பாற்படும்.

துள்—துழ—துழவு—துழாவு. துழாவுதல்=தேடுதல்.

துள்—துர—துரப்பு; துரப்புதல்=துளைத்தல், தேடுதல்.

துர—திர—திரக்கு. திரக்குதல்=தேடுதல்.

துள்—தொள்—தோள்—தோண்டு—தேண்டு— தேடு—தேட்டு—தேட்டம்.

நுள்—நொள்—நோள்—நோண்டு—நேண்டு—நேடு. நேடுதல்=தேடுதல்.

நோண்டு—நோடு. நோடுதல் = தேடுதல், ஆய்தல், ஆராய்தல், பார்த்தல்.

நோடு—நோட்டம்=ஆய்வு, ஆராய்ச்சி.

நோடு—நாடு, நாடுதல்=தேடுதல், விரும்புதல், ஆய்தல்.

நாடு—நாட்டம்=தேட்டம், விருப்பம், தேடும் பார்வை, பார்வை, கண்.

"நாட்ட மிரண்டும் மதியுடம் படுத்தற்குக்
கூட்டி யுரைக்குங் குறிப்புரை யாகும்." (தொல். 1042)

### xviii. பள்ளமுங் குழியும்

தோண்டிய இடம் பள்ளமுங் குழியுமாகும். அவை இயற்கையும் செயற்கையும் என இருதிறப்படும். பள்ளத்தினும் ஆழ்ந்தது குழி.

குள்—குழி—குழிவு. குள்—குண்டு. குண்டுங் குழியும் என்பது வழக்கு. குழி—குழிசி=குழிந்த பானை.

குள்—குட்டு—குட்டம்=பள்ளம், ஆழம்.

குள்—(கள்)=(கய்)—கயம்=பள்ளம்.

குள்—கிள்—கீள்—கீழ்=பள்ளம். கீழ்—(கிழங்கு)—கிடங்கு.

சுழித்தல் = கண் குழிதல்.

நுள் — நொள் — நொள்ளல் = கட்குழிவு. நொள் — நொள்ளை.

நொள் — நெள் — ஞெள் — ஞெள்ளல் = பள்ளம்.

நொள் — நொடி = பள்ளம்.

புள் — பள் — பள்ளம். பள் — பள்ளன் = பள்ளமான மருத நிலத்தில் வாழ்பவன், உழவன்.

பள் — (பய்) — பயம் — பயம்பு = பள்ளம்.

பள் — பண் — பண்ணை = பள்ளம், குழி, நெற்குத்தும் பள்ளம், வயல்.

பள் — படு — படுகர் = பள்ளம், பள்ளமான வயல், மருத நிலம்.

புள் — பொள் — பொய் = குழி.

முள் — மள் — மடு = பள்ளம்.

மள் — மள்ளன் = பள்ளமான மருதநிலத்தில் வாழ்பவன், உழவன்.

பள்ளன் என்பது உலக வழக்கும் மள்ளன் என்பது செய்யுள் வழக்குமாகும்.

"மள்ள ருழுபக டுரப்புவார்" (கம்பரா. நாட். 18).

## xix. நீர்நிலை

பள்ளமான இடத்தில் நீர் தங்குவதனால், பள்ளத்தைக் குறிக்குஞ் சொற்கள் சில, நீர்நிலையைக் குறித்தன. நீர் நிலையைக் குறிக்குஞ் சொற்கள் சில, நீரையுங் குறிக்கும்.

குள் — குளம்.

குள் — குண்டு = சிறு குட்டை.

குள் — குட்டு — குட்டை = சிறு குளம்.

குள் — (கள்) — (கய்) — கயம் = குளம்.

துள் — தொள் — தொழுவை = மடு.

தொள் — தோள் — தோய் — தோயம் = நீர், கடல்.

புள் — பொள் — பொய் — பொய்கை = குளம்.

புள் — பள் — பாழி = சிறு குளம்.

பள்—படு = நீர் நிலை.

படு—படுகை = நீர்நிலை, ஆற்றோரத்து நிலம்.

படுகை—படுகர் = நீர் நிலை.

பள்(பல்)—பயம் = நீர். பயம்—பயம்பு = நீர், நீர்நிலை.

பள்—பண் = நீர் நிலை. பண்—பாணி = நீர்.

முள்—மள்—மடு = நீர்க்கிடங்கு.

XX. தோண்டப்பட்ட நீர்நிலை

குள்—கிள்—கிணறு. கிள்—கெள்—கேள்—கேணி.

துள்—துர—துரவு = கிணறு.

xxi. கீழ்மை

பள்ளம் நிலமட்டத்திற்குக் கீழாயிருப்பதால், பள்ளத்தைக் குறிக்கும் சொற்களினின்றும் சொல்லடிகளினின்றும் கீழ்மையைக் குறிக்கும் சொற்கள் தோன்றியுள்ளன. கீழ்மை நிலம் (இடம்) பற்றியதும் நிலையைப் பற்றியதும் என இருவகைப்படும். நிலம் பற்றியதும், நிலத்திற்கு உட்பட்டதும் மேற்பட்டதும் என இருதிறப்படும்.

குள்—கிள்—கீழ்—கீழ்மை.

கீழ்—கிழக்கு = கீழ், கீழிடம், இழிவு.

"காணிற் கிழக்காந் தலை" (குறள். 488).

"கிளைஇய குரலே கிழக்குவீழ்ந் தனவே" (குறுந். 337).

"கிழக்கிடு பொருளோ டைந்து மாகும்" (தொல். 1226).

குள்—(கள்)—(கய்)—கயம்—கயமை = கீழ்மை.

கீழ் என்பது முதலாவது ஒன்றன் உட்பகுதியையே குறித்தது. நிலத்திற்குள்ளிருப்பது நிலத்தின் மேலுள்ள மக்கட்கு அடிப்புறத்திலிருப்பதால், கீழ் என்னுஞ் சொல் பின்பு நிலத்திற்கு மேலுள்ள வெளியிடத்திலும் அடித்திசையைக் குறிப்பதாயிற்று.

xxii. தாழ்தல்

தாழ்வு என்பது கீழ்நிலை.

உள் — (இள்) — (இழு) — இரு. இருதல் = தாழ்தல். தாழ்ந்து விழுதல்.

இருத்தல் = தாழ்த்தல்.

"மாரியி னிருதரு வில்லுமிழ் கடுங்கணை" (மலைபடு. 226).

"கணங்கொ டோகையிற் கதுப்பிருத் தசைஇ" (மலைபடு. 44).

குள்—குண்—குணம் = தாழ்ந்த கீழ்த்திசை. குணம்—குணக்கு = கிழக்கு.

குள்—கிள்—கீழ் = கிழக்கு. கீழ்—கீழ்க்கு—கிழக்கு.

துள் — (தள்) — தழு — தாழ் — தாழ்வு. தாழ்—தாழ்மை.

தாழ் — தாழ்ப்பு = தாழ்த்தல், காலந் தாழ்த்தல். தாழ்—தாழம்.

தழு—தகு — தக்கு = தாழ்வு. தாழ்குரல் தொண்டையைத் தக்குத் தொண்டை என்று கூறுதல் காண்க.

தக்கு — தக்கணம் = தாழ்ந்த தென் திசை.

தெற்கிலிருந்த குமரி மலையும் நிலமும் முழுகி, வடக்கில் கடலிருந்த இடத்தில் பனிமலை யெழுந்ததால், தென்திசை தாழ்ந்து வடதிசை உயர்ந்தது. இதனால், தென்திசை தக்கணம் என்றும் வடதிசை உத்தரம் என்றும் கூறப்பட்டன. தக்கணம் தாழ்வு; உத்தரம் உயர்வு. தமிழகப் பரப்பின்படி, நிலமட்டத்தில் தாழ்ந்ததும் உயர்ந்ததுமான கீழ்த்திசை மேற்றிசைகளும், முறையே, கீழ்மேல் அல்லது கிழக்கு மேற்கு என்றும், குணம் குடம் அல்லது குணக்கு குடக்கு என்றும் கூறப்படுதல் காண்க.

தன்—தண—தண. தணத்தல் = தாழ்த்தல், காலந் தாழ்த்தல்.

தள்—தண்—தணி—தணிவு. தணி—தணிச்சல்.

புள் — பள் — பள்ளை = கீழ்மட்டமான (குட்டையான) ஆடு.

பள்—படு—படை = கீழ்மட்டம்.

படை—பாடை = கீழ்மட்டமான (தாழ்வான) கட்டில்.

படு—பாடு—பாடி = தாழ்வான கூரையுள்ள குடியிருப்பு அல்லது பாசறை.

பள் — பண் — பாணி. பாணித்தல் = தாழ்த்தல்.

xxiii. தட்பம்

குளிர்ச்சி சூட்டைத் தணிப்பதால் தணித்தற் கருத்தில் குளிர்ச்சிக் கருத்துப் பிறந்தது. வெப்பநாட்டில் சூடுதணிவு மிக முதன்மையாகக் கருதப்படும்.

துள் — தள் — தண் — தணம். தண் — தண்மை.

தண் — தட்பு — தட்பம்.

தண் — தடு = தடுமம் = குளிர்ச்சி, நீர்க்கோவை.

xxiv. கீழாதல்

கீழாதலாவது அடித்திசை யடைதல், விழுதலும், படுத்தலும், நிலத்திற் கிடத்தலும், கீழாதலாம்.

உள் — (இள்) — இரு. இருத்தல் = கீழமர்தல், அமர்தல். (இள்) — இடு. இடுதல் = கீழிடுதல், கொடுத்தல். இடு — இடம்.

உல் — (இல்) — (ஈல்) — ஈன் — ஈனுதல் = கீழிடுதல், பெறுதல்.

''மணற்கீன்ற வெண்முத்தம்''

ஈன் — ஈ. ஈதல் = இடுதல்.

குள் — (கிள்) — கிட — கிடக்கை. கிடத்தல் = நிலத்திலிருத்தல், படுத்திருத்தல்.

புள் — பள் — பள்ளி — படுக்கை, படுக்கையறை, படுக்கும் வீடு, வீடு, கோயில், இடம், வீடுகள் சேர்ந்த ஊர்.

பள்ளி கொள்ளுதல் = படுத்தல். பள்ளியெழுச்சி = படுக்கை விட்டெழுந்திருத்தல். மக்கள் பெரும்பாலும் வீட்டிற்கு வெளியே வேலை செய்தலாலும், இரவிற் படுத்தற்கே வீட்டைத் தேடுதலாலும், படுக்கையைக் குறிக்கும் பள்ளியென்னும் சொல், வீட்டையும் பேரின்ப வீடாகிய கோயிலையும், அடியார் பள்ளிகொள்ளும் மடத்தையும், வீடுகள் சேர்ந்த ஊரையும், குறித்த தென்றறிக.

பள் — படு. படுத்தல் = கீழாதல், விழுதல், கிடத்தல், தூங்குதல். படுதல் = விழுதல், போர்க்களத்தில் விழுந்திறத்தல், இறத்தல்.

படு — படுக்கை.

படு—படி. படிதல்=விழுதல்.

"நின்றான் இருந்தான் கிடந்தான்தன் கேளவச்
சென்றான் எனப்படுத லால்"

என்னும் நாலடிச் செய்யுளால், இருத்தல் என்பது கீழமர் தலைக் குறித்தல் பெறப்படும்.

## XXV. இறங்குதல்

இறங்குதலாவது, மேற்றிசைப் பொருள் கீழ்த்திசை யடைதல். அவ் இறக்கம் உள்ளிடத்ததும் வெளியிடத்ததும் என இருதிறப்படும். முன் காலில் தைப்பது உள்ளிறக்கமும், பறவை விண்ணிலிருந்து மண்ணிற்கு வருவது வெளியிறக்கமும் ஆகும்.

உள்—இள்—இளி—இழி—இழிவு. இழிதல்=இறங்குதல்.

இள்—(இற)—இறங்கு—இறக்கு—இறக்கம்.

கும்—குமுங்கு. குமுங்குதல்=இறங்குதல்.

புள்—புழு—புகு. புகுதல்=இறங்குதல்.

இளி, இழி, இற, இறங்கு முதலிய சொற்கள் உகர முதலவாய் மூலவடிவிலிருப்பின் வேறு பொருள்படுமாதலின், அம்மயக்கத்தை நீக்குதற்கே இகர முதலவாயின வென்றறிக. சொல்லாக்க நெறிமுறைகளுள் முதன்மையானவற்றுள் இம் மயக்கொழிப்பும் ஒன்றாகும்.

## XXvi. பழித்தல்

பழித்தலாவது, மதிப்பில் இறக்குதல். ஒருவரைப் பழித்தல், மேலிருந்து கீழும் மேட்டிலிருந்து பள்ளத்திற்கும் இறக்குதல் போன்றதாம்.

உள்—(இள)—இழு—இகு—இகழ்—இகழ்ச்சி.

இள்—இளி—இழி—இழிப்பு. இளி—இளிவு.

துள்—(தள்)—தழு—தாழ்—தாழ்ச்சி.

புள்—பள்—பழி—பழிப்பு.

பழி—(வழி)—(வயி)—(வய்)—வை.

வய்—வயவு—வசவு. வய்—வயை—வசை.

**xxvii. பதிதல்**

ஒன்று இன்னொன்றிற் படிதலே பதிதலாம்.

படிதல் = விழுதல், பதிதல், உறுத்துதல் = பதித்தல்.

படி—பதி—பதிவு. பதி—பதிப்பு.

பதிதல் = படிதல், தங்குதல், குடியிருத்தல்.

ஓரிடத்தில் தங்கியிருத்தலைப் பதிவாயிருத்தல் என்று கூறுதல் காண்க.

பதி = பதிவாயிருக்கும் இடம், வீடு, ஊர், நகர்.

பதி—வதி—வசி—வாசம். (வ).

வதிதல் = தங்குதல், குடியிருத்தல்.

பதி—பாதம் = நிலத்திற் பதியும் உறுப்பு அல்லது பாகம். 'பதியும் பாதம்' 'பதி பாத மூலம்' 'பதி பாதமூலப் பற்றுடையான்' என்று இறைவன் திருவடி குறித்து வரும் கல்வெட்டுத் தொடர்களை நோக்குக.

பாதம்—பாதை = பாதம் பட்டு உண்டாகும் வழி.

**xxviii. பணிதல்**

பணிதலாவது ஒருவருக்குக் கீழ்ப்படுதல் அல்லது கீழ்ப்படிதல்.

பள்—பண்—பணி—பணிவு = பணிவிடை. பணி = தொண்டு. பணித்தல் = கீழ்ப்படிவித்தல், பணி செய்வித்தல், கட்டளையிடுதல்.

பள்—படு—படி; படிதல் = பணிதல். கீழ் + படி = கீழ்ப்படி.

**xxix. புழை**

புழை யென்பது பக்கவாட்டிலும் ஒரு பொருளிலுமுள்ள ஆழ்ந்த பள்ளம்.

குள்—குழை—குடை = புடை, கவிகை. விலாப் புடையை விலாக்குடை என்று கூறுதல் காண்க.

விரித்த கவிகை புடையுள்ளதா யிருப்பதால், கவிகை குடை யென்னப்பட்டது. குடை—கூடை = குடையுள்ள ஓலை நார்ப்பெட்டி.

குழை — குகை — குவை.

புல் — (பில்) = பிலம் = நிலக் குகை.

புள் — புழை — புடை — புடங்கு.

புள் — புழை — புடை — புடங்கு.

புள் — பிள் — விள் — விடு — விடர் = குகை.

முள் — முழை = குகை. முழை — முழைஞ்சு. முழை — முகை = குகை.

## XXX. பழைமை

பழைமை காலத்தின் கீழ்நிலையைப் போன்றிருத்தலால், கீழ்மையை அல்லது பள்ளத்தைக் குறிக்கும் சொற்கள் சில பழைமையைக் குறித்தற் கேற்றவாயின.

கீழ் = முற்காலம்.

"கீழ்ச் செய்த தவத்தாற் கிழியீடு நேர்பட்டு"
(திருவாசகம், 5, 46.)

கீழ்க்கடை = கடந்துபோன நாட்கள்.

கீழ் — கிழ = கிழமை. கிழ — கிழவு.

தொல் — தொல்லை = பழமை. தொல் — தொன்மை. தொல் — தொன்று = பழைமை.

தொல் — தோல் = பழைமை, பழம்பொருள்பற்றிய நூல், பழைமையான புகழ்.

தொன் — தொண்டு = பழைமை.

புள் — பள் — பண்டு — பழைமை.

பள் — பழ — பழமை — பழைமை. பழையன் = முதியன்.

## XXXI. பழகுதல்

ஒருவரொடு அல்லது ஒரு தொழிலில் பலநாட் பழகுவதால், புதுமை நீங்கிப் பழைமை ஏற்படுகின்றது. இங்ஙனம் பழைமையாதலே பழகுதல். ஒரு பொருளைப் பலநாட் கையாளுதலும் பழகுதலே.

பள் — (பய்) — பயில் — பயிற்சி.

பழ — பழகு — பழக்கு — பழக்கம்.

பழகு—பழங்கு. பழங்குதல்=ஒரு புதுப்பொருளைப் பலநாட் பயன்படுத்திப் பழைமை யாக்குதல், பயன்படுத்தல்.

பழங்கு—புழங்கு—புழக்கம்=ஒரு பொருளைப் பலகாற் பயன்படுத்தல், ஓரிடத்திற் பழகுதல், நடமாட்டம். பணப்புழக்கம் மக்கட்புழக்கம், என்பன வழக்கு.

## xxxii. வழங்குதல்

வழங்குதலாவது நீளப் பழகுதல் அல்லது பயன்படுத்தல்.

பழ—வழ — வழமை = வழக்கம். வழ — வழப்பு — வழப்பம்=வழக்கம்.

(வழ — வாடு = வழக்கம்). தொழுவாடு = தொழில் வழக்கம் அல்லது குல வழக்கம், வழக்கம்.

வாடு—வாடுக்கை—வாடிக்கை=வழக்கம்.

வழ—வழங்கு—வழக்கு—வழக்கம்.

வழங்குதல்=பழகுதல், தொடர்தல், நடமாடுதல், பயன்படுத்தல், பயன்படுதல்.

வழக்கு—வழக்காறு.

## xxxiii. வாழ்தல்

ஓரிடத்து நீடித்துப் பழகுதலே வாழ்தல்.

வழ—வாழ்—வாழ்க்கை. வாழ்—வாழ்ச்சி. வாழ் — வாழ்வு.

வாழ் — (வாழகை) — வாடகை = குடிக்கூலி, அதை யொத்த பிறகூலி.

அகை என்பது ஓர் ஈறு.

வாழ்—வாழ்த்து—வழுத்து. வழுத்துதல் = துதித்தல். கடவுள் வழுத்தைக் கடவுள் வாழ்த்து என்று கூறுதல் காண்க. வழுத்து—பழிச்சு.

### (உ) துளைத்தல் துறை

துளைத்தலாவது ஒரு பொருளைத் துருவுமாறு குடைதல்.

i. துளைத்தல்

உள் — உளு = துளைக்கும் புழு. உளுத்தல் = புழு மரத்தைத் துளைத்தல். உளு—உசு.

குள்—குழை—குடை. குடைதல் = துளைத்தல்.

துள்—துளை. துள் — துர — துரத்தல் = துளைத்தல், குடைதல். துள் — தொள் — தொள்கு, தொள்கல் = துளைத்தல்.

புள் — புழு = துளைக்கும் பூச்சி. புழுத்தல் = புழு மரத்தைத் துளைத்தல்.

புள் — பொள்—பொளி. பொள்ளுதல் = துளைத்தல்; பொளிதல் = துளைத்தல். பொளித்தல் = துளைத்தல். பொள் —பொய். பொய்தல் = துளைக்கப்படுதல்.

பொள்—பொது. பொதுத்தல் = துளைத்தல்.

ii. துளை

உல்—(இல்)—இல்லி.
(உள்)—அள்—அளை = வளை.
உள்—ஒள்—(ஒட்டை)—ஒட்டை.
குள்—குழை = துளை. குழை—குடை—குடைவு.
குள்—கூள்— கூண்டு—கூடு.
சுள்—சுர—சுரங்கம் = குடைபாதை, குடைவு, கனி;
சுர — சுரை = துளை.
சுள் — சுரு—சுருங்கை = குடைபாதை.

துல்—துன் = வளை. துன்—தும்—தும்பு — தூம்பு — தூம்பா.

துள் — துளை. துள் — துர — துரப்பு = குடைபாதை. துரப்பு—துரப்பணம் = துளைக்கும் கருவி.

துள் —தொள்—தொள்ளை—தொளை.
தொள்—(தொண்டு)—தொண்டி.

நுள்— நுழை—நூழை = துளை, வாயில், பலகணி, சுருங்கை.

நுள் — நூழ்—நூழில் = துளை.

புல்—(புல்லம்)—பொல்லம் = ஓட்டை, துளை.

புல்—புரை; புல்—புற்று;

புள்—புழு—புழல். புள் — புழை — பூழை = துளை, கணவாய்.

புழல்—போல்;

புள்—பொள் — பொள்ளல் = துளை. பொள்ளை = துளை.

## iii. துளையுள்ள பொருட்கள்

துளை ஊடுருவியதும் உருவாததும் என இருவகைப்படும்.

குழல்—குடல்;

குழை—குழாய்.

குடு—குடுவை. குடு—குடுக்கை. குடு—குடல்—குடலி, குடலை.

குள்—கூள்—கூண்டு—கூடு.

சுரை = உட்டுளையுள்ள காய்.

உட்டுளை முற்றிய சுரையின் குடுக்கையிலுள்ளது.

தும்பு—தும்பி = உட்டுளையுள்ள உறிஞ்சியைக் கொண்ட ஈவகை, உட்டுளையுள்ள கையையுடைய யானை. தும்பு—தூம்பு = நீர்க்குழாய். தூம்பு—தூம்பா.

தும்பு—தொம்பை = குந்தாணி, பறை;

நுல்—(நல்)—நல்லி = மூளையெலும்பு.

நுள்—நூழில் = துளையுள்ள செக்கு;

நூழிலாட்டு = மிகுந்த எள்ளைச் செக்கிலாட்டுவது போல் ஏராளமான பேரைக் கொல்லுதல், அதைக் கூறும் புறத்துறை.

நுள்—(நூள்)—நாள்—நாளம் = உட்டுளையுள்ள தண்டு, அரத்தக் குழாய், அதுபோன்ற நரம்பு.

நாள்—நாளி = உட்டுளையுள்ள மூங்கில், மூங்கிற்படி;

நாளி — நாழி — படி. நாழி — நாழிகை = நாழிகை வட்டில், நாழிகை நேரம், அறை.

உண்ணாழிகை = கருப்பக் கிருகம்.

நாளி—நாடி = அரத்தக் குழாய், அதுபோன்ற நரம்பு.

நாடி—நாடா = நரம்பு போல் நீண்ட பட்டி.

நாளம்—(நளம்)—நரம்—நரம்பு.

நரம்—நார் = நரம்புபோன்ற மரஇழை.

நாள்—நாண்—நாணல் = உட்டுளையுள்ள தட்டை.

புல் = உட்டுளையுள்ள பயிர்வகை.

"புறக்கா ழனவே புல்லென மொழிப"

(தொல். மரபியல், 86)

புள்—(புழு)—புழல்—புழலை—புடலை.

புள்—புட்டி—புட்டில்.

புள்—பொள்—பொய்—(பய்)—பை.

முள்—முட்டி.

## IV. பதர் (உள்ளீடற்றது)

துளையுள்ளது உள்ளீடற்றதாம். ஒரு செய்தியின் உண்மை அதற்கு உள்ளீடுபோன்றிருப்பதால், பொய்யானது உள்ளீடற்றதாகக் கருதப்படும்.

குள்—கூள்—கூண்டு—கூடு = பதர்.

சுள்—சொள்—சொண்டு = பதர்மிளகாய். சொள்—சொட்டை—சொத்தை—சூத்தை = பதரான காய்கனி.

பொள்—பொழு—(பொகு)—பொக்கு = பதர், பொய்.

பொக்கு—பொக்கை = பல்லில்லா வாய்.

பொள்—பொய் = பதர், மெய்யல்லாதது.

## V. குற்றம்

துளையுள்ள சில பொருட்கள் குற்றமுள்ளனவாகக் கருதப்படுவதால், துளைப்பெயர் குற்றத்தைக் குறிக்கும்.

உள்—ஒள்—(ஒட்டை)—ஓட்டை = குற்றம்.

சுள்—(சொள்)—சொட்டு—சொட்டை = குற்றம்.

நுள்—(நொள்)—நொட்டை = குற்றம்.

புள்—(புர)—புரை = குற்றம்.

vi. உள்ளிடம்

உள் ← உள்ளம் ← உளம்

உள்—அள்—(அழு)—(அகு) — அகம் — அகம்பு = உள், மனம்.

அகம் = உள், உள்ளிடம், மனம், வீடு, உள்நாடாகிய மருதம், அகப்பொருள்.

"ஆலைக்கரும்பி னகநாடணைந்தான்" (சீவக. 1613.)

"ஆடுகளங் கடுக்கு மகநாட்டையே" (புறம். 28.)

அகம்—அகரம் = மருதநிலத்தூர்.

உள் → உடு — ஊடு.

அகு — அகண் — அகணி; அகண் — அகடு = உள், நடு, வயிறு.

நுள்—நள்—நடு—நடுவு—நடுவண்—நாப்பண்.

vii. உள்ளறிதல்

உள் — உளவு.

துள் → துர — துரவு. துள்—(துட்பு)—துப்பு.

துப்புத்துரவு என்பது வழக்கு.

viii. ஒழுகுதல்

உள்ளிருந்து அல்லது துளையினின்று விழுதலே ஒழுகுதல்.

உள்—ஒள் → ஒழுகு ← ஒழுக்கு — ஒழுக்கம்.

உள்—உறு—ஊறு.

குள் → குறு—குற. குறத்தல் = வார்த்தல்.

குற → கற—கறவை.

சுள்—(சுர்)—சுர. சுரத்தல் = ஒழுகுதல்.

சுர—சுரை = சுரக்கும் பால்மடி.

சுள் → (சுன்) → சுனை = சுரக்கும் நீர்நிலை.

முள் → மோள். மோளுதல் = சிறுநீர் விடுதல்.

மோள்—மோட்டிரம்—மோத்திரம்—மூத்திரம்.

வடமொழியில் மோள் என்னும் பகுதி அல்லது வினை இல்லை; மூத்திரம் என்னும் வினைப்பெயரே உள்ளது. வினைப்பகுதியினின்று வினைப்பெயர் அமையுமேயன்றி, வினைப்பெயரினின்று வினைப்பகுதி அமையாது.

## (ஈ) தளர்தல் துறை

ஒருபொருள் துளை விழுவதால் கட்டுவிட்டுத் தளர்ச்சியடைகின்றது.

### i. தொளதொளத்தல்

தொளதொளத்தலாவது ஒன்று இன்னொன்றுள் இறுகப் பொருந்தாதவாறு துளையிருத்தல்.

துள் — (தள்) — தளர் — தளர்ச்சி. தளர்தல் = தொளதொளத்தல்.

தள் — தள — தளத்தி = தளர்ச்சி.

துள் — தொள் — தொள — தொளத்தி = தளர்ச்சி.

தொள — தொளதொள — தொளதொளப்பு = தளர்ச்சி.

தொள் — தொய். தொய்தல் = தளர்தல்.

### ii. குழைதல்

துளைவிழுந்த பொருள்போல் கட்டுவிடுதல் குழைதல்.

பொருட் குழைவும் மனக்குழைவும் எனக் குழைவு இருவகை.

உள் — உளை = குழைந்த சேற்று நிலம், சேறு.

உள் — ஊழ் — ஊழல் = தளர்ச்சி, தளர்ந்தசதை.

உள் — அள் — அள்ளல் = சேறு.

அள் — அளறு = சேறு, ஆழ்ந்த சேறு போன்ற நரகம்.

அள் — அள்ளி = வெண்ணெய்.

அள் — அளி = சேறு. அளிதல் = குழைதல், குளுகுளுத்தல், அறக்கனிதல்.

உள் — இள் = இழுது = நெய்.

கும் — குமை — குமைதல் = குழைதல், குழைய வேகுதல்.

குள் — குளு — குளுகுளு. குள் — குழை — குழைவு.

குள் — கூழ் = குழைந்த உணவு, உணவு.

குள் — கொள் — கொள — கொளகொள — கொளகொளப்பு.

சுள் — சொள் — சொளு. சொளுத்தல் = சேறாதல், சோறு குழைதல்.

சுள் — சள் — சள்ளல் = சேறு.

சள் — சழு — சழுங்கு — சழுக்கம் = நெகிழ்ச்சி.

துள் — தள — தளர் — தளர்ச்சி.

துள் — தொள் — தொள்கு = சேறு. தொள்ளுதல் = நெகிழ்தல்.

தொள் — தொள்ளம் = சேறு. தொள் — தொள்ளி = சேறு. தொள்ளி — தொளி = சேறு.

தொள் — தொய். தொய்தல் = தளர்தல். தொய் — தொய்யல் = சேறு. தொய் — தொய்யில் = குழம்பு.

நுள் — நொள் — நொள — நொளநொள. நொளநொளத்தல் = நெகிழ்தல்.

நொள் — நொளு — நொளுநொளு. நொளுநொளுத்தல் = நெகிழ்தல், குழைதல்.

நொள் — நொளில் = சேறு.

நொள் — நெள் — நெளு — நெளுநெளு. நெளுநெளுத்தல் = நெகிழ்தல், குழைதல்.

நெள் — நெய். நெளு — நெகு — நெகிழ்.

புள் — பொள் — பொளபொள. பொளபொளத்தல் = நெகிழ்தல், ஒழுகுதல்.

முள் — (மொள்) — மொழு — மொழுமொழு. மொழு மொழுத்தல் = சதை தளர்தல்.

மொழு — மொழுகு — மெழுகு = நெகிழ்ந்த நெய்ப் பொருள்.

### iii. மென்மையாதல்

குழைந்த பொருள் மென்மையாகும்.

உள் — (இள்) — இள. இளத்தல் = மென்மையாதல்.

இள — இளந்தாரி, இள — இளமை — இளைமை.

முல் — மெல் — மென்மை.

மெல்லுதல் = பல்லாற் கடித்தரைத்து மென்மை யாக்குதல்.

மெல் — மெலி — மெலிவு. மெலிதல் = மென்மையாதல்.

மெல் — மெல்ல = மெதுவாக.

மெல் — மெள் — மெள்ள = மெதுவாக. மெள் — மெள்ளம்.

மெல் — மெலு — மெது — மெதுவு — மெதுகு.

மெது — மெத்து = மெத்தை = மெல்லணை. மெத்தெனல் = மென்மையா யிருத்தல்.

## iv. இளகுதல்

இளகுதலாவது மனமும் பொருளும் மிகக் குழைதல்.

உர் — உரு — உருகு — உருக்கு — உருக்கம்.

உர் — அர் — அர — அரங்கு. அரங்குதல் = உருகுதல்.

உள் — அள் — அளி = அன்பு, அருள், கொடை.

அளித்தல் = அருளுதல், கொடுத்தல்.

அள் — அருள்.

உள் — (இள்) — இள — இளகு — இளக்கு — இளக்கம்.

இள — இளக்கரி — இளக்காரம்.

இள — இர — இரங்கு — இரக்கம்.

குள் கள் — கரை. கரைதல் = இளகுதல், நீராதல்.

சுள் — சள்ளு சள்ளுதல் = இளகுதல்.

நுள் — நெள் — (நெளு) நெகு. நெகுதல் = இளகுதல்.

## v. சோர்தல்

குழைந்த பொருள் சோரும். பொருட் சோர்வும் மனச்சோர்வும் எனச் சோர்வு இருவகை.

சுள் — சொள் = வடியும் வாய்நீர். சொள் — சோள் — சோர்.

சொள் — சொளு — சொளுசொளு. சொளுத்தல் = குழைந்துவடிதல்.

சுள் — சள் — சழ — சழங்கு. சழங்குதல் = சோர்தல்.

சழங்கு — சழக்கு — தளர்ச்சி.

சள் — சளை. சளைத்தல் = தளர்தல், சோர்தல்.

சள்—(சாள்)—சாளை = வடியும் வாய்நீர்.

துள்—தள்—தளர்—தளர்ச்சி.

துள்—தொள்—தொய். தொய்தல் = தளர்தல்.

புள்—பொள்—பொள. பொளபொளத்தல் = வடிதல், ஒழுகுதல்.

## vi. குலைதல்

கட்டுவிட்ட பொருள் குலையும்.

உல்—உலை. உலைதல் = சோறு கெடுதல்.

உள்—உளறு—உழறு. உழறுதல் = நாத்தளர்தல்.

உள்—(உளு)—உகு. உகுதல் = கெடுதல். உக்கல் = பதனழிதல்.

உகு—உகம் = அழிவு, கேடு, ஊழி.

உள்—ஊள்—ஊளை = கெட்ட நெய்.

ஊள்—ஊழ். ஊழ்த்தல் = பதனழிதல், கெடுதல்.

ஊழ்—ஊழல் = கேடுபாடு, கெட்டது.

ஊழ்—ஊழி = கேடு, அழிவு ஓரழிவிற்கும் இன்னோரழிவிற்கும் இடைப்பட்ட காலம்.

ஊழ்—ஊசு. ஊசுதல் = உணவு கெடுதல்.

ஊழ் முட்டை—ஊமுட்டை = கெட்ட முட்டை.

குல்—குலை. குலைதல் = கெடுதல்.

குள்—குளறு—குழறு. குழறுதல் = நாத்தளர்தல்.

துல்—தொல்—தொலை. தொலைதல் = தளர்தல், கெடுதல்.

துள்—தள்—தளர்.

நுள்—நொள்—நொள—நொச. நொசநொசத்தல் = சோறு கெடுதல்.

நொள்—நொ. நொந்துபோதல் = உணவு கெடுதல்.

## vii. நொய்யதாதல்

குலைந்த பொருள் நொய்யதாகும். நொய்ம்மை என்பது வலியின்மை, கனமின்மை, சிறுமை முதலியவற்றைத் தழுவும்.

உல்- (இல்)—இலவு = நொய்ய பஞ்சு. இலவு—இலவம். இலவு — இலகு.

இல்—இலை = நொய்ய இலை வகை.
உள்—எள்—எண்மை. எள்—எளி—எளிமை.
எள்—ஏள்—ஏட்டை = எளிமை.
ஏள் — ஏழ்—ஏழமை. ஏழ்—ஏழை.
உள்—இள் —இளை—இளைப்பு = எளிமை.
இள்—இள—இளப்பு — இளப்பம்.
சுள் — சுளு— சுளுவு.

நுள் — நொள் — நொய்—நொய்ப்பு — நொய்ப்பம் = இலேசு, எளிமை, சிறுமை.

நொய்யவன் = சிறியவன்.

## viii உடல் தளர்தல்

உல்—ஒல்—ஒல்கு. ஒல்குதல் = தளர்தல்.
ஒல்கு—ஒற்கு—ஒற்கம்.
உள் —ஒள்—(ஒள்)—ஓய். ஓய்தல் = கைகால் தளர்தல்.
உள் — எள்—எய் — எய்ப்பு = தளர்ந்த முதுமை.
உள்—இள்—இள. இளத்தல் = உடல் மென்மையாதல்.
இள் — இளை—இளைப்பு = எய்ப்பு.
குது — குதல்—குதலை = தளர்ச்சி.
சுள்—சொள்—சோர்.
துள்—தொள்—தொள்ளாடு—தள்ளாடு.
துள்—தள்—தளர்.
தொள்—தொய். தொய்தல் = சோர்தல்.
நுள்—நொள்—நொள்கு. நொள்குதல் = இளைத்தல்.

## ix. நோதல்

உடலும் உள்ளமும் தளர்தலால் நோவுண்டாம்.
உள்—உளை. உளைதல் = நோதல். உளை—உளைச்சல்.
உள்—இள்—இர—இரங்கு—இரங்கல் = வருந்துதல்.
கும் — குமை. குமைதல் = சோர்தல், வருந்துதல்.
துல்—தொல்—தொலை. தொலைதல் = வருந்துதல்.

நுள்—நொள்—நொய்—நொய்வு = மனவருத்தம்.
நொய்—நொ = வருந்து (ஏவலொருமை).
நொ—நொவ்வு = நோவு. நொவ்வுதல் = வருந்துதல்.
நொ—நொந்தலை = வலியின்மை (பலவீனம்).
நொள்—நொள்ளா—நொள்ளாப்பு = வருத்தம்.
நொள்—நோள்—நோளை = பிணியுண்ட நிலை.
நோள்—நோய்—நோ—நோவு.

x. மெலிதல்

உள்—இள்—இளை. இளைத்தல் = மெலிதல்.
சுள்—சுள்ளல் = மெலிவு. சுள்ளலன் = மெலிந்தவன்.

சுள்—சொள்—(சோள்)—சோணங்கி = மெலிந்தவன்—ள்—து.

நுள்—நொள்—நோள்—நோய்—நோய்ந்தான்—நோய்ஞ்சான் = மெலிந்தவன். நோய்தல் = மெலிதல்.

முல்—மெல்—மெலி—மெலிவு.

xi. துன்பம்

உடலும் உள்ளமும் நோகக்கூடிய நிலை துன்பம்.
கும்—குமை = துன்பம், அழிவு.

துல்—துன்—துன்பு. துல்—தொல்—தொல்லை = துன்பம்.

துள்—(துய்)—துயர்—துயரம்.
துள்—தொள்—தொய்—தொய்யல் = துன்பம்.
தொய்—தொ—தொந்தரவு, தொந்தரை = துன்பம்.
தொந்தரித்தல் = துன்புறுத்துதல்.

நுள்—நொள்—நொய்—நொ—நொம்பு—நொம்பலம் = துன்பம்.

xii. நிலைதளர்தல் (வறுமையடைதல்)

உல்—ஒல்—ஒல்கு—ஒற்கு—ஒற்கம் = வறுமை.
ஒல்குதல் = வறுமையடைதல்.
உள்—எள்—எண்மை. எள்—எளி—எளிமை = வறுமை.
எள்—ஏள்—ஏட்டை = வறுமை.

ஏள்—ஏழ்—ஏழமை. ஏழ்=ஏழை.
சுள்—சொள்—(சோள்)—சோர்—சோர்வு=வறுமை.

நுள்—நொள்—நொடி. நொடித்தல்=தளர்தல், கெடுதல்.

நொய்—நொ—நொந்தகை=வறுமை. நொ—நொந்தலை=வறுமை.

முல்—மெல்—மெலி. மெலிதல்=வறுமையடைதல்.

### xiii. தோற்றல்

மென்மையால் அல்லது தளர்ச்சியால் தோல்வியுண்டாம்.

துல்—தொல்—தொலை. தொலைதல்=தளர்தல், தோற்றல்.

தொலை—தொலைவு=தோல்வி. தொல்—தோல்—தோல்வி.

முல்—மெல்—மெலி—மெலிவு=தோல்வி.

"மெலிவென்பது முணர்ந்தேன்"

(கம்ப. முதற்போ. 181).

மெல்—வெல். வெல்லுதல்=மெலித்தல், தோற்கடித்தல்.

வெல்—வென்=வெற்றி. வெல்—வேல்=வெற்றி.

வெல்—வெற்றி.

மெது—மெத்து. மெத்துதல்=மெலித்தல், வெல்லுதல்.

## (சு) நீளம் துறை

நெகிழும் பொருள்கள் நீளுதலால், நெகிழ்ச்சிக் கருத்தில் நீட்சிக் கருத்துத் தோன்றிற்று. செங்குத்து படுக்கை என்னும் இருவகை வாகிலும் நீட்சி நிகழும்.

### i. நீளுதல்

நெகிழ்—நீள்—நீளம். நீள்—நீட்சி.

நீள்—நீர்=நெகிழும் (நீளும்) பொருள்.

நீர்—நீல்=நீலம்=கடல்நீரின் நிறம்.

நீள்—நீட்டு=நீட்டப்படும் ஓலை.

நீட்டு—நீட்டம்;

நீள் — நீடு.

நீள்—நெள்—நெடு—நெட்டு – நெட்டை;

நெடு—நெடில், நெட்டு—நெட்டம்.

நெட்டு=நெடுமை, நெடுந்தூரம். நெட்டம்=நெடுமை, செங்குத்து.

நீட்சி என்பது செங்குத்து வாகிலும் கொள்ளப்படுதல்,

"உருவத்தால் நீண்ட உயர்மர மெல்லாம்
பருவத்தா லன்றிப் பழா"

என்னும் ஔவையார் கூற்றால் அறியப்படும்.

நெட்டு — நட்டு — நட்டம் ;

நட்டமாய் நிற்கிறான் என்னும் வழக்கைக் காண்க.

**ii. நிற்றல்**

நிற்றலாவது ஒரு பொருள் செங்குத்தாக நீண்டிருத்தல்.

நீள்→(நிள்)—நில்.

நில் — நிலை—நிலையம்.

நிலை—நிலைப்பு=நிலைவரம்.

நில்—நிலவு. நிலவுதல்=நிலைத்தல்.

நில்—நிலு—நிலுவை.

**iii. நிறுத்தல்**

நிற்பித்தலும் துலையை எடுத்து எடை யறிதலும் செங்குத்தாக ஊன்றுதலும், நிறுத்தல்.

நில்—நிற்பு—நிற்பாட்டு. நில்—நிலு—நிலுத்து. நிலு—நிறு—நிறுத்து—நிறுத்தம்.

நிறு—நிறை. நிறு—நிறுவை.

நிறு — நிறுவு—நிறுவனம் (ஸ்தாபனம்)

நெடு — நடு. நெடு—நெட்டு—நட்டு—நாட்டு.

## (ரு) புகுதல் துறை

புகுதலாவது துளைக்குட் செல்லுதல்; கூர்மையான அல்லது கடினமான பொருள் ஒன்றற்குள் புதிதாய்த் துளைத்துச் செல்லுதலும் புகுதலே.

i. உட்புகுதல்

உள் — ஒள் — (ஒள்) ÷ ஒட்டு — ஒட்டுதல் = ஒன்றைத் துளைக்குட் புகுத்துதல்.

துள்—துரு — தூர். தூர்தல் = புகுதல்.

புகுதலைத் தூர்தல் என்பது வடார்க்காட்டு வழக்கு.

தூர் — தூரி = மீன் புகும் பொறி.

நுள் — நுழு — நுழுந்து ÷ நொழுந்து. நொழுந்துதல் = தலையை உள் நுழைத்தல்.

நுழு ÷ நுழை.

புள் — புழு ÷ புகு — புகுதி = மனைவாயில், வழி, வருவாய். புகு—புகுது.

புகுதி—புகுடி = வாயில்.

புகு ÷ புகுர். புகுர்தல் = புகுதல். புகுர்—பூர். பூர்தல் = புகுதல்.

புகு—போ — போகு — போக்கு. போ — போது.

முள்—(முழு) — முழை.

ii. உட்கொள்ளுதல்

உட்கொள்ளுதலாவது வாய்க்குட் புகுத்துதல் அல்லது உண்ணுதல்.

உள்—உண்—உண — உணா—உணவு.

உண் — ஊண்—ஊட்டு ÷ ஊட்டம்.

ஊட்டு—ஊட்டி = ஊட்டப்படும் பன்றி.

உள் ÷ உறி — உறிஞ்சு (ஒலிக்குறிப்போடு கூடியது) உறிஞ்சுதல் = நீரை உள்ளிழுத்தல்.

குள்—கொள் ÷ கொண்டி = உணவு.

சும்பு — சூம்பு — சூப்பு (ஒலிக்குறிப்போடு கூடியது) சூப்புதல் = சாரத்தை அல்லது சத்தை உள்ளிழுத்தல்.

துல் ÷ துன் — துற்று = உணவு. துற்றுதல் = உண்ணுதல்.

துற்று — துற்றி = உணவு.

துன் ÷ தின் — தீன் — தீனி.

தின் — தின்றி—திற்றி = உணவு.

தீன்—தீற்று. தீற்றுதல் = ஊட்டுதல்.

துள் — துய். துய்த்தல் = உண்ணுதல், நுகர்தல்.

தும் — து. துத்தல் = உண்ணுதல். து = உணவு.

து—துப்பு = உணவு.

நுள் — நுழு — (நுகு) — நுகர். நுகர்தல் = உண்ணுதல் துய்த்தல் (அனுபவித்தல்).

நுள்—நொள்—நொண்டு—நொண்டல் = நுகர்கை.

புள் — புழு — புகு—புகா = சோறு. புகா — புகவு = உணவு.

புள்—புசி—பொசி. பொசித்தல் = உண்ணுதல்.

முள் — முடு — மடு. மடுத்தல் = வாயிலிடல், உண்ணுதல்.

மடு— மடை = உணவு, சோறு.

முள்—(முசி)—மொசி. மொசித்தல் = தின்னுதல்.

### iii. மொள்ளுதல்

மொள்ளுதலாவது கலத்தை நீருட்புகுத்தி நீர் கொள்ளுதல்.

குல் — கோல். கோலுதல் = மொள்ளுதல். கோல் — (கோலகை)—கோரகை = அகப்பை, கோரகை — கோரிக்கை.

குள்—கொள். கொள்ளுதல் = முகத்தல்.

கொள் — கோள் — கோய் = கள்முகக்குங் கலம்.

நுள்—நொள். நொள்ளுதல் = முகத்தல்.

முள் — முழு — (முகு) — முக. முகத்தல் = மொள்ளுதல், மொண்டளத்தல். முக— முகவை.

முல்—(முழை)—மூழை—அகப்பை.

முள் — மொள். மொள் — மொண்டை —மொந்தை = கள் முகக்குங் கலம், மொந்தைபோன்ற தோற்கருவி. (இசை)

மொண்டை — மண்டை = நீர்முகக்குங் கலம், இரப் போர் கலம், அதுபோன்ற தலையோடு, தலையின் மேற்பகுதி, மண்டைபோன்ற தோற்கருவி (இசை).

### iv. முழுகுதல்

முழுகுதலாவது ஒரு பொருள், இன்னொன்றிற்குள் புகுந்து அமிழ்தல்.

உம்—அம்—அமிழ்—ஆழ். ஆழ்—ஆழம். ஆழ்—ஆழி.

குள்—குளி. குளித்தல் = உட்புகுதல், முழுகுதல், நீருட் புகுதல்.

"கொடியான் கூர்ங்கணை குளிப்ப"
(பு. வெ. 10 : 10, கொளு).

"எங்கு மருமத் திடைக் குளிப்ப" (பு. வெ. 7 : 23).

"கடற்படை குளிப்ப மண்டி" (புறம். 6).

முத்துக்குளித்தல் = முத்துக்களை நீருள் மூழ்கியெடுத்தல்.

முள் — (மள்) — மண். மண்ணுதல் = குளித்தல், முழுகுதல்,

"மூதூர் வாயிற் பனிக்கய மண்ணி" (புறம். 79)

மண்ணுமங்கலம் = அரசன் நீராட்டு விழா.

முள்—முழு—முழுகு—முழுக்கு. முழுகு—மூழ்கு.

முழுகு — (முழுங்கு) — முங்கு (த. வி.); முழுக்கு — முக்கு—(பி. வி.).

### v. விழுங்குதல்

விழுங்குதலாவது, ஓர் உணவுப்பொருளை முழுக்குதல் போல் திடுமென வாய்வழி உட்புகுத்துதல்.

குள்—குடி.

நுள்—நொள். நொள்ளுதல் = விழுங்குதல்.

நுள் — நுழு — (நுழுங்கு) — நுங்கு, நுங்குதல் = விழுங்குதல்.

நுங்கு—நொங்கு—நொக்கு. நொங்குதல் = விழுங்குதல். நொக்குதல் = உண்டு குறையச் செய்தல்.

புள்—பள்—(பரு)—பருகு.

முள்—முழு—முழுங்கு—விழுங்கு.

முழுங்கு—(முழுக்கு)—முடுக்கு = ஒருமுறை விழுங்கும் நீர் அளவு. முடுக்கு—மடக்கு.

விழுங்கு—(விழுக்கு)—விடுக்கு = மடக்கு.

முழுக்கு — முக்கு. முக்குதல் = ஒன்றை வாய்நிருள் முழுக்கித் தின்னுதல்.

"அவலை முக்கித்தின், எள்ளை நக்கித்தின்"

என்பது பழமொழி.

"பாசவன் முக்கித் தண்புனற் பாயும்" (புறம். 63).

முக்கு—மொக்கு. மொக்குதல் = வாய்நிருள் நிரம்ப முழுக்கித் தின்னுதல்.

vi. ஒளித்தல்

ஒளித்தலாவது ஒன்று இன்னொன்றுள் புகுந்து மறைதல்.

உள்—ஒள்—ஒளி.

குள்—குளி. குளித்தல் = மறைதல்.

"யானறிதல் அஞ்சிக் குளித்து" (கலித். 98).

புள்—புய். புய்தல் = மறைதல்.

"கோலப் பகற்களிறொன்றுகற் புய்ய"
(திவ். இயற். திருவிருத். 40).

புள்—பள்—படு—(பது)—பதுங்கு—பதுக்கு—பதுக்கம்.

## (க) துருவல் துறை

### துருவல்

துருவுதலாவது ஒன்று இன்னொன்றுட் புகுந்து ஊடுருவிச் செல்லுதல்.

உள்—உரு—உருவு.

உள்—(உடு)—ஊடு—ஊடை = ஊடுசெல்லும் இழை.

குள்—(குரு)—கோர்—கோ. கோர்வை — கோவை. கோர்த்தல் = நூலைத்துளையின் ஊடு உருவச் செய்தல்.

துள்—துளை. துளைத்தல் = துருவுதல்.

துள்—துரு—துருவு.

முல்—(மூல்)—மூலம் = வாயில், ஊடு.

ஓர் அடைப்பிடத்தின் ஊடு சென்று கடத்தல் எங்ஙனம் துருவுதல் எனப்படுமோ, அங்ஙனமே ஒரு திறப்பிடத்தின் ஊடுசென்று கடத்தலும் துருவுதல் எனப்படும்; ஒரு துளையூடு செல்லுதலும் ஒரு நாட்டூடு செல்லுதலும் துருவுதல் எனப்படுதல் காண்க.

## 4. ஈகாரச் சுட்டுப்படலம்

### (1) அண்மையியல்

முன்மையைக் குறித்தறகு முன்னோக்கிக் குவிந்த வாயிதழ், முன்மைக்குப் பிற்பட்ட அண்மையைக் குறித்தற்குப் பின்னோக்கு முகத்தால் ஈகாரத்தைத் தோற்றுவித்தது. அது அண்மைச் சுட்டாயிற்று.

**அண்மைச்சுட்டு**

பெயர்: ஈது—இது.

ஈன் = இவ்விடம், இவ்வுலகம்; ஈனோர் = இவர், இவ்வுலகத்தார்.

இல்—இஃது—இத்து.

இவ்—இவ↔இவை.

இவன், இவள், இவர்.

இகம் = இவ்வுலகம், இவ்விடம், ஞாலம்.

பெயரெச்சம்: ஈ—இ.

ஈன்—இன்—இன்ன.

ஈன்—ஈன = இந்த.

இது, இந்த.

வினையெச்சம்: ஈங்கு—இங்கு—இங்கா—இங்கை.

ஈங்கு—ஈங்கண்—ஈங்கன்—ஈங்கனம்;

ஈங்கன்—இங்கன்—இங்கனம்.

இங்கன்↔இங்ஙன்—இங்ஙனம்;

ஈண்டு.

இவண்.
இம்—இம்பு—இம்பர்.

வினையெச்சமும்
இடைச்சொல்லும் : இன்—இன்று. இன்—இன்னே;
இன்—இன்னும்—இதுவரையும்;
இன்—இனி. இன்னினி (அடுக்கு);
இன்—இன்னா.
இத — இதா — இதோ — இதோள் — இதோளி.
இந்தா—இந்தோ.

## (2) பின்மையியல்

முன்மைக்குப் பின்மையான அண்மையைக் குறித்தற்கு வாயிதழ் பிற்படுவதால், ஈகாரச்சுட்டு அண்மைக்கடுத்துப் பின்மையுணர்த்திற்று.

1. பின்மை (காலமும் இடமும்)

இன் — இனி = இனிமேல், பின்பு.

இன் — இன்னும் = இதற்குமேலும்.

பின்—பின்னம்—பின்னர். பின்—பின்னே.

பின்—பின்பு. பின்—பின்று—பிந்து. பின்—பிற்கு.

பின்—பிற்பாடு (பின் + பாடு).

பின்—பிற—பிறவு—பிறகு—பிறக்கு. பிறக்கிடுதல் = பின்னுக்குச் செல்லுதல்.

பிறக்கு — பிறங்கு — பிறங்கடை = பின்னால் வரும் உரிமையாளன் (வாரிசு).

பின் — பினம் — பிறம் — பிறம்பு; பிறம்பத்தங்கால் = பின்னங்கால்.

பிறம் —பிடம்—பிடர்—பிடரி = தலையின் பின்புறம்.

பிடம் — பிட்டம் = பின்புறம், பின்புறத்தின் கடை அல்லது அடிப்பகுதி (குண்டி).

பிட்டம் — புட்டம். பிட்டம் — பிட்டி — புட்டி = பறவையின் பின்புறம்.

பிறம் — புறம் — புறன். புறக்கடை = வீட்டின் பின் பக்கம்.

புறங்கூறுதல் = பின்னாற் பழித்தல். புறன்—(புரளி) —புறணி = புறங்கூற்று.

புறனே = பின்பு, பிந்தி. புறனண்டை = பின்புறம்.

பிறகு—புறகு = பின்பு.

## ii. மறுநிலை

இன்—இன்னும் = திரும்பவும், மேலும், வேறும்.

இன்னொன்று = வேறொன்று. இன்னொரு = வேறொரு, மற்ற.

இன் — ஏன். ஏனோர் = மற்றோர். ஏன் — ஏனை = மற்ற.

பின் = திரும்ப, வேறு. பின்னும் = திரும்பவும்.

பின்னும் பின்னும் = திரும்பத் திரும்ப.

பின்னொன்று = வேறொன்று. பின்னே யார்? = வேறு யார்?

பின—பிற—பிறிது. பிற—பிறகு = வேறு. பிறகு—பிறக்கு = வேறாக.

பிறம்—பிறன் = வேறொருவன், மற்றவன், அயலான்,

பிறம்—புறம்—புறம்பு = மற்றை.

## iii. முதுகு

முதுகு பின்புறமிருப்பதால் பின்மைப் பெயர் முதுகைக் குறித்தற்காயிற்று.

பின்—பிற்கு. பிறம்—பிறவு — பிறகு = முதுகு.

பிறகு—பிறக்கு = முதுகு.

பிறகு — புறகு. பிறக்கு — புறக்கு. புறக்கிடுதல் = புறங்காட்டுதல்.

பிறம் — புறம் — புறன். புறம் = முதுகு. புறம் — புறம்பு = முதுகு.

பிறம்—பிறன்—வெரிந் — வெந்—வென் = முதுகு.

பிறம்—பிடம்—பிட்டம் = முதுகு.

### iv. மேற்புறம்

விலங்குகட்கும் பறவைகட்கும் குப்புறப்படுத்திருக்கும் மாந்தனுக்கும் முதுகு மேற்புறமாயிருப்பதால், முதுகின் பெயர் மேற்புறத்தைக் குறித்தது.

புறம் = மேற்பக்கம், பக்கம்.

புறம் — புறன் —(புறனி)— புறணி = மேற்புறம்.

### v. வெளிப்புறம்

மடிக்கப்படும் அல்லது சுருட்டப்படும் பொருள்கட்கு முன்பக்கம் உட்புறமும் பின்பக்கம் வெளிப்புறமும் போன்றிருத்தலாலும், உயிரற்ற கனப்பொருள்கட்கு மேற்புறம் முழுதும் வெளிப்புறமாயிருத்தலாலும், மேற்புறத்தைக் குறிக்கும் புறம் என்னும் சொல் வெளிப்புறத்தையுங் குறித்தது.

புறம் = வெளி, வெளிப்பக்கம், புறப்பொருள்.

புறம் — புறவு — புறகு = வெளிப்புறம், புறம்பானவன். புறகு — புறக்கு.

புறம் — புறம்பு = வெளிப்புறம்.

புறம்பு — புறம்பர். புறப்படு—புறப்பாடு. புறப்படுதல் = வெளிவருதல்.

'உள்ளும் புறம்பும்' 'அகமும் புறமும்' என்னுந் தொடர்களால், புறம் என்னும் சொல் உட்பக்கத்திற்கு எதிரான வெளிப்பக்கத்தைக் குறிப்பது தெளிவாம். மூடின கையின் உட்புறமாயிருப்பது உள்ளங்கை அல்லது அகங்கை என்றும், அதன் வெளிப்புறமாயிருப்பது புறங்கை என்றும் கூறப்படுதல் காண்க.

புறம் = மருதநிலத்திற்குப் புறம்பான முல்லை, முல்லையடுத்த குறிஞ்சி.

புறம்—புறவு = முல்லை, குறிஞ்சி. புறம்—புறம்பு—புறம்பணை = முல்லை, குறிஞ்சி.

புறம்—புற = முல்லைநிலப் பறவை வகை. புற — புறா—புறவு—புறவம்.

பிட்டம்—பீட்டன் = புறம்பானவன்.

vi: பின்னிடல்

இள் — இளித்தல் = வாயிதழைப் பின்னுக்கிழுத்தல், வாயைத் திறந்து பல்லைக் காட்டல்.

இள்—இரி. இரிதல்=பின்னுக்கோடுதல், தோற்றோடுதல், ஓடுதல்,

இள்—இட. இடத்தல்=இலை பூ முதலியவற்றைப் பின்னுக்கிழுத் தொடித்தல்.

இள் — (இண்) — இணுங்கு. இணுங்குதல் = திருகிப் பின்னுக்கிழுத்தல், பின்னுக்கிழுத் தொடித்தல்.

இட — இடக்கு = பிற்செலவு: குதிரை இடக்குப் பண்ணுகிறது என்னும் வழக்கைக் காண்க.

இட—இடை: இடைதல்=பின்வாங்குதல்.

இடை—இடைஞ்சல்=பின்வாங்கச் செய்யும் தடை.

இட—இடறு. இடறுதல்=பின்னுக்குத் தள்ளுதல்.

## (3) இழுத்தலியல்

இயல்பாக இழுத்தலென்பது, முன்னாலுள்ள பொருளைப் பின்னுக்கு வலிந்து கொணர்தலாதலின், பின்மைக் கருத்தில் இழுத்தற் கருத்துத் தோன்றிற்று.

i. இழுப்பு

இள் – இளை – இளைப்பு. இளைத்தல்=மூச்சு வேகமாய் இழுத்தல்.

இள்—இழு—இழுப்பு. இழு—இழுவை,

இழு — இழை = இழுக்கப்பட்ட நூல். இழைத்தல் = நூல் இழைத்தல், உளியை இழுத்துத் தேய்த்தல். இழை—இழைப்பு. இழைப்புளி=இழைக்கும் உளி.

இள் — இரு — ஈர். ஈர்த்தல் = இழுத்தல், இழுத்தறுத்தல்.

ஈர்—ஈருள்=மூச்சிழுக்கும் உறுப்பாகிய ஈரல்.

ஈர்—ஈரல்.

ஈர் — ஈர்க்கு = அறுக்கும் அல்லது அறுக்கப்பட்ட சிம்பு.

ii. இழுப்புநோய்

இள்—இளை—இளைப்பு. இளை—ஈளை=காசம்.

இள்—இழு—இழுப்பு. இழு—இசு—இசிவு = சன்னி. இசித்தல்=நரம்பிழுத்தல்.

iii. எழுதுதல்

எழுத்து கோட்டாலமைவதாலும், முன்னிருந்து பின் அல்லது மேலிருந்து கீழ் இழுத்தே இயல்பாக நட்டுக் கோடு வரையப்படுவதாலும், இழுத்தற் கருத்தில் எழுதுதற் கருத்துத் தோன்றிற்று. கோடிழுத்தல் என்னும் வழக்கு இயல்பாகக் கோடு கீறும் திசையை உணர்த்தும்.

இல்–இலகு—இலக்கு=(எழுத்து, சொல், நூல்)

இலக்குதல்=இழுத்து வரைதல், வரைதல், எழுதுதல்.

"இரேகை யிலக்குக" (சைவச. பொது. 274.)

இலக்கு—இலக்கியம்=நூல், நூற்றொகுதி.

இலக்கு—இலக்கணம்=நூன்மொழி யொழுங்கு, அதைக் கூறும் நூல்.

இலக்கு—இலக்கி. இலக்கித்தல்=வரைதல்.

"இவ்வுருவு நெஞ்சென்னும் கிழியின் மேலிருந் திலக்கித்து" (சீவக. 180.)

இலக்குதல்=எழுதுதல், குறித்தல்.

இலக்கு=குறி, குறித்த இடம், இடம், குறிப்பொருள், நோக்கம்.

இலக்கு—இலக்கம்=எண்குறி, எண்.

இழு—இழுகு. இழுகுதல்=இழுத்துத் தடவுதல், தடவுதல்.

இழு—(இழுது)—எழுது—எழுத்து=வரைவு, ஓவியம், வரி, இலக்கியம்.

எழுதுதல்=இழுத்து வரைதல், வரைதல்.

ஆரியர் இந்தியாவிற்குட் புகுமுன்னரே, தமிழுக்கு இலக்கணம் வகுக்கப்பட்டிருந்ததனாலும், வேறெம் மொழியிலுமில்லாத பொருளிலக்கணம் தமிழுக்கிருத்தலாலும்,

"கண்ணுதற் பெருங் கடவுளுங் கழகமோ டமர்ந்து
பண்ணுறத் தெரிந்தாய்ந்தவிப் பசுந்தமிழ் ஏனை
மண்ணிடைச் சில இலக்கணவரம்பிலா மொழிபோல்
எண்ணிடைப்படக் கிடந்ததா எண்ணவும் படுமோ"

என்று பரஞ்சோதியார் கூறியதற்கேற்ப இலக்கண வரம்பிற் சிறந்த மொழி தமிழேயாதலாலும், இலக்கணத்தைத் தனிப்படச் சுட்ட வேறு தமிழ்ச் சொல்லின்மையாலும், இயல் என்னுஞ் சொல் ஒரு பொருளின் இயல்பையே குறித்தலாலும், இலக்கியத்தைக் குறிக்க இயல் என்னுஞ் சொற்கு இனமான தொன்றுமின்மையாலும், இலக்கணம் இலக்கியம் என்னும் சொற்கள் தூய தென்சொற்களேயென்று தெளிக.

லக்ஷண லக்ஷ்ய என்னும் வடசொற்கள், இலக்கண விலக்கியத்தைக் குறியாமல், குறி (அடையாளம்) என்னும் பொருளையும் அதன் வழிப்பொருள்களையுமே குறித்தலாலும்; வடமொழியில் இலக்கணத்தைக் குறிப்பது வ்யாகரணம் என்னும் சொல்லாதலாலும்; இலக்கணம் இலக்கியம் என்னுஞ் சொற்களின் பகுதியான இலக்கு என்னுஞ் சொற்கு அடிப் படையும் உயிர்நாடியுமான இகரம் வடசொற்களில் இன்மை யாலும்; அவை தென்சொற்கு மூலமன்மை யறிக.

இனி, குறியென்னும் பொருள் இருமொழிச் சொற்கட்கும் பொதுவாயிருத்தலாலும், தென்சொற்கள் இயற்சொற்களா யும் வடசொற்கள் திரிசொற்களாயு மிருப்பதாலும், வட சொற்கட்குத் தென்சொற்களே மூலம் என்பது பெறப்படும்.

எழுதுதல் என்னும் பொருளில், இலக்கு என்னும் தென்சொல் வடமொழியில் லிக் என்று திரியும்.

இலக்கு என்னும் சொல் மிகப் பழைமையானதாதலால், அதன் பகுதி இன்று இழுத்தற் கருத்தை வெளிப்படையாய் உணர்த்தவில்லை. குமரிநாடும் தொன்னூலும் பல பழஞ் சொற்களும் மறைந்து போனமையும் இதற்குக் காரணமாம்.

## 5. ஆகாரச் சுட்டுப்படலம்

முந்தியல் தமிழர் சேய்மையைக் குறித்தற்கு வாயை அகலத் திறந்தபோது, அது ஆகார வொலிக்கே ஏற்றதா யிருந்ததினால், அவ் வொலியைச் சேய்மைச் சுட்டாக்கினர்;

## சேய்மைச்சுட்டு

**பெயர் :**

ஆது—அது
ஆன் = அவ்விடம்.
அல் — அஃது—அத்து.
அவ் — அவ — அவை.
அவன், அவள், அவர்.

**பெயரெச்சம் :**

ஆ — அ.
ஆன்—ஆன = அந்த.
ஆன்—அன் — அன்ன.
அது.
அந்த.

**வினையெச்சம் :**

ஆங்கு—ஆங்கர் — ஞாங்கர்.
ஆங்கு — அங்கு— அங்கா — அங்கை.
ஆங்கு— ஆங்கண்— ஆங்கன்—ஆங்கனம்.
ஆங்கன்—அங்கன்— அங்கனம்.
அங்கன் — அங்ஙன்—அங்ஙனம்.
ஆண்டு.
அவண்.
அம்—அம்பு—அம்பர் = அங்கு.

**வினையெச்சமும் இடைச்சொல்லும் :**

அன் — அன்று.
அன் — அன்னா.
அத—அதா—அதோ — அதோள்—அதோளி.
அந்தா, அந்தோ.

சேய்மைக் கருத்தினின்று தோன்றக்கூடிய பிற கருத்துக்கள் நீக்கம் மறைவு முதலிய ஒரு சிலவே யாதலாலும், அவையெல்லாம் ஊகாரச் சுட்டுக் கருத்துக்களுள் ஒவ்வொரு வகையில் அடங்கிவிட்டமையாலும், ஆகாரச் சுட்டினின்று சேய்மை யொழிந்த வேறெக் கருத்தும் பற்றிய சொற்கள் தோன்றியில.

# முடிவுரை

இதுகாறுங் கூறியவற்றால், தமிழ் குமரி நாட்டில் பிற மொழிச் சார்பின்றித் தானே தோன்றி வளர்ந்த தொன் முதுமொழி யென்றும்; அது உணர்வொலி, ஒப்பொலி, குறியொலி, வாய்ச்செய்கையொலி, குழவி வளர்ப்பொலி, சுட்டொலி என்னும் அறுவகை நிலைக்களத்தினின்றும் எழுந்த சொற்களின் தொகுதியென்றும்; அந்நிலைக்களங்களுள் சுட்டொலி—அதனுள்ளும் முன்மைச்சுட்டு—மிகச் சிறந்ததென்றும்; தமிழ்ச் சொற்களுள் நூற்றுக்குத் தொண்ணூறு விழுக்காடு ஊகாரச்சுட்டினின்றே தோன்றியவை யென்றும், அறிந்துகொள்க.

இந்நூலிற் காட்டப்பட்டுள்ள நெறிமுறைகளெல்லாம் கலைமுறைப்பட்டவை யென்பதும், ஒழுங்கானவை யென்பதும், கீழ்வரும் மூவகை எடுத்துக்காட்டு வரிசைகளால் அறியலாகும்.

1. சொற்பொருட் காரணம்

பல சொற்களின் பொருட்காரணம் இந்நூலிற் கூறியுள்ள நெறிமுறைகளாலேயே அறிதல் ஒண்ணும்.

எ - டு:

பருந்து (பரந்து) = மிக வுயரப் பறக்கும் பறவையினம்.

கலுழன் = இருநிறங் கலந்த பறவையினம்.

கழுகு = உயரப் பறப்பவற்றுள் மிகப் பருத்த பறவையினம்.

அணில் = முதுகில் வரியுள்ள அரியுயிரி (rodent).

ஏம்—(ஏமை)—யாமை—ஆமை = பாதுகாப்பான ஓடுள்ள ஊருயிரி (reptile.)

கரட்டை = கரட்டுத் தோலுள்ள ஓணான்.

2. சொல்வடிவு வரலாறு

சில சொற்களின் வடிவு வந்த வரலாற்றையும் இந்நூல் நெறிமுறைகளே தெரிவிக்கும்.

எ - டு:

அள்—(அய்)—ஐ = கூர்மை, நுண்மை.
அய் — அயில் = கூர்மை.
தள் — (தய்)→தை. தைத்தல் = குத்துதல்.
தய்— தயிர் = பிரை குத்தப்பட்டுத் திரைந்த பால்.
வள்—(வய்)→வை = கூர்மை.

இங்ஙனம், ள்—ய் அல்லது ள→ய திரிபு பல யகர மெய்யீற்றுச் சொற்களின் வரலாறுணர்த்தும் திறவுகோலாகும். அய் என்னும் அசை ஐகாரப் புணரொலியாகக் கொள்ளப் பட்டது 'ஐ' என்னும் வரிவடிவெழுந்த பிற்காலத்ததாகும்.

## 3 சொன்முதல்

தோன்றுதல் முதல் துருவுதல் ஈறாகச் சொல்லப் பட்டுள்ள பற்பல பொருள்களையுங் குறிக்கும் ஊகாரச் சுட்டடிச் சொற்கள், பெரும்பாலும் உகர முதலவாகவும், உகர மோனை முதலவாகவும், சிறுபான்மை அதன் திரிபான அகர இகர எகர முதலவாகவும், இருக்கும்.

எ - டு:

| | தோன்றுதல் | முற்படுதல் (அல்லது) | உயர்தல் | நெருங்குதல் | தொடுதல் (பொருந்துதல்) |
|---|---|---|---|---|---|
| உல்— | உரு | உந்து | உக | உறு | உறு |
| குல்— | குரு | குதி | குதி | (குட்டு)-கிட்டு | (குள்)-கள் |
| சுல்— | சிலிர் | (சுர)-சர(சரசர) | சுவர் | (சுறு)-செறு | சுவண்டு |
| துல்— | துளிர் | துர | துங்கம் | துன் | துன் |
| நுல்— | நனை | நுந்து | நூங்கு-நூக்கம் | (நுள்)-நள் | (நுள்)-நள் |
| புல்— | பூ | புடை | புகு | பொதுள் | புல் |
| முல்— | முனை | முன்னு | முகடு | முட்டு | முட்டு |

| | வளைதல் (அல்லது) | கூடுதல் | துளைத்தல் | துருவுதல் |
|---|---|---|---|---|
| உல்— | உலா | உறு | உளு | உருவு |
| குல்— | குலா | குழு | குடை | கோர் |
| சுல்— | சுலா | சோலை | சூல் | சுருங்கை |
| துல்— | துறடு | துறு | துளை | துருவு |
| நுல்— | நுடம் | (நுர)-நிர | நொள்ளை | நூழை |
| புல்— | புரி | பொலி | புழு | பூர் |
| முல்— | முறி | முள்கு | முழை | மூலம் |

காலக் கடப்பினாலும் குமரிநாட்டு மறைவாலும் தொன்னூல் அழிவாலும் எண்ணிறந்த சொற்கள் இறந்து பட்டமையால், ஊகாரச் சுட்டடிச் சொற்களின் முதலை விலக்கின்றி எடுத்துக்காட்ட இயலவில்லை. ஆயினும், கூர்மதியர் இந்நூலிற் கூறப்பட்டுள்ள நெறிமுறைகளைக் கடைப்பிடித்து ஏறத்தாழ இதுபோதுள்ள சுட்டடிச் சொற்க ளெல்லாவற்றிற்கும் மூலங் காணவும், அவற்றுள் எண்பது விழுக்காட்டிற்குக் குறையாதவற்றிற்குப் பொருட்காரணங் கூறவும், இயலும்.

சில ஊகாரச் சுட்டுவழி யடிகள், அடி நிலையிலேயே உ—அ, உ—இ, உ—எ விதிப்படி திரிந்து விடுவதால், உகர வழித் தொடர்பு பல சொற்களில் தெளிவாய்த் தெரிவதில்லை. உல் சுல் நுல் என்னும் அடிகள் பெரும்பாலும் இம் முறையில் திரிந்துள்ளன. எனினும், அவற்றின் கொடிவழியுள்ளும், இடையிடை உகர முதற் சொற்கள் நின்று முன்னும் பின்னும் பிறமுதலவாகத் திரிந்து நிற்பவற்றை இணைத்துக் கொண்டிருப்பது கவனிக்கத்தக்கது.

இரண்டொரு கருத்துக்கள் எதிர்கால வாராய்ச்சியால் இடம் மாறலாம். எடுத்துக்காட்டாக, தோன்றற் கருத்து வழிப்பட்டதாகக் காட்டப்பட்டுள்ள இளமைக் கருத்து, சிறுமைக் கருத்து வழிப்பட்டதாக ஒருகால் துணியப்பெறலாம். ஆயின், பெரும்பாற் கருத்துக்கள் இடமும் தொடர்பும் ஒரு போதும் மாறா.

தமிழ்ச் சொற்கள் தோன்றியதற்குக் காரணமான எல்லாக் கருத்துக்களும் இங்குக் கூறப்படவில்லை. தமிழ் எங்ஙனம் தானே தோன்றி வளர்ந்தது என்னும் உண்மை படிப்பார்க்குப் புலனாகும் அளவே இங்குக் கூறப்பட்டுள்ளது. எல்லாக் கருத்துக்களையும் இசைத்துக் கூறின் அவை ஒரு பேரகராதியாகப் பரந்து விரியுமாதலின், பெருவாரிச் சொற் கருத்துக்களன்றிச் சிறுவாரிச் சொற் கருத்துக்கள் பெரும்பாலும் இங்குக் கூறப்பட்டில. கூறப்படாத சிறுவாரிச் சொற் கருத்துக்கட்குக் கீழ்வருவன எடுத்துக்காட்டாம்.

### 1. அயன்மை

அண்மைக் கருத்தினின்று அயன்மைக் கருத்துப் பிறக்கும்.

உள்—அள்—அண்—அண்டு—அண்டை.

அள்—(அய்)—அயல்—அசல்.

அயல் = அண்மை, அடுத்தது, வேறு.

அயலார் = பக்கத்தார், பிறர், தொடர்பற்றவர்.

அண்டை யயல் = அக்கம் பக்கம்.

அயல் வீடு = பக்கத்துவீடு, அடுத்தவீடு.

அயலூர் = பக்கத்தூர், அடுத்தவூர், வேற்றூர்.

அயல்நாடு = பக்கத்துநாடு, வெளிநாடு.

உல்—அல்—அன்—அன்னியம்—அன்ய(வ).

இட அண்மையும் ஒரோவிடத்து இனவுறவைக் காட்டும். ஆயின், பல குடும்பத்தார் அல்லது வகுப்பார் கூடி வாழும் ஓர் ஊரில், ஒரு வீட்டிற்குப் பக்கத்து வீட்டில் உறவினரும் இருக்கலாம், நொதுமலர் அல்லது பகைவரும் இருக்கலாம். பக்கத்து வீட்டார் உறவினரல்லாதபோது அடுத்தவீட்டு நிலைகூட அயன்மை யுணர்த்தும். இனி, உறவினரல்லாதார் வாழும் பக்கத்து ஊரையும் பக்கத்து நாட்டையும் பற்றிச் சொல்ல வேண்டுவதில்லை. இடத்தின் சேய்மைக்குத் தக்கவாறு அயன்மை மிகும்.

### ii. அன்மை :

அண்மைக் கருத்தினின்றே அன்மைக் கருத்தும் பிறந்துள்ளது.

உல்—அல். அல்லுதல் = நெருங்குதல், பின்னுதல், முடைதல்.

அல்—அல்லது = அணுகியது, அடுத்தது, இன்னொன்று (வேறு), அல்லாதது, அல்லாவிட்டால், தவிர.

அல்வழி, அஃறிணை, அன்மொழித்தொகை, அல்பொருள், அல்லகண்டம், அல்லகுறி முதலிய தொடர்மொழிகளில், அன்மைச்சொல் வேறாதற்பொருளை யுணர்த்துதல் காண்க.

அல்லது (அல்வினை) = நல்வினை யல்லாதது, நல்வினையின் வேறானது, தீவினை.

உழுந்தல்லதில்லை = உழுந்தின் வேறானதில்லை.

கல்வி அல்லது செல்வம் = கல்வி அல்லாதது செல்வம் = கல்வி அல்லாக்கால் செல்வம்.

ஒ. நோ. இல்லது—இல்லாது = இல்லாமல்.

  

அல்லது என்னும் ஒன்றன்பால் குறிப்புவினை முற்றுச் சொல், அன்மையுருபான பின், பிற பால்களையும் உணர்த்துவது வழுவமைதியாம்.

எ-டு: தந்தை அல்லது தமையன்.

முதற்காலத்தில் ஒன்றன்பாற் சொல்லாகவே யிருந்த உண்டு (உள்ளது) என்னும் குறிப்பு வினைமுற்று, இன்று இருதிணையைம்பால் மூவிடப் பொதுவினையாய் வழங்குதலை நோக்குக. உள் + அது = உள்ளது. உள் + (அ)து = உண்டு.

அல் + அது = அல்லது. அல் + (அ)து = அன்று.

iii. தொகுதல் (மறைதல்)

தொங்கற் கருத்தினின்று தொகுதற் கருத்துத் தோன்றும். இருசொற்கிடையில் வேறொரு சொல் மறைந்து நிற்பது தொங்கிநிற்பது போன்றது.

தொகு—தொகை—தோகை = தொங்கும் கரும்பு சோளம் முதலியவற்றின் தாள், தொங்கும் மயிற்பீலி.

தொகுதல் = தொங்குதல், குறைதல், மறைதல்.

உருபு தொகுதல் = உருபு மறைதல். தொக்கு நிற்றல் = மறைந்து நிற்றல்.

தொகு—தோகை.

வேற்றுமைத்தொகை வினைத்தொகை முதலிய ஐவகைத் தொகைகளையும் நோக்குக.

மறைதலைக் குறிக்கும் தொகு என்னும் சொல்லும், குழுமுதலைக் குறிக்கும் தொகு என்னும் சொல்லும், வெவ்வேறாம். முன்னது மேற்செலவியலையும் பின்னது கூடலியலையும் சார்ந்தனவென அறிக.

பலசொற்கட்குப் பல பொருளுண்டு. அவை, முதற் பொருளும் வழிப்பொருளும் சார்புப் பொருளுமாக, முறையே ஒன்றையொன்று பிறப்பித்துக் கோவைப்பட்டு நிற்பன. அவற்றுள் எப்பொருளிலேனும் அவற்றை ஆளலாம். ஆளப் பட்ட பொருள் முதலா வழியா சார்பா என்பது மொழி யாராய்ச்சியாளருக்குத்தான் தெரியும். பிறர் அதனை அறியார்; அது குற்றமன்று. ஆயின், ஓர் ஆசிரியன் ஒரு

சொல்லை ஒருபொருளில் ஆண்டவிடத்து, அதுவே அதற்குப் பொருளென வலிப்பதே குற்றமாம்.

எ-டு:

தூங்குதல்=தொங்குதல், தொங்கும் ஏணை தொட்டில் மஞ்சம் முதலியவற்றில் கண்வளர்தல், கண்வளர்தல், சோம்புதல், காலந் தாழ்த்தல், நீட்டித்துச் செய்தல்.

ஊக்கமில்லாது சோர்வடைந்திருப்பவனை, உறங்கிப் போயிருக்கிறான் அல்லது தூங்கிப் போயிருக்கிறான் என்பர். இஃதோர் அணிவகையான வழக்காம்.

''தூங்காமை கல்வி துணிவுடைமை யிம்மூன்றும்
நீங்கா நிலனாள் பவற்கு''

என்னுங் குறளில் (383) காலந்தாழ்த்தற் பொருளிலும்,

''தூங்குக தூங்கிச் செயற்பால தூங்கற்க
தூங்காது செய்யும் வினை''

என்னுங் குறளில் (672) நீட்டித்துச் செய்தற் பொருளிலும், தூங்கற்சொல் வந்துளது. இதன் அணியியன்மையை அறியாதார், திருக்குறளின் பழைமைபற்றி அந்நூற்பொருளே முந்தியதென மயங்குவர்.

சிலர், ஊகாரச் சுட்டுப்படலத்திற் காட்டப்பட்டுள்ள சொற்களெல்லாம் முன்மைச்சுட்டு வழிப்பட்டவாயின், ஏன் அவை அக்கருத்தை உணர்த்தவில்லையென வினவலாம். அவையெல்லாம் முன்மைச்சுட்டு வழிப்பட்ட வாயினும், வெவ்வேறு கருத்திற்குத் தாண்டி அவ்வேறு பட்ட கருத்துக் களையே முதன்மையாய் உணர்த்துவதால், அவற்றில் முன்மைச்சுட்டுக் கருத்து முனைந்து தோன்றுவதில்லை. இன் (இன்னொரு), இன்னும், இனி, இத்துணைப் போல (இத்தினிப்போல) முதலிய சொற் சொற்றொடர்கள் அண்மைச் சுட்டையே அடிப்படையாகக் கொண்டிருப்பினும், அச்சுட்டு அவற்றில் விழிப்பத் தோன்றுகின்றிலது. 'கடலன்ன செல்வர்' என்பதில், அன்ன என்னும் சொல் சேய்மைச் சுட்டடியைத் தாங்கி நிற்பினும், அங்சுட்டுப்பொருள் அதில் வெளிப்பட்டுத் தோன்றுவதில்லை. இங்ஙனம் சுட்டுச் சொற் களிலேயே சுட்டுப்பொருள் கரந்து நிற்குமாயின், சுட்டினின்றும் வேறுபட்ட கருத்துச் சொற்களில், அது எங்ஙனம் விளங்கித் தோன்றும்? கருத்துத் திரியத்திரியச் சுட்டும் கரந்துகொண்டே

செல்லும், ஆயினும், அங்காத்தலாற் பிறக்கும் அகரம் எங்ஙனம் வாய்திறப்பொலிகளிலெல்லாம் நுண்ணிதாய்க் கலந்து நிற்குமோ, அங்ஙனமே முன்மைச்சுட்டுக் கருத்தும் அதன் வழிப்பட்ட பிறகருத்துக்களிலெல்லாம் நுண்ணிதாய்க் கலந்து நிற்குமென்க.

இனி, ஊகாரச்சுட்டினின்று உல் குல் சுல் முதலிய அடிகள் பிறந்த வகையைப்பற்றியும், சிலர்க்கு ஐயமெழலாம். முதலில் நெடிலாகவேயிருந்த மூவகைச் சுட்டுக்களும், பின்பு அகச்சுட்டாகவும் புறச்சுட்டாகவும் சொல்லுறுப்பான போது, குறுகியும் வழங்கின. சுட்டு வழிப்பட்ட பலகருத்துக்களையும் உணர்த்த வேண்டுமாயின், சுட்டடியினின்று பல சொற்கள் திரியவேண்டும். அதற்கு, ஓரெழுத்துச்சொல்லான சுட்டுயிர்கள் மெய்யெழுத்துக்களொடு சேர்தல் இன்றியமையாதது. அச் சேர்க்கை முன்னும் பின்னும் நிகழலாம். முற்சேர்க்கையினும் பிற்சேர்க்கையே சொற்பெருக்கத்திற் கேதுவானது. வல்லின மெய்யீற்றைப் பலுக்குதல் முந்தியல் தமிழர் நாவிற்கு எளிதாயிராமையால், மெல்லினமெய்யீறும் இடையின மெய்யீறுமே தெரிந்து கொள்ளப் பெற்றன. மெல்லின மெய்களுள் வாய்மூடிய நிலையிலேயே மூக்குவழிக் காற்றாற் பிறப்பிக்கும் பகரமும், இடையின மெய்களுள் நாவை நுனியண்ணத்திலும் அண்பல்லிலும் பொருத்திப் பிறப்பிக்கும் லகரமும், குறைந்த முயற்சியுடைய வாயிருத்தலின்; அவையே முதலாவது ஆளப்பெற்றன. அவ்விரண்டனுள்ளும் எளிய முயற்தியுடையது மகரமேயாயினும், சொல்வளர்ச்சிக்கேது வாய்ப் பலவெழுத்துக்களாகத் திரியக்கூடியது லகரமே யாதலின், அதுவே பெரும்பால் வேர்ச்சொல்லீறாகக் கொள்ளப்பெற்றது.

எ - டு

உம்

உம்—உம்பு, உந்து—உது—உக, உது—உடு

உம்—உவ்—உவு—உகு—உங்கு, உவு—உபு

உம்—உன்—உல்

உல்

உல்—உலு—உது—உந்து—உஞ்சு—உச

உல்—உன்—உம், உன்—உன்று

உல்—உர்—உரு—உறு

உல்—உள்—உளு—உசு—உது

உள்—உழ்—உழு—உடு, உழு—உகு

உள்—உர்—உரு—உறு

உள்—உண்டு

இனி, மகரமெய் ம்—ன்—ல் முறையில் லகரமாகவுந் திரிதலால், முதலாவது மகரவிறாகவேயிருந்த வேர்ச்சொல் பின்னர் லகரவீறாகத் திரிந்ததெனலுமாம். உல் என்னும் அடி எல்லாச்சொற்களையும் பிறப்பித்தற்குப் போதிய தாயிராமையின், மேற்கொண்டும் சொற்களை அறுமடங்கு பெருக்குதற்கு மொழிமுத லெழுத்துக்களோடு கூடி, குல் சுல் துல் நுல் புல் முல் என அறுவேறடிகளைத் தோற்றுவித்ததென்க.

———

# பின்னிணைப்பு

## 'அம்' என்னும் அடிச்சொல்

'உம்' என்னும் அடியின் திரிபான 'அம்' என்பதினின்று திரிந்துள்ள சொற்களுட் பல, இந்நூலிற் காட்டப்படாத பிறசொற்கட்கும் மூலங்காணும் வழியை எடுத்துக்காட்டும் முகமாக, இங்கு தரப்படுகின்றன.

### 1. மேற்செலவியல்

அம்பகம் = எழுச்சி.

அம்பரம் = உம்பரம்.

### 2. நெருங்கலியல்

(க) நெருங்கல் துறை.

அமலுதல் = நெருங்குதல். அமர்தல் = நெருங்குதல்.

(உ) ஒடுங்கல் துறை

அம்மை = அடிநிமிராச் செய்யுள் நூல்.

அமர்—அமரிக்கை. அமை—அமைதி.

அமுங்குதல் = ஒடுங்குதல். அமுக்குதல் = நெருக்குதல், ஒடுக்குதல். அமுக்கு—அமுக்கம். அமளி = படுக்கை.

### 3. கூடலியல்

(க) கூடல்துறை

அம்—அம்பு—அம்பல் — அம்பலம் = கூட்டம், மன்று, அவை.

அமர்தல் = பொருந்துதல்.

அமலுதல் = நிறைதல்.

அமலை = மிகுதி. அமளி = மிகுதி.

அமரல் = பொலிவு.

(உ) குவிதல் துறை

அம்பல் = குவிதல், குவிந்த அரும்பு, அரும்பு போல் அடக்கமான பழிச்சொல். அம்பல் — ஆம்பல் = பகலிற் குவியும் குமுதம்.

(ங) கலித்தல் துறை

அமர் = போர். அமர்த்தல் = போர் செய்தல், மாறுபடுதல்.

அமர்தல் = பொருந்துதல், விரும்புதல், அன்பு கூர்தல்.

(ச) கலங்கல் துறை

அமடுதல் = மயங்குதல்; அமட்டுதல் = மயக்குதல், அச்சுறுத்துதல்.

(ரு) பொருத்தல் துறை

அம்பர் = பிசின். அமர்தல் = பொருந்துதல், இருத்தல்; அமடுதல் = சிக்குதல். அமைதல் = பொருந்துதல், போதியதாதல், ஏற்படுதல், காரியம் முடிதல். அமைத்தல் = பொருத்துதல், சேர்த்தல், பொருந்துமென ஒப்புக்கொள்ளுதல், ஆயத்தஞ்செய்தல், ஒழுங்கு பண்ணுதல், ஏற்படுத்தல், காரியங்களை முடித்தல்;

அமை — அமைச்சு = நாட்டுக்காரியங்களை அல்லது அரசியல் வினைகளை அமைத்தல், அங்ஙனம் அமைக்கும் மந்திரி;

அமைச்சு—அமைச்சன்;

அம்மை = அமைதி. அம்—அமை—அமைதி = அமைப்பு.

அமை—அமையம் = பொருந்தும் நேரம், ஒ. நோ; நேர்—நேரம். அமையம்—அமயம் = சமையம்.

(சு) மூடல் துறை

அம்முதல் = மறைத்தல், மூடுதல்;

(எ) ஒன்றல் துறை

அமர்தல் = பொருந்துதல், ஒத்தல்; அமர என்பது ஓர் உவமவுருபு.

(ழ) உறழ்தல் துறை

அம்மி = அமுக்கித் தேய்த்து அரைக்குங் கல்.

(கூ) திரளல் துறை

அமலை = திரட்சி, சோற்றுத்திரளை.

அமை = கெட்டி மூங்கில்.

அமளி = ஆரவாரம், பேரொலி.

## 4. வளைதலியல்

(க) வளைதல் துறை

(திருப்புதல்) அமடுதல் = புரள்தல். அமட்டுதல் = புரட்டுதல்.

(உ) வட்டத்துறை

அம்பு = வளையல். அம்பணம் — வட்டமான ஆமை.

ஆம்பி = வட்டமான காளான். அம் = நிலத்தைச் சூழ்ந்த நீர் (கடல்), நீர், நீரால் ஏற்படும் அழகு.

அம்—அம்பு = கடல், நீர். அம்பு—அம்பணம் = நீர், நீருள்ள வாழை. அம்—ஆம் = நீர்.

அம்பு = கதிரவனைச்சுற்றும் அல்லது வட்டமான உலகம்.

அமர் = நகரைச்சூழ்ந்த கோட்டைமதில்.

## 5. துளைத்தலியல்

(க) துளைத்தல் துறை

அம்பு = உட்டுளையுள்ள மூங்கில்.

அம்பணம் = மரக்கால், நீர்விழுங் குழாய், யாழ்.

அம்பணவர் = யாழ்ப்பாணர், பாணர்.

அம்பணத்தி = மரக்காற் கூத்தாடிய காளி.

அம்பி = தோணி.

ஆம்பி = நீர்ச்சால் (பன்றிப்பத்தர்).

(உ) புகுதல் துறை

அமிழ்தல் = முழுகுதல். (அமிழ்—ஆழ்—ஆழி.)

அமுங்குதல் = உள்ளழுந்துதல். அமுக்குதல் = அமிழ்த்துதல், உள்ளழுத்துதல், உண்ணுதல்.

சோற்றை அமுக்குகிறான் என்பது கொச்சை வழக்கு.

அம்மம் = குழந்தையுணவு.

அம்மு = சோறு.

அமுது = சோறு, நீர், பால். அமுது—அமுதம்.

அமிழ்து = பால். அமிழ்து—அமிழ்தம் = உணவு (மணி. 28, 116).